*அனைத்திந்திய நூல் வரிசை*

# கங்கைத்தாய்

*இந்தி மூலம்*

**ஸ்ரீ பைரவ் பிரசாத் குப்தா**

*தமிழில்*

**திருமதி சரஸ்வதி ராம்நாத்**



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

# முன்னுரை

விடுதலைக்குப் பின்னர் இந்தி மொழி நாவல்களில் புதிய அலை வீசியது. கிராமங்களின்பால் ஏற்பட்ட புதிய விழிப்புணர்வும், கண்ணோட்டமும் இதன் அடித்தளமாக இருந்தது. விடுதலைப் போராட்டத்தின் ஒரு கூறாக இந்த வளர்ச்சி அமைந்தது என்றும் கூறலாம். ஏனெனில் காந்தி அடிகள் துவக்க காலத்திலிருந்தே, இந்திய கிராமங்கள்தான் இந்நாட்டின் இதயம் என்ற கருத்தை வலியுறுத்தி வந்துள்ளது மட்டுமின்றி, தனது போராட்டத்தையும் அங்கிருந்துதான் துவங்கினார். நாவல் இலக்கியத்தைப் பொறுத்த வரையில் பிரேம் சந்த் இப்பரம்பரையின் முன்னோடியாக இருந்தார்.

ஆனால் ஒவ்வொரு புதிய மாற்றமும் கிராமங்களை ஒன்றுபோல், சம நோக்குடன், பொதுமைப்படுத்தி, அதனைத் தனித்ததொரு அம்சமாகப் பாராது, ஏதேனுமொரு வட்டாரச் சூழலை நிலைக் களனாகக் கொண்டு, அதன் சாதி முறைகள், மனித இயல்புகள் மற்றும் பொருளாதாரப் போராட்டங்களின் போக்குகளை அலசி ஆராய்வதைத் தனது சிறப்பம்சமாகக் கொண்டிருந்தது. இதனைப் படைப்பிலக்கியத்தில் ஏற்பட்ட சமூகவியல் பார்வை எனக் கூறலாம்.

இந்திமொழி நாவல்களில் புதுமைக் கருத்துக்களுடன் கூடவே, மரபுகளிலிருந்து வேறுபடுவதும், அவற்றைப் புறக் கணிப்பதும், மறுப்பதுமான ஒரு போக்கும் இணையாகவே வளர்ந்து கருத்துப் புரட்சிக்கு வித்திட்டது எனலாம். ஆனால் இது இயல்பாகவே நகரங்களைத் தனது நிலைக்களனாகக் கொண்டிருந்தது.

*இதனால் இந்திய நாவல்களை, கிராமங்கள், வட்டாரச் சூழல்களைத் தனது பின்புலமாகக் கொண்டிருந்த நாவல்கள் மூலமாகவாகவே இனம் கண்டு கொள்ள வேண்டிய தாயிற்று. 'கங்கைத்தாய்' இப்பரம்பரையின் துவக்ககாலப் படைப்பாகும்.*

*இந்நாவலின் தலைப்பிலிருந்து தெளிவாகப் புலப்படு வதுபோல், ஆசிரியர், இந்தியப் பரம்பரையை, தொன்மை யான காலத்திலிருந்து இன்றுவரை மக்களது வாழ்விற்கு இடைவிடாது என்றென்றும், செழுமையையும், வளமையை யும் அளித்து வரும் வற்றாத நீர்ப்பெருக்கின் உருவத் தில்தான் காண்கிறார். இந்நோக்கின்படி 'கங்கைத் தாய்' ஒரு குறியீட்டுத் தலைப்பாக அமைந்துள்ளது. இதன்படி, இந் நாவலில் 'கங்கை'யை, ஒரு 'தொன்மம்' என்பதைக் காட்டிலும், விரிந்து பரந்ததொரு சூழலில் ஆசிரியர் நம் முன்னே வைத்துள்ளார். அதோடு இந்த தொன்மத்திற்கு இலக்கியப் பூர்வமானதொரு புதிய விளக்கமும் அளிக் கின்றார். இந்நாவலே இவ்விளக்கத்தினுடைய கலாபூர்வ மான படைப்பின் வீச்சுத்தான். இதில் 'கங்கை'தான் இந்நாவலின் மையம். இதன் முக்கியப் பாத்திரம். எனினும் 'கங்கை'யை பிரதான பாத்திரமாக்கி புராணக் கதைகளில் வருவதுபோல் உருவகப்படுத்தவில்லை என்பதும் குறிப் பிடத்தக்கது. இதற்கு மாறாக சாசுவதமான, உண்மையான தொரு நிகழ்வில் இது பொருத்திக் காட்டப்படுகின்றது. வெள்ளம் பெருக்கெடுத்து வரும் பொழுதெல்லாம், அது பேரழிவை ஏற்படுத்துகிறது. அதே போல், தனது கரையோரப் பிரதேசங்களுக்கு அளவற்ற வளமையையும், செழுமையையும் வாரி வழங்கு கின்றது.*

*இக்கதையில் சிறப்பான இடத்தை வகிக்கும் பாத்திரம் 'மட்டுரூ'. இவனது வாழ்க்கையுடன் இணைந்துள்ள உண்மை கள், நிகழ்வுகள், இதனையே சுட்டிக் காட்டுகின்றன. வட்டாரச் சூழலின் சிறப்புடன் கூடவே, 'கங்கை'யுடன் இணைந்துள்ள இவனது வாழ்வும் இந்நாவலின் மற்றொரு சிறப்பாகும். இதே பொருளில்தான் 'கங்கை'–'தாய்' ஆகின்*

றாள். நாவலாசிரியர் மிகுந்த கவனத்துடன் கதையின் இந்த அம்சத்தை, ஆவேசமிகுந்த உணர்ச்சிக் கொந்தளிப்பி லிருந்து தவிர்க்க முயன்றுள்ளார்.

'கங்கை' இந்நாவலில் ''நீர்'' மட்டுமல்ல; ''மண்ணும்'' கூட. இதனால் 'மட்டுரூ'விற்குக் கங்கையிடம் எத்தனை பற்றுள் ளதோ, அத்தனை, அதன் கரைப்பிரதேசத்து மண்ணின் பாலும் உள்ளது.

இன்றைய யுகத்து மேலை நாட்டு நாவல்களிலிருந்து இங்கு இதன் பார்வை வேறுபடுகின்றது. அதாவது, 'மனிதன் இயற்கைக்கு எதிரானவன் அல்ல, ஏனெனில் அவன்தான் அதன் இருத்தலுக்கு, ஆதாரத்திற்கு இன்றி யமையாத மூல ஊற்று'. நாவலாசிரியர் அடிக்கடி, கங்கைக் கரையோரத்து பிரதேசத்தின் நிலம், நீர், மண், காற்றை வருணிப்பது மிகையான கற்பனை வயப்பட்டு அல்ல. மாறாக, கதை நிகழும் நிகழ்களத்தில் மக்களது வாழ்க் கைக்கும் இயற்கையின் சூழலுக்குமிடையே நிலவி வரும் இயல்பானதொரு நெருக்கமான உறவை, பற்றுதலை, அவர்களின் வாழ்க்கை முறையிலும், எண்ணங்களிலும் உணர்விலும் அது விளைவிக்கும் மறைமுகமான பாதிப்பை, இயற்கை எவ்வாறு அவர்களது வாழ்க்கை முறைகளை நிச்சயிக்கிறது என்பதையுமே சுட்டிக் காட்டு கிறார்.

'கங்கைத்தாய்' நாவலின் கதை தனது சிறியதொரு உருவ அமைப்பினிடையே, இரண்டு, மூன்று தளங்களிலே இயங்குகிறது. இந்நாவலின் ஒரு இலட்சியம், சமுதாயத்தின் பழமையான சம்பிரதாயங்கள், மரபுகளுக்கெதிராகப் போர்க் கொடி உயர்த்துவதாகும். இதனை, கோபி, அவனது அண்ணி, மற்றும் குடும்பத்தினர் மூலமாக வெளிப்படுத்தி யுள்ளார் ஆசிரியர். எந்தவொரு படைப்பாசிரியரும் ஏதேனும் ஒரு கிராமத்தை, தனது கதையின் நிகழ் களமாக்கிக் கொள்ள முற்படும்போது, ஏதேனும் ஒரு குடும்பத்தை இதற்கு மையமாகக் கொள்வது இன்றி யமையாததாகி விடுகிறது. பரம்பரையான சம்பிரதாய மரபு

களில் கட்டுப்பட்டிருக்கும், கோபியின் க்ஷத்தரியக் குடும்பத்தில் ஒருபுறம் குடும்பம் உடைவது மட்டுமல்ல, சம்பிரதாய கட்டுக்கோப்பும், தளைகளும் கூட உடைபடுகின்றன. நாவலாசிரியர் முற்போக்கு சிந்தனையின் ஆதரவாளராக இருப்பதால், இக்கருத்துக்கள் இந்நாவலின் துவக்கத்திலிருந்து இறுதி வரை உள்ளூற்றாகப் பெருகி வந்துள்ளது. இத்துடன் ஆசிரியர், நெஞ்சைத் தொடும் ஒரு காதல் கதையையும் இவ்வட்டார நாவலின் நீரோட்டத்துடன் இணைத்துள்ளார். இத்துடன் ஆசிரியர், நிலப் பிரபுத்துவக் குடும்பம், அதன் அமைப்பு, அதன் சரிவு ஆகியவற்றையும் காட்ட வேண்டியுள்ளது. எந்தவொரு அமைப்பும் உடைந்து, தகரும்போது, அச்சுறுத்தல், பயம், துன்பங்களின்றி நிகழ்வது சாத்தியமல்ல. இந்நாவலில், வேதனைகள் நிரம்பிய, துயரமான வாழ்வின் கதையும் உள்ளது. இந் நாவலாசிரியர், எதற்கும் அஞ்சாததொரு புரட்சியின் மூலம் இதற்கொரு விடிவையும் அளித்துள்ளார்.

நாவலாசிரியரின் இலட்சியம் இக் 'கிராமிய சூழலின்' புகழ் பாடுவதல்ல. இதனால்தான் இவ்வட்டாரத்து மக்களை அச்சமற்றவர்களாக, தன்னிச்சையான போக்குடையவர்களாக, வலிமையுள்ளவர்களாக சித்திரித்துள்ளவர், அவர்கள் மனத்தளவில் எத்தகைய பிற்போக்கானவர்கள் என்பதையும் காட்டியுள்ளார். அவர்களின் எளிமை முட்டாள்தனத்தின் எல்லை வரையில் சென்று விடுகிறது. அவர்களுக்கு ஏற்படும் பல்வேறு இன்னல்கள், இம்மூடத்தனத்தின் காரணமாய் அவர்களே வலிய அழைத்துக் கொள்பவைகள்தான். "இவர்கள் எத்தனை அச்சமற்றவர்களாய், சுதந்திரமாய், வலிமை மிக்கவர்களாய் இருக்கின்றனரோ, அத்தனைக்கத்தனை அடிமுட்டாள்கள். சின்னஞ்சிறு அற்ப விஷயத்திற்குக் கூடத் தடியைத் தூக்கி விடுவது, கொலை செய்வது, அடிப்பது, பரஸ்பரம் சண்டை சச்சரவிடுவது விளைந்த பயிரை நாசம் செய்வது, நெற்களஞ்சியத்திற்குத் தீ வைப்பது, யாரையேனும் சூறையாடுவது போன்றவை தினசரி நிகழும் சம்பவங்கள்" (பக்கம் 95)

கிராமங்களில் புதிய விழிப்புணர்வை ஏற்படுத்துவதுடன் கூடவே, அதிலுள்ள பிற்போக்குத்தனமான எண்ணங் களுக்கு எதிரான எதிர்ப்புணர்வை உணர்த்துவதும் நாவ லில் இணைந்துள்ளது. தற்கால இந்தி எழுத்தாளர்களில் காலஞ்சென்ற நாவலாசிரியர், பணீஷ்வர் நாத் ரேணு, நாகார்ஜுன் போன்றவர்களும் தங்களது நாவல்களில் இதே உண்மைகளை வெளிப்படுத்தியுள்ளார்கள்.

இந்நாவலின் மூன்றாவது தளம், மட்டுரூவின் மூலம் சித்திரித்துக் காட்டப்பட்டுள்ள, பொருளாதாரச் சுரண்ட லுக்கு எதிரான போராட்டமாகும். நாடு விடுதலை பெற்ற பின்னரும் கூட, நம்முடைய சமூக, பொருளாதார அமைப்பில் சுரண்டலின் இந்த அம்சம் முன்போலவே அழியாமல் பத்திரமாக இருந்து வருகிறது. இந்நாவலில் மீதமுள்ளது 'பயில்வான்கள்' பற்றியது. தேர்ந்தெடுக்கப்பட்ட மல்லர் கள், மற்போரிடுவது, ஒருவரையொருவர் புற முதுகிடச் செய்து கைதட்டலைப் பெறுவது, கிராமத்திலும், அக்கம் பக்கத்து ஊர்களிலும் புகழ் பெறுவது போன்ற செயல் களில் ஈடுபட்டுள்ளனர். ஆனால் மல்லன் 'மட்டுரூ' இவர் களிலிருந்து வேறுபட்டவன். குஸ்திச் சண்டை யிடுவதைப் பின்னுக்குத் தள்ளிவிட்டு, ஒருங்கிணைந்த மல்லர்களின் சக்தியை, ஒருங்கிணைந்த போராட்டத்தைத் துவக்குகிறான். இது இறுதியில் பொருளாதாரச் சுரண்டலுக்கு எதிராகச் சிறியதொரு போராட்டமாக உருவெடுக்கின்றது. 'மட்டுரூ' தான் இந்நாவலின் சூத்திரதாரி. ஒருபுறம் சமுதாயத்தின் சம்பிரதாயக் கட்டுப்பாடுகளை உடைப்பதில் தனது துணிவையும், வலிமையையும் காட்டுகிறான் என்றால் மற்றொருபுறம் பொருளாதாரச் சுரண்டலுக்கு எதிரான போராட்டத்தின் தலைவனாகவும் விளங்குகிறான். நாவ லாசிரியர் இவ்விரு அம்சங்களையும் எளிய முறையில் ஆர்ப்பாட்டம் ஏதுமின்றி வெளிப்படுத்தியுள் ளார்.

இந்நாவல் எளிமையான நடையில் பெரும்பாலும் நேரிடையான உத்தியிலேயே சொல்லப்பட்டுள்ளது. வரு ணனைகளும், கதை கூறப்பட்டுள்ள முறையும், அதன்

உத்தியும், வடிவமும் பயனுள்ளதாக உள்ளன. தான் கூறும் கிராமியச் சூழல் மற்றும் அதனைச் சார்ந்த மக்களின் வாழ்வு ஆகியவற்றுக்குச் சற்றும் பொருத்தமற்ற வருணனை களையோ, மொழியையோ பயன்படுத்துவது, ஒரு படைப் பின் கட்டுக் கோப்பை நாசமாக்கிவிடுகிறது. செயற்கை யானதொரு கலை அம்சத்தை, உத்தியை, அதன் மீது சுமத்துவதும் கூட விசித்திரமானதொரு கலப்பிற்கு நாவலை இரையாக்கிவிடுகிறது. நாவலாசிரியர் தப்பித்துக் கொள்ள முயற்சிக்காமல் இருந்திருக்கலாம். ஆனால் இது விஷயத்தில் அவரது உணர்வுகளின் வெளிப்பாடு இயல்பாகவே இந்த வழுக்கலிலிருந்து தப்ப முடிந்துள்ளது. எங்கே உணர்வு களின் வெளிப்பாட்டில் பிளவுகள் இல்லையோ, அங்கு இது சாத்தியமாகின்றது.

ஆனால் இந்நாவலின் இந்த எளிமையும், சரளமும் மறை முகமாக அநேக சிக்கல்களையும் தன்னுள்ளே கொண் டுள்ளது. இது நீரின் அடி மட்டத்தில் உறைந்துள்ள 'பனிமலை' போன்றது. இதனை இந்நாவலின் கட்டுக் கோப்பின் சிறப்பாக மட்டுமின்றி, படைப்பாற்றலின் வெற்றி எனவும் கூறலாம். பிரச்சினைகள், சிக்கல்கள் திறமையுடன் கையாளப்படும்போது, இயல்பான எளிதான உத்தியில் வார்க்கப்படும் பொழுது, சிறந்ததொரு படைப் பாற்றல் வெளிப்படுகின்றது. இந்நோக்கில் 'கஙகைத்தாய்' மிகச் சிறந்ததொரு படைப்பாகும். இந்தி மொழியின் வேறு பல நாவல்களில் இத்தகைய சிறப்புகளைக் காண இயலு வதில்லை.

நடைமுறையில் நிகழ்வது போன்று தோன்றும் கதைக் கருவையும் அமைப்பையும் ஆதாரமாகக் கொண்டு கதை நிகழும் கால கட்டத்தின் அடிப்படைப் பிரச்சினைகளைத் தன்னுள்ளே ஒருங்கிணைத்துச் செல்வது ''கங்கைத்தாய்'' நாவலின் தனிச் சிறப்பாகும்.

இந்நாவலில் கதாபாத்திரங்கள் அக்காலத்திய இந்தி நாவல்களில் காணப்படுவதுபோல் அதிகம் இல்லை. இருப்பினும் அதன் ஒரு சில பாத்திரங்கள் கூடத் தங்கள்

மண்ணிலே வேரூன்றி நிற்பவர்களாகவே உள்ளனர். அங்கிருந்து அவர்களை வேரறுத்து, வேறு இடத்தில் நட்டுவிட முடியாது. அந்தச் சூழலில், அந்த மண்ணிலும், நீரிலும், காற்றிலும்தான் அவர்களைப் படைத்து, உருவாக்கி, உயிரூட்ட முடியும். 'கங்கைத்தாய்' நாவலின் கதாபாத்திரங் களைப் பற்றிய இந்த அறிதல்தான், மனிதர்களின் உறவுகள் பற்றிய அறிதலுக்கும், மற்றும் பற்பல அறிதல், புரிதல்களுக்கும் அடிப்படையான நிபந்தனையாகும்.

இவ்வாறு கூறுவதால், இப்பாத்திரங்கள் ஒரு குறுகிய வட்டத்திற்குள் கட்டப்பட்டுள்ளன என்று கூறிவிட முடியாது. நாவலின் கதாபாத்திரங்கள் எந்த அளவு தங்களது சூழ்நிலைக்கேற்றவாறு உருவாக்கப்பட்டுள்ளனரோ, அந்த அளவு அப்பாத்திரங்களின் தனிப்பட்ட தன்மைகளும், இயல்புகளும் அவர்களிலேயே ஒன்றி, அவர்களை உலகளவில் பொதுமைப்படுத்தியும் விடுகின்றன. இது தற் செயலாகவோ, சந்தர்ப்பவசமாகவோ ஏற்பட்டதல்ல. பிர சித்தி பெற்ற பிரஞ்சு வெளியீட்டு நிறுவனமான 'காலிஸ்பெர்', கங்கைத்தாயின் பிரஞ்சு மொழி பெயர்ப்பை வெளியிட்டுள்ளது. இங்கு இந்நாவல் பெரும் புகழ் பெற்றுள்ளது. ஒவ்வொரு உண்மையான சுயானுபவமும், உலகளாவிய பொதுமையானதொரு தத்துவத்தைத் தன் னுள்ளே கொண்டுள்ளது எனலாம்.

இன்றைய சூழலிலும் 'கங்கைத்தாய்'க்கு அதிக முக்கியத்துவம் உள்ளது. இன்று உலகம் முழுவதும் இயற்கை யினின்று முரண்பட்டு, அதற்கெதிரான தனது செயல் களின் பயன்களை அனுபவத்துக் கொண்டிருக்கிறது. இன்றைய சுற்றுப்புறச் சூழலின் நெருக்கடியான நிலை இதன் பயனாகவே விளைந்துள்ளது. கங்கை, கடந்த காலத் திற்கும், இன்றைய நிகழ்காலத்திற்குமிடையேயுள்ள இடை விடாத, நிரந்தரமானதொரு பரம்பரையான தொடர்ச்சி யாகும். வழி வழியாகத் தொடர்ந்து கொண்டிருக்கும் இப்பரம்பரை இயற்கையையும் மனிதனையும் ஒன்றாக இணைத்துள்ளது; துண்டித்துப் போகாமல் வைத்துள்ளது.

இது இயற்கையின் மூலம் மனிதனுக்கு கிட்டியுள்ள ஆறுதலளிக்கும் வரம்.

'கங்கைத்தாய்' நாவலை, இப்பல்வேறு நிகழ்வுகளிலும், தளங்களிலும் வைத்துப் பார்த்து படிக்க வேண்டும்.

**—விஜயமோகன் சிங்**

# 1

கோபிசந்தின் விதவை அண்ணி, அன்று காலை வீட்டிலிருந்து காணாமல் போய்விட்டாள் என்ற செய்தி அறிந்ததும், அந்த வட்டாரத்து ஜனங்கள் ஒன்று கூடி, இவ்விஷயத்தை பிறர் காதுக்கு எட்டாதபடி தங்களுக் குள்ளேயே அமுக்கி விட வேண்டும் என்று முடிவு செய்து, அதன் படியே நடந்தும் கொண்டனர். ஆனால், எது, எப்படி நேர்ந்ததோ தெரியவில்லை. அவ்வட்டாரத்து காவல்துறை அதிகாரி, ஒரு காவலர் மற்றும் தலையாரியுடன் மூக்கு விடைக்க, கண்ணில் கோபம் தெறிக்க கோபி சந்தின் வீட்டு வாசலில் வந்து நின்றதும், அவர்களது நிலைமை, திருடன், கன்னம் வைத்த இடத்திலேயே பிடிபட்டது போலாகிவிட்டது.

கூடி இருந்தவர்களைத் தன் கூரிய பார்வையால் துளைத்த வாறே, காவல்துறை அதிகாரி, அதிகார தோரணையுடன் மிடுக்காக நடந்தவர், காவலரை நோக்கி ஜாடை காட்டியவராய் "எல்லோர் கையிலும் விலங்கை மாட்டு" எனக் கர்ஜித்தார். பிறகு தலையாரியின் பக்கம் திரும்பி– "நீ போ. நாட்டாண்மைக்காரருக்கு சேதி சொல்லிவிட்டு வா" என உத்தரவிட்டபின் அனல் கக்கும் விழிகளால் மீண்டுமொருமுறை கூடியிருந்தவர்களைப் பார்த்து விட்டு, அங்கிருந்த கட்டிலின் மீது 'தம்'மென்று உட்கார்ந்தார். அவரது கொடுவாள் மீசை குலுங்கியது.

ஆணி அடித்தாற்போல் யாவரும் திகைத்து நின்று விட்டனர். மரப்பொம்மைகள் போல, யாரார், எங்கெங்கே

நின்றனரோ, அந்த இடத்திலேயே தலைகுனிந்து நின்றனர். யாருடைய வாயிலிருந்தும் பேச்சே வரவில்லை. எப்படி வரும்? காவலர், ஒருவர்பின் ஒருவராக யாவர் கையிலும் விலங்கை மாட்டி, காவல்துறை அதிகாரியின் முன்னே தரையில் உட்கார வைத்து விட்டார்.

இதற்குள் ஊர் மக்களின் கூட்டம் கூடிவிட்டது. கோபிசந்தின் வயதான தாய் இதுவரை சுயநலத்துடன் வாய் மூடி மௌனியாக அமர்ந்திருந்தவள், கதவருகில் அமர்ந்து பலத்த கூச்சலிட்டு உரக்க அழ ஆரம்பித்தாள். தன் விதவை மருமகள் பால், அவள் உள்ளத்தில் இத்தனை பாசமும், அன்பும் எங்கிருந்து திடீரெனப் பொங்கியதோ தெரியவில்லை. எத்தனையோ வருடங்களாய் முடக்குவாத நோயினால், நடக்க இயலாமல் தாழ்வாரத்து மூலையில் கட்டிலோடு கிடந்து அரற்றிக் கொண்டிருந்த கோபிசந்தின் தந்தை, வாசலில் எழுந்த ஆரவாரத்தையும், இரைச்சலையும் தன் மனைவியின் அழுகையையும் கேட்டு எழுந்து உட்கார்ந்து விட்டார். நோயாளியான தன்னிடம் வந்து யாரேனும் என்ன விஷயம் எனக் கூறமாட்டார்களா என்ற தவிப்புடன் தொண்டையைச் செறுமி, இருமத் துவங்கினார்.

கோபிசந்த் அந்தக் கிராமத்தில் நாணயமான குடியான வன். கடவுள் அவனுக்குக் கட்டுமஸ்தான உடம்பை அளித்திருந்தார். முப்பது வயதான அக்கட்டிளங்காளை தன் முன்னே எவரையுமே ஒருபொருட்டாக நினைத்த தில்லை. இதனால்தான் இவ்வளவு தூரம் எல்லாம் நடந்திருந்தும் கூட்டத்திலிருந்த எவரும், அவனுக்கெதிராக எதுவும் கூறத் துணியவில்லை. கையில் விலங்குடன், குனிந்த தலை நிமிராது, அவன் மௌனமாய் அமர்ந்திருப்பதைக் கண்ட வர்களுக்கு, அவன் ஏன் ஒன்றும் பேசாமலிருக்கிறான் என்பது ஆச்சரியமாக இருந்தது. இதில் அவனுடைய குற்றம் எதுவாக இருக்க முடியும்? ராஜபுத்திரர்களின் கிராமங்களில் விதவைகள் சம்பந்தப்பட்ட இத்தகைய விஷயங்களொன் றும் புதிதல்லவே! நடத்தைகெட்டு, முகத்தில் கரியைப் பூசிக்

கொண்டவள், வீட்டை விட்டு ஓடிப் போனவள், குளம், குட்டைகளுக்குத் தன்னைப் பலியாக்கிக் கொண்டவள் என எத்தனையோ விதவைகளின் பெயர்ப் பட்டியல் அவர் களின் நாக்கு நுனியில் இருக்கிறது. ஆனால் என்ன இருந்தாலும் காணாமல் போனவள், இந்த வீட்டு மருமகள். இந்த வீட்டின் மதிப்புக்கும், மரியாதைக்கும் உரியவள். இப்படி வீட்டை விட்டுப் போய், தன் குலத்தின், மானம் மரியாதைக்கு பெருத்த களங்கத்தையல்லவா ஏற்படுத்தி விட்டாள். ஒருக்கால் இந்த அவமானத்தினால் ஏற்பட்ட துக்கத்தில் அவன் இப்படி மௌனமாக இருக்கிறானோ? அப்படித்தானே இருக்க வேண்டும்? கௌரவமான மனிதன் ஆயிற்றே! எனப் பலவாறு அவர்கள் நினைத்தனர்.

பொதுவாக, சாதாரண ஏழை எளியவர்களிடம் இது மாதிரியான விஷயங்களில் காவல் துறையினர் அதிகம் தலையிட விரும்புவதில்லை. மிஞ்சி மிஞ்சிப்போனால் இரண்டு அறை கொடுப்பார்கள். அடித்து, உதைத்து, உருட்டி, மிரட்டி, வசைமாரி பொழிந்தபின் விட்டுவிடுவார்கள். இவர்களுடன் போராடுவதால் தங்களது நேரம்தான் வீண், கைக்கு எதுவும் கிட்டாது என்பது அவர்களுக்குத் தெரியும். சுவாரஸ்யம் ஏதுமில்லாத விஷயத்தைத் தலையில் ஏன் போட்டுக் கொள்ள வேண்டும்? ஆனால் வேண்டுமென்றே, மிக மிகச் சாதாரணமான விஷயத்திற்கு வசதியும், கௌரவமும் பெற்றவர்களை மாட்டுவது, அவர்களுக்கு மிகவும் பிடித்தமான விஷயம். கோபிசந்தின் விஷயத்தில் காவல்துறை அதிகாரி, இத்தனை துரிதமாய், தனது கவலையையும், கடமையுணர்வையும் வெளிக்காட்டினார் என்றால் அவருக்குப் பைத்தியமா என்ன?

நாட்டாண்மைக்காரர் வந்ததுமே காவல்துறை அதிகாரி தீக்கங்குகளாக வெடித்தார். அவர் என்னென்ன கூறினார், எப்படியெல்லாம் மிரட்டினார், அதிகார தோரணை காட்டினார், என்னென்ன செய்வேன் என்று மிரட்டியது மட்டுமல்ல, செய்து காட்டுவேன் என்று சூளுரைத்தார்,

என்பதற்கெல்லாம் கணக்கேயில்லை. நாட்டாண்மைக் காரர் வாய்க்குள் சிரித்துக் கொண்டார். பின்னர் காவல்துறை அதிகாரி, மிச்சம் மீதி விட்டு வைத் திருந்ததையெல்லாம் அவர் பூர்த்தி செய்து விட்டார். கோபிசந்த், மற்றும் அவனுடனிருந்த குற்றவாளிகளான அப்பேட்டை வாசிகளைக் கடுமையாகக் கண்டித்து, வசை பாடியபின், தானாகவே அவர்களது வக்கீலாகவும் மாறி விட்டார். அவர்கள் சார்பில் மன்னிப்பை யாசித்ததுடன், கொஞ்சம் வெற்றிலை பாக்கு, பத்திரம் புஷ்பம் பற்றியும் பேசியவர் காவல்துறை அதிகாரியை நோக்கி– "ஐயா! ஒரு முறை ஜெயிலுக்குப் போய் வந்தும் இந்த கோபிசந்திற்கு எதுவும் தெரியவில்லை. இவன் மீண்டும் ஜெயிலுக்குத்தான் போவான். இன்ஸ்பெக்டர் ஐயா! எத்தனை நாள் இவனை நான் காப்பாற்றி வைக்க முடியும்? ஒருமுறை கறைபிடித்துவிட்டால், பின்னர், சாட்சி, ருஜூ, அத்தாட்சி இதற்கெல்லாம் தேவையே இருப்பதில்லை என்பது இவனுக்குத் தெரியவில்லையே!" என்றவர், மற்றவர்களை நோக்கி கை நீட்டியவாறே, "இவர்களுக்கும் அந்தப் பெரிய வீட்டுக்குப் போய் இவனுடன் காற்று வாங்க வேண்டும் என்ற ஆசை வந்துவிட்டது போலிருக்கிறது" என்றார்.

இதற்குள் காவல்துறை அதிகாரி தனது புதியதொரு அஸ்திரத்தைப் பிரயோகிக்க, தனது தோரணையை அதற்கேற்ப மாற்றிக் கொள்ள முயற்சித்துக் கொண் டிருந்தார். நாட்டாண்மைக்காரர் பேசி முடித்ததும் மீண்டும் சீறி விழுந்தார்– 'இல்லையில்லை. இது ஏதோ சாதாரண விஷயமாக இருந்தால் பரவாயில்லை. ஆனால் இது மிகக் கடுமையான, சிக்கலான விஷயம். நானும் இன்னொரு வருக்குப் பதில் கூறியாக வேண்டும்' எனக் கூறியவர் விறைப்புடன் நின்றார்.

நாட்டாண்மைக்காரருக்குப் புரிந்து விட்டது. "பாம்பின் கால் பாம்பு அறியும் அல்லவா?" தன் கரத்தை நீட்டி, அவ்வதிகாரியின் கரத்தைப் பற்றியவர், அவரை ஒரு

ஓரமாய் அழைத்துக் கொண்டு சென்றார். பத்து நிமிடங்களுக்குப் பின்னர் அவர்கள் திரும்பி வந்ததும், காவல்துறை அதிகாரி, நோட்புக்கையும், பென்சிலையும், ஜேபிலிருந்து எடுத்தவாறே– "கோபிசந்த் உன் வாக்கு மூலத்தைக் கொடு" என்றார். பிறகு கூட்டத்தினரை நோக்கி, காவலருக்கு ஜாடை காட்டவே, கூட்டம் விரட்டப்பட்டது. காவல்துறை அதிகாரி கோபிசந்தின் வாக்கு மூலத்தைப் பெறாமலேயே, அவ்விண்ணப்பத் தாளைத் தானே பூர்த்தி செய்து விட்டார். மேற்படி நடந்த சம்பவத்தில் காணாமல் போன விதவையின் ஒரு கையில் கயிறும், மற்றொரு கரத்தில் குடமும் தரப்பட்டது. அவள் கிணற்று மேடைக்கு அனுப்பப்பட்டாள். பாசிபிடித்திருந்த கிணற்றடியில் அவளது கால் வழுக்கி விடப்பட, அவள் கிணற்றிலே தள்ளப் பட்டு, சாகடிக்கப்பட்டாள். இந்தப் பக்கம் கோபிசந்தின் பணப் பையின் வாய் திறந்து கொண்டதும் அந்தப் பக்கம் சட்டத்தின் வாய் அடைபட்டுப் போயிற்று. கதையும் முடிந்தது.

கிராமத்தில் பலவிதமான பேச்சுக்கள் எழுந்தன. செத்தவர் எத்தனையோ நல்லவர்கள் என்பதற்கேற்ப, இறந்து போனவளைப் பற்றி எதையெதையோ பேசி அவளது ஆத்மாவை வீணாகக் கஷ்டப்படுத்துவது உசிதமல்ல என நினைத்தவர்கள் போல் ஊராரும் வாயை மூடிக் கொண்டு விட்டனர். விஷயம் பொங்கியது போல் அடங்கியும் போயிற்று. ஆனால் . . .

## 2

கோபிசந்தும், மாணிக்கசந்தும் சகோதரர்கள். மாணிக்கிற்கும், கோபிக்கும் இரண்டே வயது வித்தியாசம்தான். அவர்களுடைய தந்தை இரு காளைகளை ஓட்டி, நிலத்தில் பயிர் செய்து கொண்டிருந்தார். வீட்டில் ஒரு எருமை

இருந்தது. சகோதரர்கள் இருவரும் எருமைப் பாலைக் குடித்து விட்டு மணிக்கணக்காக சிலம்பக் கூடத்திலேயே கிடப்பார்கள். அவர்களுடைய அப்பா, அவர்களை பொலிக் காளைகள் போல் முற்றும் சுதந்திரமாய் விட்டிருந்தார். அவர்களுக்கு எந்த விதமான கவலையும் இருக்கவில்லை. ஆடி, ஓடி, உண்டு களிக்கும் பருவமல்லவா இது! பின்னால் வாழ்க்கையின் பாரம் தோளில் இறங்கிய பின், உடலைப் பேணி வளர்க்க அவகாசம் ஏது? இந்த வயதில் ஏற்படும் உடற்கட்டும், வலிமையும்தான் வாழ்க்கை முழுதும் பயன்படும் என்று நினைத்தார் அவர்.

வளரும் இளம் பருவத்து இளைஞர்களுக்கு, சுதந்திரமும், எதைப் பற்றிய கவலையும் இல்லாமற் போகவே, பாலும், சிலம்பக் கூடத்தின் உடற்பயிற்சியும் அவர்களது உடலை அச்சில் வார்த்தெடுத்தது போலாக்கி விட்டது. அவர்கள் இருவரும் கோதாவில் இறங்கியதும் ஊரார் கூடி நின்று வேடிக்கை பார்த்து, சலியாது பாராட்டிப் புகழ்ந்தனர். சிலம்பக் கூடத்திலிருந்து, தங்களது கட்டான, அழகிய உடலில் புழுதி மண்டியிருக்க சிங்கத்தைப் போல் கம்பீரமாக நடந்து அவர்கள் வீடு திரும்புகையில், ராம, இலட்சுமணர்களின் இந்த ஜோடியைக் கண்டு பெற்றவர் கள் மனம் பூரித்துப் போகும். முகம் மகிழ்ச்சியினால் விகசிக்க, அவர்களின் விழிகள், கர்வத்துடன் இரு தீபங்கள் போல் சுடர்விடும். பெற்றவள், திருஷ்டி கழிப்பதற்காக நெட்டி முறிப்பாள். அப்பாவோ மனதிற்குள்ளேயே எத்தனை எத்தனையோ நல்லாசிகளை வழங்குவார்.

புகழ் எத்தனை இனிமையானதோ, அதன் போதைக்குப் பழக்கப்பட்டு விடுவது அத்தனை கெடுதலானதும் கூட அது மனிதனைக் குருடாக்கி விடுகிறது. இரு சகோதரர்களின் கட்டுமஸ்தான அழகிய உடற்கட்டு, அவர்களது வலிமை யைப் பற்றிய புகழ், கிராமத்திலும், சுற்றுமுற்றும் பரவத் துவங்கியதும் அது இனிய போதையை அவர்களிடம் ஏற்றி விட்டது. விளையாட்டாக அவர்கள் ஆரம்பித்த உடற் பயிற்சி, மெல்ல மெல்லத் தீவிரமாக அவர்களைப் பற்றிக்

கொண்டு விட்டது. இதன் பின், உடல் வலிமையை அதிகரிக்கச் செய்வதும், பலிஷ்டனாவதும் தவிர்க்க முடியாத வெறியாக அவர்களின் தலைக்கேறிவிட்டது. பெற்றவர்கள், ஊரார், இருவரின் உற்சாகமான தூண்டுதலும் கிட்டியது. மாணிக், கோபியின் ஜோடி, அக்கம் பக்கத்து ஊர்களிலெல்லாம், தங்கள் கிராமத்தின் பெயருக்குப் பின்னும் புகழ் சேர்க்க, முழு மனத்துடன் வரிந்து கட்டிக் கொண்டு விட்டனர். பாதாம் பருப்பு அரைக்கப்பட்டது. ஆடுகள் வெட்டப்பட்டன. நெய் ஒழுகும் அல்வாவின் நறுமணம், காலையும், மாலையும் அவ்வட்டாரமெங்கும் மணத்தது. தான் பாடுபட்டுச் சம்பாதித்த பணத்தை அவர்களின் தந்தை அவர்களுக்காக செலவிட்டார். இன்னுமொரு கறவை எருமை கொட்டிலில் கட்டப்பட்டது.

இதன் பலன், வயதுக்கு மீறி அவர்களின் உடலில் மும்மடங்கு பலம் கூடி விட்டது. இருபத்து ஐந்து வயதை எட்டும் முன்னரே அவர்களது உடற்கட்டும், வலிமையும் யானையையொத்தாகி விட்டது. அவர்கள் கோதாவில் இறங்கினால் அவர்கள் விட்ட பெருமூச்சின் சீறல் தொலை தூரம் வரை கேட்டது. இரு காளைகள் சீறுவது போலிருந்தது அது. கோதாவில் அவர்கள் கால்களை ஊன்றி நின்ற இடம் சாண் அகலத்திற்கு அப்படியே உள் அழுந்திப் போயிற்று. அவர்கள் தங்கள் தொடைகளையோ, புஜங்களையோ தட்டினால், இரு மேகத் துண்டுகள் ஒன்றோடொன்று மோதிக் கர்ஜிப்பது போலிருந்தது. மணிக்கணக்காக இரு குன்றுகள்போல் ஒருவரோடொருவர் மோதிய வண்ணம் அவர்கள் சிலம்பக் கூடத்தில் அசையாது நின்றனர். சிலம்பக் கூடத்தின் மண் தரையெல்லாம் கிளர்ந்து, புரண்டு போகும். வியர்வை ஆறாகப் பெருக்கெடுத்து ஓடும். இதன் பின்தான் அவர்கள் களத்தை விட்டு வெளியே வர நினைப்பார்கள். வெளியே வந்ததும் இரு யானைகள் போல் அப்படியே மல்லாந்து படுத்து விடுவார்கள். இரண்டு, மூன்று சீடர்கள் கையில் மண்ணை அள்ளி உடலிலிருந்து பெருகும் வியர்வையில்

அப்பித் தேய்த்து உலர வைக்க வெகு நேரம் பிடிக்கும்.

அவர்களது உடல் வலிமை கட்டுக் கடங்காததாகி விட்டது. அபாரமான வலிமை ஏறிக் கிரணங்கள் போல் அவர்களது ஒவ்வொரு மயிர்க் காலிருந்தும் சுடர் விட்டது. தடித்த நாளங்களில் பெருகிய செங்குருதியால் உப்பியிருந்த தமனிகள் வெடித்து விடுமோ எனத் தோன்றியது. சிவந்த முகத்தில் குருதி கொப்பளித்தது. உயர்ந்த நெற்றி, காண்பவரை அச்சுறுத்தும் சிவப்பேறிய விழிகள், கிருதா மீசை, வாளிப்பான கழுத்து, உயர்ந்து, அகன்று, பரந்த மைதானம் போன்ற மார்பு, உருண்டு திரண்ட புஜங்கள், புஷ்டியான தொடைகள், உறுதியான கெண்டைக் கால் சதைகள், மிதமிஞ்சிய உற்சாகம் நிறைந்த இளமையின் முறுக்கோடு, வலிமையும், கர்வமும் ஏற்றிய போதையில் மதம் கொண்ட யானையைப் போல், அவர்கள் நடந்து செல்வதைப் பார்க்கும்போது, அவர்கள் எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடிக்கும், பூமி அதிர்வது போலும், அவர்களது ஒவ்வொரு அசைவிற்கும் திசைகள் நடுங்குவது போலிருந்தது. அவர்களது பார்வையில் வலிமையின் மின்னல்கள் பளிச்சிட்டன. தாயும், தந்தையும் தங்களது புதல்வர்களின் இம்மேன்மையான நிலை கண்டு, கர்வத் தாலும் உவகையாலும் பூரித்தனர். கிராமத்தார்களோ, விழிகள் மகிழ்ச்சியினால் மின்னலிட, உதட்டில் வெற்றிப் புன்னகையுடன் "நாம் வருடக் கணக்காக எதிர்பார்த்துக் கொண்டிருந்த தருணம் வந்து விட்டது. இனி எந்தப் பயல், நம் கிராமத்து இந்த இளஞ்ஜோடிச் சிங்கங்களின் முன்னே தலை நிமிர்ந்து நடக்கிறான் என்று பார்க்கலாம்?" என்றனர்.

தந்தையிடம் இது பற்றி பிரஸ்தாபித்ததும் அவர் அலட்சியமாக– "அரேரே! இவர்கள் இன்னமும் குழந்தை களப்பா!–" என்று கூறி விட்டார்.

"நீர் தகப்பன். ஒரு தகப்பனுக்குத் தான் பெற்ற பிள்ளை கிழவனாகி விட்டாலும் குழந்தையாகத்தான் தோன்றும். ஆனால் இளமையின் ஏற்றத்தில்தான் எதையும் சாதித்துக் காட்ட முடியும். அதுதான் தக்க பருவம். அத்தருணம்

இப்பொழுது வந்து விட்டது. இவர்களது பலமும், வலிமையும், மல்யுத்தம் புரியும் ஆற்றலின் பெருமையும் இந்த கிராமத்தின் எல்லைக்குள்ளேயே அடைபட்டிராமல், சுற்றுப்புறம் முழுதும் மட்டுமல்ல, தாலுகா, மாவட்டங்களைத் தாண்டி, மாநிலம் முழுதும், இந்த நாடெங்கும் அவர்களது பெயர் பரவ வேண்டும். இத்தருணத்தில் உங்களது பலவீனத்தைக் காட்டினால் இவர்களது உற்சாகமெல்லாம் தணிந்துவிடும். நீங்கள் சந்தோஷமாக இவர்களுக்கு உத்தரவு கொடுங்கள். இவர்கள் உங்கள் பெயரையும், குல கௌரவத்தை மட்டுமல்ல, இந்த ஊரின் பெயருக்கே பெரும் புகழ் தேடிக் கொண்டு வருவார்கள்" என்றனர்.

தன் புதல்வர்களின் தோள் வலிமையை அவர்களது தந்தை அறியாதவர் என்பதில்லை. அவரது உள்ளத்தில் தன் பிள்ளைகள், பேரும் புகழும் பெற்று விளங்க வேண்டும் என்ற மட்டற்ற ஆசை இருந்தது. கூடவே அளவற்ற அன்பும், பாசமும் மிகுந்த இதயத்தின் ஏதோ ஒரு மூலையில் லேசான பயமும், சந்தேகமும் இருந்தது. ஊரார் கூறியதைக் கேட்டபோது, தனது புகழ், கௌரவத்தைப் பற்றித் தனக்கு கிஞ்சித்தும் அக்கறை இல்லை என்பது போன்றதொரு விரக்தியான புன்னகைதான் அவர் உதட்டில் மலர்ந்தது. பெயர், புகழ், கீர்த்தி, செல்வாக்கு, கௌரவம் பற்றிய ஆசை யாருக்குத்தான் இல்லை? ஆனால் இந்த ஆசையை, பிறரின் முன்னே வெளிக்காட்டிக் கொண்டு, எந்தப் புத்திசாலியான மனிதனும், கிடைத்ததற் கரிய இப்பேற்றின் மகத்துவத்தைக் குறைத்து, தன்னைப் பேராசைக்காரனாகக் காட்டிக் கொண்டு, தன்னைச் சிரிப்பிற்கிடமாக ஆக்கிக் கொள்ள விரும்ப மாட்டான். மாணிக், கோபியின் தந்தை பழுத்த அனுபவசாலி, உள்ளத் தில் பீறிட்டெழுந்த உற்சாகத்தை அடக்கிக் கொண்டு, பற்றற்றவர்போல்– "நீங்களெல்லாம் அப்படி நினைத்தால், நான் தடையாக இருக்க விரும்பவில்லை. என்னைப் போன்றே, இந்தக் கிராமத்தார்களுக்கும் அவர்கள் மேல் உரிமை இருக்கிறது அல்லவா? இந்த மண்ணில் பிறந்து,

இதன் காற்றில், நீரில் வளர்ந்து உருவானவர்கள் இவர்கள். நீங்களே இதை அவர்களிடம் சொல்லுங்கள். அவர்களுக்குப் பூரண சுதந்திரம் உண்டு. இன்று கூட அவர்கள் எதைச் செய்ய நினைத்தாலும் அதைச் செய்ய அவர்களுக்கு சுதந்திரம் உண்டு'' என்றார்.

ஊரார் இதைக் கேட்ட பின் மகிழ்ச்சியுடன் அச்சகோதரர்களிடம் சென்று அவர்களின் தந்தை அவர்களுக்கு அனுமதி வழங்கியுள்ளதைக் கூறி– ''உங்களில் யார் முதலில் கோதாவில் இறங்க விரும்புகிறீர்கள்? இதை நீங்கள்தான் கூற வேண்டும்'' என்றனர்.

அண்ணன் தம்பி இருவருமே கோதாவில் இறங்கும் போது எதிராளிகளாகத்தான் இறங்குவார்கள். ஆனால் களத்திலிருந்து வெளியே வந்ததும் மிகுந்த அன்பும், பாசமும் மிக்கவர்களாய் பழகுவார்கள். ராம, இலட்சுமணர்களைத்தான் அவர்களுக்கு முன்னுதாரணமாய் கூற இயலும்.

''நானிருக்கையில் அண்ணன் கோதாவில் இறங்குவதென்பது இல்லை. அப்பா, அண்ணன், இருவருடைய ஆசியையும், வாழ்த்துக்களையும் பெறும் உரிமை, கடவுள் எனக்கருளி இருக்கிறார்'' என்றான் கோபி.

வயதில் மாணிக், கோபியை விடப் பெரியவன் என்றாலும், வலிமையில் மாணிக்கை விட கோபிதான் மிகுந்து நின்றான். இதைக் கிராமத்தார் மட்டுமல்ல, மாணிக்கும் அறிவான். கோபிதான் முதலில் கோதாவில் இறங்கப் போகிறான் என்றறிந்ததும் யாவரும் மகிழ்ச்சியடைந்தனர்.

நல்லதொரு வேளை பார்த்து ஒரு பிராமணரும், நாவிதனின் கையில் மல்யுத்தத்திற்கான அழைப்பிற்கு வெற்றிலை பாக்கும், சுற்றுப்புறக் கிராமங்களிலிருந்த பேர் பெற்ற பயில்வான்களுக்கு அனுப்பப்பட்டது. கோபியும் தன்னைத் தயார் படுத்திக் கொள்வதில் முனைந்தான்.

சுற்றும் முற்றும் இருந்த ஊர்களிலுள்ள பயில்வான்கள் மாணிக், கோபி சகோதரர்களைப் பற்றி நிறையக்

கேள்விப்பட்டிருந்தது மட்டுமல்ல. தங்கள் கண்ணால் கண்டுமிருந்தனர். அவர்களில் எவருக்கும் அவர்களோடு மோதும் துணிவு ஏற்படவில்லை. பிராமணரும், நாவிதரும் ஒவ்வொரு பயில்வானாக விடாமல் எல்லோரிடமும் சென்றனர். ஆனால் எல்லோருமே ஏதேனும் ஒரு சாக்குப் போக்குச் சொல்லித் தட்டிக் கழித்து விட்டனர். முடிவில் எல்லோரையும் விட புகழ்பெற்று விளங்கிய முதியவரான ஜோகு பயில்வானின் சிலம்பக் கூடத்திற்கு அவர்கள் சென்றனர். அக்கம்பக்கத்து ஊர்களிலிருந்த எந்தப் பயில்வானும் அழைப்பை ஏற்று வெற்றிலை பாக்கின் மீது கை வைக்கத் துணியவில்லை என்ற செய்தியை அவர்களின் வாயால் கேட்டறிந்ததும் ஜோகு பயில் வானின் வியப்பிற்கு எல்லையே இல்லை. பெயர் பெற்ற பயில்வான்கள் பெரும்பாலும் ஒன்று, அவரது சீடர்கள், அல்லது மற்போரில் அவரது வலிமைக்கு அடி பணிந் தவர்கள்.

இளம் வயதில் ஜோகு பயில்வான் ஒருமுறை தனது வலிமையையும், திறமையின் முத்திரையையும் பதித்து விட்டிருந்தார். அது இன்றும் அப்படியே நிலைத்திருந்தது. யாரும் இதுவரை அவருடன் மற்போரில் இறங்கத் துணிந்ததில்லை. இன்னும் அவரது புகழ் சுற்றும் முற்றுமிருந்த ஊர்களில் பேசப்பட்டு வந்தது. ஜோகுவிற்கு வயதாகிவிட்டது. இப்பொழுது அன்றைய இளமையின் நாட்கள் இல்லை. கோபிக்கு எதிராக நின்று சவாலை ஏற்பதில் தன் வாழ் நாள் முழுவதும் ஈட்டியிருந்த புகழை இழக்க நேரிடும் என்பதும் அவருக்குத் தெரிந்ததுதான். ஆனால் வேறென்ன வழி? அந்தப் பிராமணரும், நாவிதனும் புகழ் பெற்ற எல்லா பயில்வான்களின் முன்பும் கரிய நிறக் குதிரையைப் போல், கோபியின் புகழ்க் கொடியைப் பறக்க விட்டுவிட்டு வந்திருந்தனர். ஜோகுவின் வீட்டிலிருந்தும் இதேபோல் அவர்கள் திரும்பிச் சென்றால், ஜனங்கள் என்ன நினைப்பார்கள்? இந்த அவமானத்தைப் பற்றி நினைத்ததும் அக்கிழச் சிங்கம் கொதித்தெழுந்தது.

அவருக்கு அறைகூவல் விட்டுவிட்டு, ஒருவர் திரும்பிச் சென்று விடுவது என்பதை அவரது பௌருஷம் எவ்வாறு சகித்துக் கொள்ள இயலும்? ஜோகுவிற்கு வயதாகிவிட்டது. அந்த உடற்கட்டும், தோள் வலிமையும் இப்பொழுது இல்லைதான். என்றாலும், அப்பழங்காலத்து ரத்தம் ஓடும் ஆண் மகன். அவர் உண்மையான ஆண் பிள்ளை அறைகூவலை ஏற்காமல் கோழையைப் போல், முதலி லேயே எவ்வாறு தலை குனிய முடியும்? ஜோகு வெற்றிலை பாக்கை எடுத்துக் கொண்டார். 'ஜெய் பஜரங்கபலி' எனக் கர்ஜித்தவாறே அதை வாயில் போட்டுக் கொண்டார்.

இதைப் பற்றிக் கேட்டதும் மக்கள் வியப்படைந்தனர். கூடவே முதியவரான ஜோகுவின் பௌருஷத்தையும், தைரியத்தையும் அவர்களால் பாராட்டாமல் இருக்க முடிய வில்லை. அக்கம்பக்கத்து ஊர்களிலிருந்த இளம் பயில்வான்கள் வெட்கத்தால் நாணிச்சாக வேண்டும் என்ற வார்த்தையும் சட்டென அவர்கள் வாயிலிருந்து வெளிப்பட்டுவிட்டது. கோபி இதைக் கேட்டதும் குன்றிப் போய்விட்டான். தன் தந்தையின் வயதையொத்த பயில் வானுடன் குஸ்தியில் இறங்குவது சரியென அவனுக்குத் தோன்றவில்லை. அவன் தன்னையொத்த வயதுடைய இளைஞனான மல்லனுடன் போரிடவே விரும்பினான். ஆனால் இனி என்ன செய்ய முடியும்? ஒருமுறை பந்தயம் க்கட்டிவிட்டால் வேறு என்ன செய்ய முடியும்?

* * *

குறிப்பிட்ட தினத்தன்று சிலம்பக் கூடமும், அரங்கமும் தோரணங்கள் அசோக மரத்து இலைகள், காகித வண்ணக் கொடிகளால் நன்கு அலங்கரிக்கப்பட்டது. குறித்த நேரத்திற்கு வெகு நேரம் முன்பே, அக்கம் பக்கத்து ஊர்களிலிருந்து மட்டுமல்ல, தொலைதூரத்திலிருந்த ஊர் களிலிருந்தும் மக்கள் கூட்டம் கூட்டமாகக் குவியலாயினர். பெற்றோரின் ஆசியைப் பெற்ற பின், மலர் மாலைகளைச்

சுமந்து கொண்டு சகோதரர்கள் இருவரும், வாத்தியங்கள் முழங்க, கிராம மக்கள் பின் தொடர முன்னே நடந்து சிலம்பக் கூடத்தை நோக்கிச் சென்றனர். உற்சாக வெறி கொண்ட கூட்டத்தினரின் "பஜரங்கபலிக்குச் ஜெய், ஜெய் பஜரங்கபலி" என்ற கோஷம் நாற்புறமும் எதிரொலித்தது. இத்தகையதொரு அரிய சந்தர்ப்பத்தில் கோபி கற்பனை செய்திருந்த உற்சாகமும், மகிழ்ச்சியும், ஆர்வமும், தற்சமயம் சற்றும் இல்லாமலிருந்தது. இருப்பினும் தன்னைக் கட்டுப் படுத்திக் கொண்டவனாய், அதனை வெளிக்காட்டாது, மேலுக்கு உற்சாகத்துடன் கூட்டத்தினரின் சந்தோஷத்தில் பங்கெடுத்துக் கொண்டிருந்தான்.

சிலம்பக் கூடத்தின் இருபுறமிருந்தும் ஒரே சமயத்தில் ஜோகுவின் குழுவினரும், கோபியின் குழுவினரும் பிரவேசித்தனர். இரு குழுவினரும் 'ஜெய' கோஷங்களை எழுப்பினர். தாரை, தப்பட்டைகள் முழங்கின. அச்சூழலில் ஒவ்வொரு அணுவிலும் வீர ரசம் விரவி நின்றது. கூடியிருந்த பார்வையாளர்களின் விழிகளில் மகிழ்ச்சியும், ஆவலும் பளிச்சிட்டன. எல்லோரும் கோதாவை நெருங்கி வர முண்டியடித்துக் கொண்டிருந்தனர். கோபி, மற்றும் ஜோகுவின் ஆதரவாளர்கள் அவர்களை நாற்புறமும் சூழ்ந்து கொண்டு தங்களது பாராட்டுதல்களுடன் கூடவே பல்வேறு யுக்திகளையும், குறுக்கு வழிகளையும் அவர் களுக்குச் சொல்லிக் கொண்டிருந்தனர். வயதான முதியவர் ஒருவர், முதுகிலே தட்டிக் கொடுத்து உற்சாகப்படுத்தினார் என்றால் சம வயதுடைய இளைஞனொருவன் கை குலுக்கி வெற்றி பெற வாழ்த்தினான். சீடர்கள் யாவரும் அவர்களது காலைத் தொட்டு வணங்கி வெற்றி பெற இறைவனை வேண்டினர்.

கோபி களத்தில் இறங்கும் முன்னரே, மாணிக், அவன் காதோடு காதாய், "கிழவர் பழங்காலத்து அனுபவசாலியான உஸ்தாத். அதிகமாக இடம் கொடுத்து விடாதே. கை குலுக்கியதுமே, கண்ணிமைப்பதற்குள்— புரிந்ததா? அதில்லாமல் கை கலந்து விட்டாயோ, மணிக்

கணக்காக இழுத்து விடும். தோற்றுப் போவது மட்டுமல்ல. முதியவரான உஸ்தாதுடன், மற்போரில் இறங்குவதே கோபி போன்ற இளைஞனின் அதிகப் பிரசங்கித் தனம். அப்படியே மோதினாலும் பார்–இழு இழுவென்று இழுபடு கிறான் என்று பிறர் சொல்வதற்கு இடம் தரக் கூடாது. புரிந்ததா?" என்றான்.... சட் புட் என்று....

இருபுறமிருந்தும் இருவரும் குதித்து களத்தில் இறங்கினர். இரு தரப்பிலிருந்தும் ஜய கோஷங்கள் ஒலித்தன. தாரை, தப்பட்டைகள் உரக்க ஒலித்தன. பார்வையாளர்களின் விழி களில் மின்னலிட்ட ஆவலுடன் கரு விழிகளில் பதட்டமும் கூடியது.

இருவரும் குனிந்து சிலம்ப மேடையின் தரையிலிருந்து மண்ணை ஒரு சிமிட்டா எடுத்து நெற்றியில் இட்டுக் கொண்டு தங்கள் குருவை தியானித்தனர். பின்னர் நேருக்கு நேர் கண்கள் நீண்டன. விரல்கள் ஸ்பரிசித்தன. சட்டென மின் வெட்டியது போல், கோபி தனது வலது காலை உயர்த்தி ஜோகுவின் அடிவயிற்றில் எப்படி உதைத் தானோ முதியவர் ஒரு அலறலுடன் காற்றிலே பறந்தார். உயர எழும்பிய நிலையிலேயே அவர் வாயிலிருந்து பெருமூச்செறிவது போன்ற சத்தமொன்று வெளிப்பட்டது. மறுகணம் சிலம்ப மேடையின் வரம்பில் மலையின் ஒரு பகுதிபோல் தடாலென வீழ்ந்தார்.

கூட்டத்தில் நிசப்தம் நிலவியது. தாரை, தப்பட்டைகளின் ஒலி நின்று விட்டது. ஜோகுவின் ஆதரவாளர் சந்தேகத்துடன் நடுங்கியவாறே அவ்விடத்தை நோக்கி ஓடினர். குனிந்து பார்த்தால் முதியவர் குளிர்ந்து விட்டிருந்தார். இனியென்ன இருக்கிறது? அவர்களின் விழிகள் கோபக்கனலை உமிழ்ந்தன. "இது பெருத்த அநியாயம். வஞ்சகமான மோசடி. கை குலுக்குவதற்கு முன்னரே கோபி, முதியவரை அடித்து வீழ்த்தி விட்டான். குஸ்தியின் நியமங்களை இக்கோழை உடைத்தெறிந்து விட்டான். நாங்கள் இவனை உயிருடன் விட மாட்டோம்" என்ற கூக்குரல்கள், கோபமும், ஆத்திரமும் கொண்டிருந்த

அக்கூட்டத்தினரிடமிருந்து எழுந்தன.

கோபி திகைத்து நின்றான். திடீரென இதென்ன நேர்ந்து விட்டதென்று அவனுக்கு எதுவுமே புரியவில்லை. ஆனால் இப்பொழுது இதையெல்லாம் பற்றி யோசிக்க அவகாசம் ஏது? ஜோகுவின் தரப்பினர் சிலம்பக் கழிகளைக் கையிலே எடுத்துக் கொண்ட பின், இத்தரப்பினர் எப்படி சும்மா இருக்க முடியும்? படபடவென்று சிலம்பக் கழிகள் மோதிக் கொண்டன. பார்வையாளர்களிடையே குழப்பம் பரவியது. பலருடைய தலையிலிருந்து உதிரம் பெருக்கெடுத்தோடியது. இன்னும் பலரின், கையிலும் காலிலும் அடிபட்டு அவர்கள் தரையில் விழுந்து துடித்தனர். முடிவில் ஜோகுவின் தரப்பினர் தங்களின் வலு குறைகிறது என்பதை உணர்ந்ததும் அவர்களிலேயே ஒரு சிலர் தாங்களாகவே சமாதானத்திற்கு முற்பட்டவர்களாய் சத்தம் போட்டுத் தங்கள் ஆட்களைத் தடுத்து நிறுத்தலானார்கள். இது கோபியின் ஊர். ஜோகுவின் ஆட்களோ, வெளியூர்களிலிருந்து வந்தவர்கள். தடுத்து நிறுத்தும் எண்ணம் மட்டும் அவர்களுக்கு ஏற்பட்டிராவிட்டில் அவர்களில் ஒருவர் கூட உயிருடன் ஊர் திரும்பி இருக்க முடியாது. தடிகளும், கழிகளும் மெல்லமெல்ல ஓய்ந்தன. கோர்ட்டில் பார்த்துக் கொள்வதாக மிரட்டி விட்டு அவர்கள் போய்விட்டனர்.

* * *

இத்தகைய துர்ச் சம்பவத்தைப் பற்றிய விஷயத்தை எடுத்துக் கொண்டு கோர்ட்டுக்குச் செல்வதென்பது அவர் களுக்கு கௌரவமான விஷயமல்ல. இதனால் அவர்களது மரியாதை கெடுமே தவிர, உயராது. ஜோகு பயில்வானுக்கு நேர்ந்து விட்ட மரணத்தினால் அக்கம் பக்கத்து ஊர்களில் அவர்களுக்கு ஏற்பட்டிருந்த தலைகுனிவு கொஞ்சமா என்ன? இனியும் கோர்ட்டில் ஏறி இந்த அவப் பெயரைக் கொட்டி முழக்க வேண்டுமா என்ன? அந்த தாலூகாவின்

காவல்துறை அதிகாரி கோர்ட்டில் வழக்குத் தொடுக்குமாறு வற்புறுத்தினார். ஆனால் கோபியின் தரப்பினர் அவரது ஜேபியை நிறைத்ததும் அவரும் மௌனமாகிவிட்டார்.

எது என்னவானாலும் இச்சம்பவத்தினால் கிட்டிய பலன், ஜோகுவின் ஆதரவாளர்கள், கோபி மற்றும் அவனது குடும்பத்தினரின் ஜன்மப் பகைவர்களாகி விட்டனர். அவர்களின் உள்ளத்தில் இது ஆறாத ரணமாகிவிட்டது. ஜோகுவின் இத்தகைய மரணம் கோபியின் உள்ளத்திலும் பெரும் பாதிப்பை ஏற்படுத்தியது. அவன் தனது குஸ்தி உடையைக் கழற்றி எறிந்து விட்டான். பெற்றோர்களும், ஊராரும் எவ்வளவோ சொல்லிப் பார்த்தனர். ஆனால் அவன் அசைந்து கொடுக்கவில்லை. இப்பொழுது அவன் தன் தந்தைக்கு வயலிலும், வீட்டிலும் உதவியாகப் பணியாற்றத் துவங்கினான்.

## 3

நாளடைவில் அச்சம்பவம் கடந்த கால விஷயமாகி விட்டது. தந்தைக்குத் தன் பிள்ளைகளின் திருமணத்தைப் பற்றிய கவலை உண்டாயிற்று. இதற்கு முன்பு கூட பல இடங்களிலிருந்து சம்பந்தங்கள் வந்தன. "இப்பொழுது என்ன அவசரம்?" என்று அவற்றைத் தட்டிக் கழித்து விட்டார். அதிர்ஷ்டவசமாய் இப்பொழுது கௌரவமான இடத்திலிருந்து பெண் கொடுக்க வந்ததும் அவரது மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. நல்லதொரு பெரிய குடும்பத்திலிருந்து சீதையும், ஊர்மிளையையும் போன்ற சகோதரிகளை, சீலமும் நற்பண்பும், அன்பும் நிறைந்தவர்களை, சகோதரர்கள் இருவருக்கும் கொடுப்பதற்கு முன்வந்து சம்பந்தம் பேசினார்கள். பிள்ளைகளைப் போலவே மருமகள்களையும் அடையப் போகின்றனர். கோபியின் அம்மா எத்தனையோ ஆண்டுகளாக மருமகளின் முகத்தைக் காணத் துடித்துக் கொண்டிருந்தாள். இந்த சம்பந்தத்தைப் பற்றிக் கேட்டவர்களெல்லாம்,

கோபியின் தந்தையிடம் வந்து "இனி யோசிப்பதற்கு எதுவுமில்லை. பகவானின் அருளால் நல்ல மருமகள்மார் கிடைத்துள்ளனர். இரு பிள்ளைகளுக்கும், எல்லா சடங்கு களையும் ஒரே சமயத்தில் செய்தது போல், எத்தனை சீக்கிரம் முடியுமோ, இவர்களின் திருமணத்தையும் ஒன்றாகவே நடத்தி விடுங்கள் அதுதான் நல்லது" என்றனர்.

திருமணம் மிகச் சிறப்பாக ஆடம்பரமாக நடைபெற்றது. அழகும், குணமும் நிறைந்த இரு மருமகள்மார் ஒரே சமயத்தில் வீட்டில் வந்து இறங்கியதும் வீடே நிறைந்து விட்டது போலிருந்தது. பெற்றவர்களின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. தாங்கள் கேள்விப்பட்டதை விட மருமகள்மார் இருவரும் பன்மடங்கு மேம்பட்டவர்களாய் இருப்பதைக் கண்டதும், அவர்களது சந்தோஷத்தைப் பற்றி என்ன சொல்ல?

கோபிக்கு அன்பான மனைவி மட்டுமல்ல, அன்பான அண்ணியும் கிடைத்ததும் பூரித்துப் போய்விட்டான். அவனுடைய வீடும், உலகமும், இன்பமயமானதாக, மனத்தைக் கவரும்படியாக இருந்ததால் அவன் வீட்டோடு தங்கி விட்டான். ஒரு விதத்தில் வெளி உலகத்துடன் தனது தொடர்பைத் துண்டித்துக் கொண்டு விட்டான் என்றே கூறலாம். முன்னைப் போல், ஊர், உலக விஷயங்களில், உடற்பயிற்சியில் குஸ்தி போடுவதில் அவனுக்கு ஆர்வம் இருக்கவில்லை. ஒன்றை விட்டதும், அவன் இன் னொன்றில் ஒட்டிக் கொண்டுவிட்டதைக் கண்டவர்கள் வியப்படைந்தனர். அவனது இயல்பே, சுபாவமே அப்படித் தான். உலக வழக்கு, கட்டுப்பாடுகளின்படி, அவன் தன் அண்ணியுடன் தாராளமாய் பழகிப் பேச முடிந்தது போல் தன் மனைவியுடன் உறவாட முடியவில்லை. அண்ணியிடம் பேசி சிரித்து மகிழ்ந்தான். அவனது கேலியும், சிரிப்பும், பரிகாசமும் வீடெங்கும் எதிரொலித்தது. சிரிப்பும் களிப்பும் நிறைந்த அந்தச் சூழலில் பெற்றவர் களின் உள்ளமும் மகிழ்ச்சியில் திளைத்தது.

மாணிக் அவர்களுடன் தாராளமாய் கலந்து மகிழும்

சுதந்திரம் இல்லாதவனாக இருந்தான். குடும்பத்தின் பழக்கம் அப்படி. ஆனால் தன் தம்பிக்கும், தன் மனைவிக்கு மிடையே இருந்த அன்பும், பாசமும், இரு சகோதரிகளின் அன்யோன்யமான அன்பு, தன் மைத்துனன் பால் அண்ணி கொண்டிருந்த சிநேக பாவம், தந்தை தாய்க்கும், பிள்ளைகளுக்குமிடையே இருந்த நெருக்கமான பிணைப்பு, வீட்டிற்கு வந்திருக்கும் மருமகள்மார்களின் பணிவும், மரியாதையும், என யாவுமாக நிறைந்து அந்த வீட்டில் இருபத்தி நான்கு மணி நேரமும் பொழிந்த அமுத தாரையைப் பருகிச் சுவைத்து, அதிலேயே மூழ்கி எழுந்த அக்குடும்பத்தினர் ஒவ்வொருவரும் எல்லையில்லாத மகிழ்ச்சியில் ஆழ்ந்திருந்தனர். எவ்விதமான துன்பமோ, துயரமோ, கவலையோ அவர்களுக்கு கிஞ்சித்தும் இல்லை.

இம் மலர்ப் பூங்கா, என்றென்றும் இதேபோல் பசுமையுடன் மிளிர்ந்திருந்தால், இதன் செடிகளும், கொடிகளும், மலர்களும் இன்று போலவே மகிழ்ச்சியுடன் உல்லாசமாய் அசைந்தாடிய வண்ணமிருந்திருந்தால் எத் தனை நன்றாக இருந்திருக்கும். ஆனால் செடி கொடிகளின் உல்லாசத்தை, மலர்களின் மலர்ச்சியை இரக்கமற்ற இலை யுதிர் காலம் தன் துரதிர்ஷ்டம் பிடித்த கால்களால் துவைத்து மிதிக்காத மலர் வனம் இவ்வுலகில் எங்கேயுள்ளது?

அக்குடும்பத்தினரின் இச்சந்தோஷமும் மகிழ்ச்சியும் ஆறு மாதங்கள் கூட நீடிக்கவில்லை. இருண்டதொரு இரவில் ஒருநாள் உவகையால் பூரித்திருந்த இச் சின்னஞ்சிறு உலகத்தின் ஒரு மூலையில் தீப்பற்றிக் கொண்டது.

வீட்டில் நடைபெற இருக்கும் சத்திய நாராயண பூசைக் காக சில முக்கியமான சாமான்களை வாங்கி வர மாணிக் அடுத்திருந்த சிறிய நகரத்திற்குச் சென்றிருந்தான். திரும்பு கையில் இரவு நெடு நேரமாகிவிட்டிருந்தது. அச்சிறு நகரத்திலிருந்து அவனது கிராமத்திற்குச் செல்லும் பாதை, ஜோகுவின் கிராமத்து எல்லையையொட்டிச் சென்றது. சாமான்களின் முடிச்சைத் தோளில் தொங்க விட்டுக்

கொண்டு மாணிக் விரைந்து நடந்து கொண்டிருந்தான். ஜோகுவின் கிராமத்து எல்லையை ஒட்டியிருந்த தோப்பை நெருங்கும்போது தன்னைச் சிலர் பின்தொடர்வது போல் அவனுக்குத் தோன்றியது. திரும்பிப் பார்க்க நினைக்கும் முன்னரே தடாலென்று ஒரு தடிக் கம்பு அவன் தலை மீது ஓங்கி விழுந்தது. தொடர்ந்து சரமாரியாக பல கம்புகளும், கழிகளும் மின்னல் வேகத்தில் நாற்புறமிருந்தும் தாக்கின. செய்வதறியாது மாணிக் திகைத்துப் போனான். அதிக நேரம் அவனால் தன்னைத் தற்காத்துக் கொள்ள இயலாமல் போகவே அவன் மண்ணில் சாய்ந்து விட்டான். அவனது மண்டை பிளந்து குருதி ஆறாகப் பெருகி ஓடியது. யாரோ, தன் குரல்வளையில் தடிக்கம்பை வைத்து நெரிப்பது போல் அவனுக்குத் தோன்றியது. அவனுக்கு மூச்சுத் திணறியது. விழிகள் பிதுங்கின.

கொலைகாரர்கள் சடலத்தை அகற்றுவது பற்றி யோசித்துக் கொண்டிருக்கும் போதே ஆட்கள் வரும் அரவம் கேட்கவே அவர்கள் ஓடிவிட்டனர். வந்தவர்கள் கூட அச்சிற்றூருலிருந்துதான் வந்து கொண்டிருந்தனர். தோப்பை ஒட்டிய பாதையில் குருதியையும், கொலையுண்ட சடலத்தையும் கண்டு அவர்கள் பயந்து போய் திகைத்து நின்று விட்டனர். கிராமத்து மக்கள் இத்தகைய துர் சம்பவங்கள் நேரிடும் போது, பட்டணத்துக்காரர்கள் போல் பயந்து ஓடி விட மாட்டார்கள். நெருக்கடியான அத்தருணங்களில் தங்கள் கடமையை நிறைவேற்ற, நிலைமையைச் சமாளிக்க நன்கு அறிந்தவர்கள் அவர்கள். சடலத்தைக் குனிந்து பார்த்தவர்கள், கொலையுண்டவன் மாணிக் என்றறிந்ததும் அவர்களது துயரத்திற்கு எல்லையே இல்லை. சுற்றும் முற்றுமிருந்த கிராமங்களில் அவ்விரு சகோதரர்களையும், அவர்களது வலிமையையும், வீரத்தை யும் அறியாதவர்களே இல்லை எனலாம். நொடியில் ஜோகுவிற்கும், கோபிக்குமிடையே நடைபெற்ற மற்போர் பற்றிய விஷயம் அவர்களுக்கு நினைவு வந்து விட்டது. பின்னென்ன? தானாகவே யாவும் புரிந்து விட்டது.

ஜோகுவின் கிராமத்தாரின் இக்கோழைத்தனமான செயலைக் கண்டு அவர்கள் ஆத்திரமுற்றனர். கோபிக்குச் சேதியைச் சொல்ல ஒருவன் அனுப்பப்பட்டான். அவனிடம், கிராமத்தார்கள் ஆள்படையுடன், ஆயுதங்களுடன் உடனே புறப்பட்டு வரும்படியும், மாணிக் கொலையுண்டதற்கு அக்கோழைகளைச் சரியானபடி பழி வாங்க வேண்டுமென்றும் சொல்லி அனுப்பினார்கள்.

பாவம் மாணிக்! அவனது இளம் மனைவியின் வாழ்நாள் முழுவதும் துயரமானதாகி விட்டதே! இந்தக் கோழைகளை இந்தப் பழிபாவமே அழித்துவிடும். பழி வாங்க வேண்டுமென்றால் ஆண் பிள்ளைகள் போல் மைதானத்திற்கல்லவா வந்திருக்க வேண்டும்! என மாணிக்கின் சடலத்தைச் சுற்றிலும் அமர்ந்து கொண்டிருந்தவர்கள், தாங்கொணா துயரத்திலும், ஆத்திரத்திலும் பலவாறு பொரிந்து தள்ளிக் கொண்டிருந்தனர்.

கோபியின் வீட்டிற்குச் செய்தி எட்டியது. பெற்றவர்களும் மருமகள்மாரும் மார்பிலே அறைந்து கொண்டு, முட்டி மோதியவாறு கதறினர். மூர்ச்சித்து வீழ்ந்தனர். விஷநாகம் தீண்டியது போலாகிவிட்டான் கோபி. நின்ற இடத்திலேயே தலையைப் பிடித்துக் கொண்டு அப்படியே உட்கார்ந்து விட்டான். தந்தையோ, நெஞ்சிலே பட்ட பலத்த அடியினால் கற்சிலையாகி விட்டார். எதிர் பாராத இந்த இடியினால் தாக்குண்ட அவரது மூளையே மரத்து செயலிழந்து விட்டது.

இத்துர்ச்சம்பவத்தின் செய்தி மின்னலைப் போல் கிராமம் முழுதும் நொடியில் பரவி விட்டது. எங்கும் பெருங் குழப்பம் மூண்டு விட்டது. கிராமம் முழுதும் கழி, கம்புகளை ஏந்திய வண்ணம், கோபியின் வீட்டு வாசலின் முன்னே, துயர மிகுதியினால் ஆவேசம் கொண்டவர்களாய்த் திரண்டு நின்றனர். பெண்கள், கோபியின் தாயையும், இரு மருமகள்மாரையும் தேற்றலாயினர். முதியவர்கள் அவன் தந்தைக்கு ஆறுதல் மொழி கூறி சமாதானப்படுத்தினர். ஆனால் இளமையின் தலைவாயிலில் நிற்பவர்களுக்கு

அமைதி எப்படி? அவர்கள் வாளாவிருப்பது எப்படி? அவர்கள் கோபியைச் சூழ்ந்து கொண்டு அவன் தன் சகோதரன் படுகொலை செய்யப்பட்டிருப்பதற்கு, பழி வாங்க வேண்டுமென்று அறைகூவி அழைத்தனர். சற்று நேரம் வரை சுய நினைவை இழந்திருந்த கோபி அவர்கள் கூறுவதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தான்.

சட்டென்று அவனது விழிகளில் தீப்பொறி பறந்தது. சடாலென்று எழுந்தவன் மூலையிலிருந்த பாணா தடியை எடுத்து சுழற்றியவாறே வெளியே பாய்ந்தோடினான். அவனைத் தொடர்ந்து சிலம்பம் பழகும் வீர இளைஞர்கள் விழிகளில் பழிவாங்கும் அனலுடன் பாய்ந்தோடினர். ஊர் தலையாரி இச்செய்தியைக் கேட்டதும் காவல் நிலையத்தை நோக்கி ஒடினான்.

நடைபெற்ற துர்ச்சம்பவத்தைப் பற்றி ஜோகுவின் கிராமத்தார் ஏதும் அறிந்திருக்கவில்லை. ஜோகுவின் ஒரு சில சீடர்களின் சூழ்ச்சிதான் இது. தங்கள் காரியத்தை முடித்ததும் அவர்கள் தலைமறைவாகி விட்டனர். கிராமத் தார்கள், தங்கள் ஊரை நெருங்கி வரும் பேரொலியைக் கேட்டதும், கொள்ளையர்களின் கூட்டம் கிராமத்தைச் சூறையாட வருகிறது என்று நினைத்தனர். கிராமம் முழுதும் திகிலும் குழப்பமும் பரவிவிட்டது. இளைஞர்கள், கம்பு, கழிகளை எடுத்துக் கொண்டு எதிர்க்கத் தயாராகி விட்டனர். சத்தம் வந்து கொண்டிருந்த திசையில், கிராமத்தை நெருங்கும் முன்னர், வெளியிலே அவர் களுடன் மோதுவதற்கு பாய்ந்தோடினர். குழந்தைகள் அலறின. முதியவர்கள், பெண்களின் நெஞ்சு வேகமாய் அடித்துக் கொணடது.

கோபியின் குழுவினர் கிராமத்தை நெருங்கியதும் தங்கள் முன்னே உயர்ந்து நின்ற கம்பு, கழிகளைக் கண்டதும், அவர்கள், வம்புவழக்கிற்கு முன்னரே தயாராகி விட்டனர் என்று நினைத்தனர். எதையும் ஆர அமர யோசித்துப் பார்க்கும் நிலையில் இரு தரப்பினரும் இருக்கவில்லை. பசித்த புலிபோல் ஒருவர் மீதொருவர் பாய்ந்தனர்.

படபடவென்று கழிகளும் தடிகளும் மோதிக் கொண்டன. இருளில் நூற்றுக் கணக்கான மின்னல்கள் வெட்டியது போல் இருந்தது அக்காட்சி. இருளில் தடியடி பிரயோகம் செய்து கொண்டிருந்தனர். எத்தரப்பில் யார் காயமுற்று வீழ்ந்தான், யாருடைய தடி யார் மீது, எங்கே பட்டது என்பதை அறியும் நிதானமும், அறிவும் யாரிடமும் இருக்க வில்லை. ஒரு பக்கம் மாணிக்கின் கொலைக்குப் பழிக்குப் பழி வாங்க வேண்டுமென்ற ஜ்வாலை கொழுந்து விட்டெரிந்து கொண்டிருந்தது. இன்னொரு பக்கத்தில் தங்களது உயிரையும், உடைமைகளையும் தற்காத்துக் கொள்ள வேண்டுமென்ற சவால் முன் நின்றது. எத்தரப்பும் தனது தோல்வியை எவ்வாறு ஏற்கும்? நொடிப்பொழுதில் உடல்கள் மண்ணில் வீழ்ந்து துடித்தன. பெருகி ஓடிய செங்குருதி சேறாகி ஆங்காங்கே வழுக்கியது. இதையெல்லாம் யோசிக்க யாருக்கு அவகாசம்? உயிரைக் கொடுக்கவும், உயிரைப் பறிக்கவும் பணயமல்லவா வைக் கப்பட்டிருந்தது!

மாணிக்கின் சடலம் காவல் நிலையத்திற்குக் கொண்டு போகப்பட வேண்டும் என்ற உத்தரவைப் பிறப்பித்து விட்டு, பத்து ஆயுதப் பாணிகளான காவலர்களுடன், தலையாரி முன்செல்ல, காவல்துறை அதிகாரி சம்பவம் நடந்த இடத்திற்கு விரைந்தார். தடதடவென்று தடிகள் மோதும் சத்தம் கேட்டு, டார்ச் விளக்கின் ஒளியைப் பொருத்தி, எதிரே கண்ட, பயங்கரமான காட்சியைக் க்ண்ணுற்றதும், கையிலே ரிவால்வரை எடுத்துக் கொண்டு, காவலர்களுக்கு துப்பாக்கிப் பிரயோகம் செய்யும் படி உத்தரவிட்டார்.

துப்பாக்கி வெடிச் சத்தம் கேட்டதும் இரு தரப்பினரும் போலீஸ் வந்துவிட்டது என்பதை அறிந்து கொண்டனர். அவர்கள் தங்களது தடியடிகளை நிறுத்தும் முன்னரே காவல் படை தடதடவென்று வந்து சூழ்ந்து கொண்டு விட்டது. ஓடவிருந்தவர்களைச் சுற்றிலும் காவலர்கள் துப்பாக்கியை ஏந்திய வண்ணம் சூழ்ந்து நின்றனர். டார்ச்

விளக்குகளின் ஒளி கண்களைக் கூச வைத்தது. நொடிப் பொழுதில் அவர்களின் கைகளில் விலங்குகள் மாட்டப் பட்டன.

* * *

கோபியின் இடது கையில் மூன்று விரல்கள் நசுங்கிப் போய்விட்டன. கழுத்தருகில் வலது புறத்து விலாவில் பலத்த அடிபட்டிருந்தது. துயரத்திலும், ஆத்திரத்திலும் தன்னையே மறந்து விட்டிருந்ததால், மறுநாள் காலையில் மாவட்ட ஆஸ்பத்திரியில் கண்ணைத் திறந்தபொழுது தான் எங்கிருக்கிறோம், தன் கையிலும், கழுத்திலும், நெஞ்சிலும் ஏன் கட்டுக் கட்டப்பட்டிருக்கிறது? உடம்பெல்லாம் அணு அணுவாக ஏன் வலிக்கிறது? ஏன் தலைவலி மண்டையைப் பிளக்கிறது என்று அவனுக்கு ஏதும் புரியவில்லை. அவனது இரு புறமும், சுற்றிலும் அவனது கிராமத்து இளைஞர்கள், ஜோகுவின் கிராமத்து ஆட்கள் இதே நிலைமையில் கிடந்தனர். யாவரும் ஒருவரையொருவர், வெறித்து, வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தனர். அவர்கள் யாவருமே தங்களுக்கும், மற்றவர்களுக்கும் ஒரு பிரச்சினையாகி விட்டிருந்தனர். ஆனால் எவருக்குமே எதைப் பற்றியும் பேசவோ, கேட்கவோ திராணி இல்லா மலிருந்தது.

* * *

மாணிக் உயிருடன் இல்லை. காயமுற்றிருந்த கோபியோ சட்டத்தின் முன் குற்றவாளியாகித் தீர்ப்பை எதிர்நோக்கிக் கொண்டிருந்தான். பெற்றவர்கள், மனைவிமார்கள் தலை யில் ஒரேயடியாக மலையே பெயர்ந்து வீழ்ந்து விட்டது. அதன் கீழே அழுந்தி, நசுங்கிக் கிடந்த அவர்கள் துடித்தனர், தவித்தனர், புலம்பினர்.

கிராமத்தில் பல வீடுகளில் சோகம் நிலவியது. பல இல்லங்களில் துயர மேகங்கள் கவிந்திருந்தன. கோபியின் வீட்டின் துயரமும் சோகமும் கிராமம் முழுவதும் வியாபித்து நின்றது. மக்கள் அவன் வீட்டில் கூட்டம் கூட்டமாய்க் கூடி நின்றனர். பெற்றவர்களுக்கு ஆறுதல் சொல்லவும், சமா தானப்படுத்துவதுமாய் இருந்தனர். அவன் வீட்டில் மெல்ல மெல்லத் தணிந்து கொண்டிருந்த துயரம் மீண்டும் வெடித்தெழுந்தது. பெற்றவர்களின் துயரத்தை என்ன சொல்ல? மூத்த மருமகளின் நிலை மிக மோச மாகத்தானிருந்தது. சின்னவளின் நெஞ்சில் வேல் பாய்ந்து விட்டது.

## 4

கோபியின் தந்தைக்கு வயதாகி விட்டது. இரு பிள்ளைகளும் அவரிடமிருந்து பிரிந்து விட்டனர். அவரது இரு கைகளும் ஒடிந்து விட்ட மாதிரியாகி விட்டது. இதயத்தின் உற்சாகம், தெம்பு, யாவற்றையுமே வேதனையின் நெருப்பு சுட்டெரித்து விட்டது. அவரது வாழ்வில் உற்சாகம், நம்பிக்கை எதுவுமே இல்லாமல் ஆகிவிட்டது. மருமகள்மாரின் துயரத்தைக் கண்டு அவர் நாள் முழுதும் மனதிற்குள் துயரப்பட்டுக் கொண்டிருந்தார். சோறு, தண்ணி, வேலைவெட்டி, எதுவும் பிடிக்கவில்லை. மருமகள்மார்களின் மூத்த அண்ணன் அவ்வப்போது வந்து வீடு, வாசல், நில புலன்களைக் கவனித்து ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தான்.

கோபியின் தாயின் நிலமையும் மோசமாகத்தான் இருந் தது. உட்கார்ந்தவாறே கண்ணீர் பெருக்கிய வண்ணம் தன் அருமைப் பிள்ளைகளை நினைத்துப் புழுங்கிக் கொண் டிருந்தாள். சின்ன மருமகளின் இதயத்தில் தைத்த அம்பு,

அவள் நிம்மதியை முற்றும் குலைத்து விட்டிருந்தது. அவள் மிக மென்மையானவள். இளகிய மனம் படைத்தவள். உலகத்தின் துன்பம், துயரம், கவலையைப் பற்றி ஏதும் அறியாதவள். எதிர்பாராது அவள் தலையில் மலைபோல் இடி விழுந்ததும் அவள் துண்டு துண்டாகச் சிதறிப் போனாள். அதிலேயே அழுந்திப் போன அவள் படுத்த படுக்கையாகி விட்டாள். சாப்பாடு, தண்ணீர் எதுவும் அருந்தவில்லை. நாளுக்கு நாள் உருக்குலைந்து போய்க் கொண்டிருந்தாள். மாமனாரும், மாமியாரும் தங்கள் துயரத்தை விழுங்கிக் கொண்டு அவளுக்கு ஆறுதல் கூறினர். அண்ணனும், ஊர் பெண்களும் மனத்தைத் தேற்றிக் 'கொள்ளும்படி பலவாறு எடுத்துரைத்தனர். ஆனால் எதுவுமே அவள் காதில் ஏறவில்லை.

ஒருநாள் கோபின் தந்தை செக்கு மேடையிலிருந்து திரும்பி வரும்போது இரவாகி விட்டதால், கடுமையான குளிர் தாக்கி விட்டது. மறுநாளே காய்ச்சல் கண்டு படுத்துவிட்டார். வாரக்கணக்காயினும் காய்ச்சல் தணிய வில்லை. இருமல் வேறு அதிகமாகிவிட்டது. முடிந்த அளவு வைத்தியம் செய்யப்பட்டது. வீட்டின் அலங்கோலமான, சீர்குலைவில், அவரைக் கவனித்து நல்ல முறையில் வைத்தியம் செய்ய முடியாமல் இருந்தது. சின்ன மருமகளோ முன்னரே படுத்த படுக்கை. மூத்த மருமகளுக்கோ, தனது துக்கத்திலிருந்தே மீள முடியாத நிலை. பாவம் தன்னந்தனியாக, வயதான தாய் எதையெதை எப்படி யெப்படிக் கவனிப்பாள்? இதன் பலன், சற்றுச் சுமாரானதும், கிழவரின் இரு முட்டிகளையும் முடக்குவாதம் பீடித்துக் கொண்டு விட்டது. கொஞ்ச நாட்கள் வரை தடியை ஊன்றிக் கொண்டு கிழவர் மெதுவாக, ஆடி அசைந்து கொஞ்சம் நடந்தார். பிறகு அதுவும் இயலாமல் போய்விடவே தாழ்வாரத்தின் ஒரு மூலையிலிருந்த கட்டிலில் முடங்கிப் படுத்த படுக்கையாகி விட்டார்.

அந்த வீட்டின் மோசமாகிவிட்ட நிலையைப் பார்த்த வர்கள், பெருமூச்செறிந்தவர்களாய் "அடடா! எப்படியிருந்த

வீடு எப்படியாகி விட்டது'' என்றனர்.

சில சமயம் தங்களையே கட்டுப்படுத்திக் கொள்ள இயலாதவர்களாய், அவர்களுடன் கூடவே தாங்களும் அழுதனர்.

வழக்கை நடத்த ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. யாவரும் இதற்காக தாங்கள் பாடுபட்டுச் சம்பாதித்த பணத்தைத் தர தயாராக இருந்தனர். இது கிராமம் சம்பந்தப்பட்ட வழக்கு. கிராமத்து இளைஞர்களின் வாழ்க்கையைப் பற்றியது. இதை விடவும் கிராமத்தாரின் கண்ணின் கருமணி போன்ற, பெற்றவர்களுக்கு ஒரே ஆதாரமான, துர்பாக்கியத்தினால் பீடிக்கப்பட்டு, துடிக்கும் விதவை அண்ணியின் வாழ்க்கையின் ஒரே நம்பிக்கை யுமான, கோபியைக் காப்பாற்ற வேண்டிய பிரச்சினை இது. மருமகள்மார் இருவரின் தந்தையும், அண்ணனும் விபத்து பற்றிக் கேள்விப்பட்டதுமே வந்து விட்டனர். அவர்களின் துயரத்திற்குக் கங்குகரையே இல்லை. அவர்களும் கோபியை மீட்டுக் காப்பாற்ற யாவற்றையுமே அர்ப்பணிக்கத் தயாராக இருந்தனர்.

எத்தனை பணத்தினாலும் சட்டத்தின் வாயை அடைக்க முடியவில்லை. ஐந்து பேர் கொலையுண்டிருந்தனர். ஒன்றிரண்டு பேர் என்றால் காவல்துறை அதிகாரி எப்படியோ சரிக்கட்டி சமாளித்து விடுவார். அவர் ஏதும் செய்ய இயலாதவராகிவிட்டார். மாவட்டத்தின் உயர் அதிகாரி மனது வைத்தால் ஏதேனும் செய்ய முடியும். ஆனால் இந்த நாட்டுப்புற வாசிகளால் அவ்ரை எட்ட முடியாது.

காயமடைந்தவர்கள் குணமடைந்து காவலில் வைக்கப் பட்டிருந்தனர். வழக்கு செஷனிடம் ஒப்படைக்கப்' பட்டிருந்தது. வழக்கு மிகப் பெரிய வக்கீலிடம் தரப்பட்டிருந்தது. அவர் மிகுந்த முயற்சி செய்தும் கூட யாரையும் ஜாமீனில் விடும் கோரிக்கை ஏற்கப்படவில்லை. கோபியின் தந்தை ஒரு முறை சென்று அவனைப் பார்த்து வந்தார். இச்சந்திப்பின் போது, இருவருமே தங்கள்

மனத்தையும் உணர்ச்சியையும் முழுவதுமாக தங்கள் கட்டுக்குள் வைத்துக் கொள்ள முயன்றனர். எவ்விதமான பலவீனத்தையோ வேதனையையோ, வெளிப்படுத்தி பரஸ்பரம் துயரத்தை அதிகப்படுத்திக் கொள்ள அவர்கள் விரும்பவில்லை. தந்தை தனயனுக்கு தைரியமூட்டினார். தனயனோ தந்தையைச் சற்றும் கவலைப்படாதிருக்கும்படித் தேற்றினான். மற்றபடி விசேஷமாக பேச்சு எதுவும் நடக்க வில்லை. விடைபெறும் போது இதயத்தின் வேதனை யினால் மறுகிய உள்ளத்துடன் முகத்தை வேறு புறம் திருப்பிக் கொண்டார். கோபியும் தன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டான். சிறைச்சாலைக் கதவுகளுக்கு வெளியே அவன் தந்தை விழிகளில் பொங்கி வந்த நீரை இமைகளிலேயே தேக்கிக் கொண்டார்.

முடிவில் வழக்கில் தீர்ப்புக் கூறப்பட்டது. எல்லோருக்கும் தண்டனை கிடைத்தது. சிலருக்கு இருபது வருடம். சிலருக்கு நான்கு வருடம். சிலருக்கு ஐந்து வருடச் சிறைத் தண்டனை அளிக்கப்பட்டது. கோபிக்கு ஐந்து வருட சிறைவாசம் வழங்கப்பட்டது.

முடிவில் நாளுக்கு நாள் மோசமாகிக் கொண்டு வரும் வீட்டின் நிலையைக் கண்ட மூத்த மருமகள், இனியும் இந்நிலையை வளரவிடாமல் தடுத்து நிறுத்தாவிடில் இது முற்றும் அழிந்து விடும் என்பதை உணர்ந்தாள். இனித் தன்னைப் பற்றி நினைத்துக் கொள்ள அவளுக்கு என்ன இருக்கிறது? அவளது வாழ்வு முற்றும் குலைந்து விட்டது. அதனுடன் இந்தக் குடும்பமும் அழிந்து, நசித்துப் போய் விட்டால், அவளுக்கேற்பட்டிருக்கும் இக்கொடிய சாபத்தின் பலன் எத்தனை வேதனை அளிப்பதாக, பயங்கரமானதாக இருக்கும் என நினைத்தாள் அவள். இல்லை–இது நடக்கக் கூடாது. இந்தக் குடும்பத்தின் மூத்த மருமகள் அவள். தனது பொறுப்பை அவள் உணர்ந்து கொள்ள வேண்டும். எல்லோருமே அவரவர் துயரத்தில் ஆழ்ந்து கிடந்தால், காரியம் எப்படி நடக்கும். இனி அவளது வாழ்வின் குறிக்கோள், தன் மாமியார், மாமனார், மைத்துனன், தங்கை

முதலியவர்களைக் கவனித்துப் பராமரிப்பதைத் தவிர வேறென்னவாக இருக்க முடியும்? அவளது துர்ப் பாக்கியத்தினால் இந்தக் குடும்பத்தின் நிலை இப்படி யாகிவிட்டது. மாமியார், மாமனார், மைத்துனன், தங்கை, யாவரின் நிலைமையும் அவளால்தான் இப்படியாகி விட்டது. இனியும் தனது துயரத்திலேயே மூழ்கி நின்று, தனது பொறுப்பை அவள் மறந்து விடுவாளா என்ன? இல்லை. இனி அவள் வாழ வேண்டியது அவர்களுக்காகத்தான். நெஞ்சைக் கல்லாக்கிக் கொண்டு இனி அவள் அவர்களைக் கவனிப்பதில், பணிவிடைகள் செய்வதில் தன்னை ஈடுபடுத்திக் கொள்வாள் என்ற முடிவிற்கு வந்தாள் அவள். பொங்கிய துயரமும் ஆற்று வெள்ளமும் ஒரு நாள் தணிந்துதானே ஆக வேண்டும்!

அன்றைய தினத்திலிருந்து அவள் கருணையே வடிவாகி விட்டாள். வேதனையில் வெந்து, வெந்தழலாகிவிட்டிருந்த உள்ளங்களில் சேவை, சிகிட்சை, அன்பு, பக்தியெனும் குளிர் நிழலாகப் பரவி நின்றாள் அவள். விடி வேளையில் எழுந்து நீராடி, இறைவனை வழிபட்டாள். பிறகு மாமியார், மாமனார், தங்கையைக் கவனித்து அவர்களுக்கு பணிவிடைகள் செய்வதில் ஈடுபட்டுவிடுவாள்.

அவளது வெறும் நெற்றி, வெறும் கைகள், வெள்ளை ஆடை அணிந்த, அவளது உருக்குலைந்த உடலைக் கண்ட மாமனார் மனதிற்குள் கதறினார். அவரால் எதுவும் பேச முடியவில்லை. அவள்தான் அவருக்குக் கைகொடுத்துக் கட்டிலில் உட்கார வைத்து, கை முகம் கழுவி விட்டாள். எதிரே அமர்ந்து அவருக்கு உணவளித்தாள். பொம்மை போல் அவர் எல்லாம் செய்தார் என்றாலும் நெஞ்சிலே புயலாக எழுந்து மண்டிய வேதனையுடன், அவள் கண் எதிரே இருக்கும் வரை, ஊமைபோல், அவளது கருணை நிரம்பிய முகத்தை இமையாது பார்த்த வண்ணமிருப்பார்.

மாமியாருக்கு லேசான திருப்தி! போகட்டும் மூத்த மருமகளாவது தன்னை வீட்டு வேலைகளில் ஈடுபடுத்திக் கொள்கிறாளே என்ற சந்தோஷம். வேலையில் ஈடுபட்டால்

துயரமாவது சற்று மறக்கும். கூடவே மனதிற்கும் ஆறுதலாக இருக்கும். தங்கையைப் பொறுத்த வரையில் அவளுக்கு அவள் தாயாகிவிட்டிருந்தாள். முன்னர் அவளைத் தன் உடன்பிறப்பாக நேசித்தவளுக்கு இன்று, சகோதரியின் அன்புடன் கூடவே ஒரு தாயின் அன்பும், பரிவும், பாசமும், சேவையும், தியாகமும் கூடத் தேவையாக இருந்தது. மூத்தவள் இவை யாவற்றையுமே அவளுக்கு அளிக்கத் துவங்கி விட்டிருந்தாள். அவளைச் சிறு குழந்தை போல் மடியில் கிடத்தி மருந்தூட்டினாள். உணவளித்தாள். உடை மாற்றிவிட்டாள், தலைவாரிப் பின்னிவிட்டாள். குங்குமச் சிமிழை அவள் முன்னே வைத்து "இந்தா! வகிட்டில் குங்குமம் இட்டுக் கொள்" என்றாள்.

இதைக் கேட்டதும் சின்னவளின் வெறிச்சிட்ட பார்வை மூத்தவளின் பாழ் நெற்றியில், வகிட்டில் படியும். அவள் நெஞ்சிலிருந்து கேவலொன்று வெடித்தெழும். கண்ணீர் நிறைந்த விழிகளை வேறுபுறம் திருப்பிக் கொண்டு, "இது கிடக்கட்டும் அக்கா!" என்றாள்.

மூத்தவள் அவளை மடியில் வைத்துக் கொண்டு, விம்மலை மனத்திலேயே அடக்கிய வண்ணம், "அப்படிச் சொல்லாதடி! என் சௌபாக்கியம் பறிபோய்விட்டதால் என்ன? உனது சௌபாக்கியத்தை, வகிட்டின் குங்குமம் நிலைத்து நிற்க கடவுள் அருளட்டும். அதைப் பார்த்துக் கொண்டே நான் என் துன்பகரமான வாழ்நாளைக் கழித்து விடுவேன்! இந்தா! இதை எடுத்து இட்டுக் கொள்" என்றாள்.

சின்னவள், தன் அக்காவின் மடியில் முகம் புதைத்து விம்மி, விம்மி அழ ஆரம்பித்தாள். மூத்தவளின் விழிகளும் நீரைச் சொரிந்தன. ஆனால் மறுகணம் தன்னைச் சமாளித்துக் கொண்டவளாய்– "என் கண்ணே! இப்படியெல்லாம் செய்யக் கூடாது" என்றவளாய் தன் முந்தானையால் அவள் கண்களைத் துடைத்தவாறே– "இந்தா! இப்பொழுது குங்குமத்தை இட்டுக் கொள். என் நல்ல தங்கையல்லவா?" என்றாள்.

சின்னவள் கண்களிலே பொங்கி வரும் கண்ணீர்ப்

புயலுடன், நடுங்கும் விரல்களால், குங்குமச் சிமிழிலிருந்து, குங்குமத்தை எடுத்தாள். மூத்தவள், இதயத்தைப் பிழியும் வேதனையுடன், நீர் கோத்து நின்ற விழிகளை வேறு புறம் திருப்பிக் கொண்டாள்.

*    *    *

கணவனைப் பற்றிய நினைவுகள் மூத்தவளைப் பெரிதும் துன்புறுத்தின. ஒவ்வொரு கணம், நீர் திரையிட்ட அவளது விழிகளில், கணவனது பல்வேறு தோற்றங்கள் மின்னலிட்டன. பூசை செய்ய உட்காரும் போதெல்லாம்– ''கடவுளே என்னையும் அவரது பாதத்தில் சேர்த்து விடு'' என வேண்டிக் கொள்வாள்.

சில சமயம் தன் மைத்துனனும், தானுமாய் சிரித்தது, கேலியும் பரிகாசமுமாய் சந்தோஷமாகச் சிரித்த சிரிப்பின் நினைவு கூட வருவதுண்டு. அக்கணங்களில் அவை யாவுமே ஒரு கனவென்று அவளுக்குத் தோன்றியது. அந்த சந்தோஷமும், சிரிப்பும், களிப்பும் ஒருநாள், இப்படி என்றென்றுமாய் முடிந்துவிடும், அதன் எதிரொலி உள்ளத்தின் ஒவ்வொரு அணு அணுவிலும், வேதனை நிறைந்த பாடலாக நிலைத்து நின்று விடும், என யார் கண்டனர்? தன் மைத்துனன், தன் அண்ணன் கொலையுண்ட துயரத்தினால் வெறி கொண்டவனாகி, தன்னுடைய சுகத்தையும், வாழ்க்கையையும், எவ்வாறு பலி இட்டுவிட்டான் என்பதும் கூடவே நினைவு வரும். அக்கணங்களில் அவளையுமறியாமலேயே அவளது பார்வை தங்கையின் பால் திரும்பும். தன் மைத்துனனின் வாழ்வின் சுக துக்கங்கள் அவளுடன் பிணைக்கப் பட்டிருக்கின்றன அன்றோ. தான் எத்தனையோ கவனித்தும், பணிவிடைகள் செய்தும் அவள் பறித்த மலர்போல் வாடிக் கொண்டே போவதையும் அவள் கவனிக்காமலில்லை. எத்தனையோ விதமாக அவளுக்கு ஆறுதல் மொழிகளைக் கூறினாள், பலவாறு அறிவுறுத்தினாள். எடுத்துரைத்தாள். ஆனால்

அவள் எதையும் புரிந்து கொள்ளவில்லை. தன் மைத்துனன் திரும்பி வந்து தன் தங்கையின் இந்நிலையைக் கண்டால் என்ன நினைப்பான், அவனது மனநிலை எப்படியிருக்கும் என அவள் எண்ணினாள்.

துக்கத்தைச் சகித்துச் சகித்து அவள் திடமும் உறுதியும் பெற்றவளாகி விட்டாள். முன்னை விட அதிகமாகத் தங்கையைப் பராமரிப்பதில் முழு மனத்துடன் ஈடுபட்டாள். அவள் தனது தங்கை மட்டுமல்ல, தன் அன்பான மைத்துனன் நம்பி ஒப்படைத்திருக்கும் விலை மதிப்பற்ற உயிர் என்றும் அவளுக்குத் தோன்றியது. அவன் நம்பிக்கையுடன் விட்டுச் சென்றிருக்கும் பொருளைப் பத்திரமாகப் பாதுகாப்பது அவளது தலையாய கடமை யென்றும் கருதினாள்.

ஆனால் அவளுடைய பணிவிடைகளும், பராமரிப்பும் அவளது தங்கையிடம் எந்தவிதமான மாறுதலையும் விளை விக்கவில்லை. பலன் ஏதுமிருந்ததாகவே தோன்றவில்லை. சில சமயம் அவளது உள்ளம் பயங்கரமான அச்சத்தால் பீடிக்கப்பட்டு விடும். அவள் பூசை அறையில் கடவுளின் முன்னே அமர்ந்து, "கடவுளே இந்த துரதிருஷ்டம் பிடித்த குடும்பத்தின் மீது தயை காட்டு. இத்தனை நடந்தும் உனக்குத் திருப்தி ஏற்படவில்லை என்றால், அபாக்கியவதியான என்னை எடுத்துக் கொண்டு உனது சீற்றத்தைத் தணித்துக் கொள்" என்று வேண்டிக் கொள்வாள்.

ஆனால் கடவுள் தன் கருணைக் கடாக்ஷத்தை அக்குடும்பத்தின்பாலிருந்து திருப்பிக் கொண்டு விட்டார் போலும். சின்னவளின் உடல் நிலை தேறக் கூடாது என்றிருந்தது போலும். அது தேறவேயில்லை. அவளது உடல்நிலை நாளுக்கு நாள் மோசமாகிக் கொண்டே வந்தது. ஒரு நாள் அவள் சகோதரன் வந்து அவளைத் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றான். இடமும் காற்றும் மாறினால், தன் அம்மா, அண்ணி, தோழிகளினிடையே இருந்து மனம்

தெளிவுற்றால், அமைதியுற்றால் உடல் நிலை தேறக்கூடும் என அவன் நினைத்தான். மூத்தவளைக் கூடச் சில நாட்கள் தங்களுடன் இருக்க அழைத்துச் செல்லவே விரும்பினான். ஆனால் அவளில்லாமல், இந்த வீட்டில் என்ன காரியம் நடக்கும் என நினைத்தவனாய் அவளை விட்டுச் சென்று விட்டான். பல்லக்கில் ஏறும் முன்னர் சின்ன மருமகள் விம்மி விம்மி அழுதாள். மாமியாரையும், அக்காவையும் தழுவிக் கொண்டு, கடைசி முறையாக அவர்களிடம் விடை பெற்றுச் செல்லுவது போலிருந்தது அக்காட்சி. மாமனாரின் பாதங்களைத் தனது கண்ணீரால் கழுவினாள். முதியவர் கரங்களால் கண்களைப் பொத்திக் கொண்டு சிறு குழந்தை போல் விம்மி விம்மி அழுதார்.

இதுதான் அவள் கடைசி முறையாக அவர்களிடம் விடை பெறுவது என்று யாருக்குத் தெரியும்? அம்மா, அப்பா, அண்ணா, அண்ணி, எவரும் அவளுக்கு எந்தக் குறையும் வைக்கவில்லை. பணத்தைத் தண்ணீராகச் செலவிட்டனர். ஆனால் எது விதித்திருந்ததோ, அதுதான் நடந்தது. அவளது மென்மையான உள்ளத்தில் தைத்த கூரிய அம்பு, அவள் உயிரை வாங்கிய பின்தான் அமைதியுற்றது.

மாமியார், மாமனார், உடன் பிறந்தவளுக்கு இத்துயரச் செய்தி எட்டியது. அவர்களின் நிலை என்னவாயிற்று என்பதை வர்ணிக்கவே இயலாது. அவர்களின் நெஞ்சிலே ஆறாத ரணமாகி விட்டிருந்த புண்ணிலே இன்னொரு வேலும் பாய்ந்துவிட்டது.

# 5

ஆரம்பத்தில் கோபியின் தந்தை ஒவ்வொரு மாதமும் அவனைச் சந்திக்க சிறைச் சாலைக்குச் செல்லுவார். பிறகு அவரால் நடக்க இயலாமல் போனதும் அவனது மாம

னாரும், மைத்துனரும் அடிக்கடி அவனைச் சந்திக்கச் சென்று வந்தனர். ஒவ்வொரு தடவையும் கோபி தன் தாய், தந்தையரைப் பற்றி, அண்ணி, வீட்டுச் சமாசாரங்கள், வயல் நிலவரங்களைப் பற்றியெல்லாம் விசாரிப்பான். அவர் களும் பொய்யும் மெய்யுமாய் ஏதேதோ சொல்லுவதுண்டு. சங்கோசத்தினால் கோபி தன் மனைவியைப் பற்றி விசாரிக்கமாட்டான். அவர்களும் சொல்லமாட்டார்கள். சிறைவாசத்தின் துயரமும், சிரமமும் குறைவானதா என்ன? அவர்கள், பின்னும் அவனது உள்ளத்தைக் காயப்படுத்தும் விஷயத்தைச் சொல்லி அவனது வருத்தத்தை மேலும் அதிகரிப்பானேன்?

சிறையில் எல்லோருடைய நினைவுகளும் கோபியைப் பெரிதும் வருத்துவதுண்டு. ஆனால் அண்ணியின் துயரத்தைப் பற்றி அவனுக்கேற்பட்ட கவலை, வேறெதைப் பற்றியும் இருக்கவில்லை. விதவைக் கோலத்திலிருக்கும் அண்ணியின் உருவம் எப்பொழுதும் அவன் கண்முன்னே தோன்றும். எந்த அன்பான அண்ணியால், அவளது உள்ளத்திலிருந்து பெருகிய அன்பினால் நெஞ்சமெல்லாம் நிறைந்து தன்னை மறந்த சந்தோஷத்தில் திளைத்தானோ, அதே அண்ணியை, விதவைக் கோலத்தில் எந்தக் கண்களால் பார்ப்பான்? வெறிச்சோடும் வகிடு, வளையல் களற்ற கரங்கள், வாடிய முகம்.......

சிறை வாசத்தில், உழைப்பதற்கு அவன் பின் வாங்கியதேயில்லை. உழைப்பாளியின் சரீரத்தில் கடுமை யான உழைப்பின் பலன் என்னவாகும்? வீட்டைப் போல் நல்ல சாப்பாடு சாப்பிடக் கிடைத்தால், கவலைகள் அற்ற வாழ்க்கையாக இருந்தால், சிறையிலும் கோபி முன் னெப்படி இருந்தானோ அப்படியே இருந்திருப்பான். பாலும், நெய்யுமாய் சாப்பிட்டு வளர்ந்த தேகம் இப்பொழுது வறட்டுச் சப்பாத்தி, கல்லும், கசடும் கலந்த பருப்பையும் சாப்பிட நேர்ந்தது. தவிரவும் இருபத்து நான்கு மணி நேரமும் அண்ணியைப் பற்றிய கவலை வேறு. கோபி

இளைத்துத் துரும்பாகி விட்டான் என்றாலும், உடற்கட்டுப் பயில்வானுடையதாயிற்றே. கடுகு சிறுத்தாலும் காரம் போகுமா? அதட்டவோ, மிரட்டவோ யாருக்குத் தைரிய முண்டு? கோபிக்கும் யாருடனாவது நேரடியாக மோத ஏது அவகாசம்? இரவும் பகலும் அவன் தன்னுடைய கஷ்டங் களைப் பற்றிய சிந்தனையிலேயே மூழ்கிக் கொண்டிருந் தான். இத்தனை பெரிய சிறைக்கூடம் கூட தனிமையான ஒரு சூழல் போலவே அவனை எல்லை கட்டி வைத்திருந்தது.

வழக்கு நடந்தபோது அவன் மாவட்ட மருத்துவ மனையில் படுத்திருந்தான். விலாவில் பட்டிருந்த அடி அபாயகரமானதாக இருந்தது. வலி குறையவே இல்லை. சிறிய மருத்துவமனையானதால் எக்ஸ்ரே போன்ற வசதி கள் ஏதுமில்லை. யாரோ ஒருவனுக்காக யார் இதற் கெல்லாம் சிரமமெடுத்துக் கொள்ளப் போகிறார்கள்? வைத்தியம் நடந்து கொண்டே இருந்தது. வழக்கும் தொடர்ந்து கொண்டிருந்தது. பிறகு மீண்டும் அவன் சிறைக்கு அனுப்பப்பட்டு விட்டான். தண்டனை பெற்ற பின் கோபி பனாரஸ் மாவட்டச் சிறைச்சாலைக்கு அனுப் பப்பட்ட பின்னும் அவனுடைய நிலைமை அப்படியே தானிருந்தது. அவனிடம் உறுதி இருந்ததால் யாவற்றையும் சகித்துக் கொண்டிருந்தான். பொறுமையுடன் அனுபவித் துக் கொண்டுமிருந்தான்.

பனாரஸ் மாவட்ட மருத்துவமனையில் அதிர்ஷ்ட வசத்தால் ஒரு நல்ல கம்பௌண்டர் இருந்தான். அவனும் கோபியின் பக்கத்து ஊர்க்காரன்தான். சிறைச்சாலை களின் மருத்துவ மனைகளில் விசேஷமான, குறிப்பிட்ட மருந்துகள் எதுவும் இராது. அந்தக் கம்பௌண்டரின் சிகிச்சையாலும், கவனிப்பாலும், கோபியின் உடலில் வலுவும் சேர்ந்து, வலி மெதுவாகக் குறையத் துவங்கியது. அங்குதான் அவன் மட்டுரூ சிங்கைச் சந்தித்தான். அவன் காக்கிராவின் ஆற்றங்கரையைச் (தீயர்) சேர்ந்த ஒரு பிரசித்தி பெற்ற பயில்வான். தாயாதிகள் என்பதைத் தவிர ஒரே தொழிலைச் சார்ந்தவர்களாகவும் இருந்ததால்,

இருவரும் ஒருவரையொருவர் முன்னரே அறிந்திருந்தனர். கோபியின் கிராமம் ஆற்றங்கரையிலிருந்து ஐந்து மைல் தூரம்தான். மட்டுரூ, காக்கிராவின் கரையில், கற்பாங்கான மைதானத்தில் ஒரு குடிசை கட்டிக் கொண்டு மனைவி மக்களுடன் வசித்து வந்தான். யானையைப் போன்று பலசாலியான அவனது வலிமை மிகுந்த உருவத்தைக் கண்டு, பொறாமை கொண்ட யாரோ ஒரு பயில்வான் 'பீடா'வில் அவனுக்கு என்ன வைத்துக் கொடுத்து விட்டானோ தெரியவில்லை. மட்டுரூவிற்கு மூச்சுத் திணறத் துவங்கிவிட்டது என்று பரவலாக ஒரு பேச்சு உண்டு. மட்டுரூவிற்கு ஆஸ்துமா நோய் வந்து விட்டது. எத்தனையோ வைத்தியம் செய்து கொண்டான். ஆனாலும், வேறு வழியின்றி மற்போர் புரிவதையும், பயிற்சியையும் விட்டுவிட்டு, திருமணம் செய்து கொண்டான். ஒரு சாதாரணக் குடியானவனைப் போல் வாழ்க்கை நடத்தத் துவங்கினான். இப்பொழுது அவனுக்கு மூன்று பிள்ளை களிருந்தனர்.

ஒரு விதத்தில் அவன் அந்த ஆற்றங்கரைப் பகுதியின் ராஜாவாகத்தானிருந்தான். கங்கையின் கரையையொட்டி மைல் கணக்காகப் பல பகுதிகளில் அவனுடைய தனி ஆட்சி நடந்தது. காக்கிராவின் நீர்ப் பெருக்குடன் அவனுடைய 'மாளிகை'யும், வீழ்வதும் எழுவதுமாய் இருந்தது. கார் காலத்தில் காக்கிராவின் வெள்ளப் பெருக்கு உயர்ந்தெழும்போது, அதனுடனேயே மட்டுரூவின் குடிசை யும் மேலெழும்பி விடும். புரட்டாசி மாதத்தில் கங்கை பொங்குமாங்கடலாகி விடுவாள். அப்பொழுது மட்டுரூவின் குடிசை ஏதாவதொரு கரையோரக் கிராமத்தில் ஒதுங்கி விடும். வெள்ள நீர் வடிய வடிய மட்டுரூவின் குடிசையும் இறங்கி வரத் துவங்கும். கார்த்திகை மாதம் நெருங்க, நெருங்க அது தன் பழைய இடத்தை அடைந்து விடும். குழந்தை தன் தாயின் தலைப்பை விடாது பற்றிக் கொள்வது போல் மட்டுரூவும் "கங்கைத்தாயின்" தலைப்பை, அதாவது கரையை, ஒரு கணம் கூட விட்டுப்

பிரிய மாட்டான்.

ஆற்று வெள்ளம் வடிந்து பின்வாங்கிச் செல்லும்போது, மைல் கணக்காக மணல் மேடிட்டு விடும். அம்மணல் வெளியில் முட்புதர்களும், நாணல்களும் காடாக முளைத்து விடும். வைகாசி, ஆனி மாதங்களில் இக்காடுகள் தளதளவென்று வளர்ந்தோங்கி நிற்கும்போது, ஜமீன்தார் இவைகளை வெட்டி, விலைக்கு விற்று விடுவார். மக்கள், கூரை வேயவும், குடிசை போடவும், வேலி கட்டவும், இவைகளை வாங்குவார்கள். மீண்டும் மழைக்காலம் வந்ததும், நாலாபக்கமும் சேறும் சகதியுமாய், நீர் பெருகத் துவங்கிவிடும்.

மட்டுரூ சிலம்பக் கூடத்திலும், மல்யுத்தத்திலும் ஈடுபட்டிருந்த வரையில் மிகச் சந்தோஷமாக இருந்தான். அவனுக்கு எதைப் பற்றிய கவலையும் இருக்கவில்லை. படித்துறையிலேயே அவனுக்கு நல்ல வரும்படி. பால், தயிர், சாப்பாட்டுக்குத் தேவையான பொருட்கள் நிறையவே கிடைத்துவிடும். நாட்கள் மிக ஆனந்தமாய்க் கழிந்தன. பால்காரன் எவனும் அவனுக்குப் பால் தராமல் படகில் ஏறமாட்டான். எந்த 'பனியா'வும் (வியாபாரியும்) மட்டுரூவிற்கு காணிக்கை செலுத்தாமல் அந்த வழியாகச் செல்லமாட்டான். மட்டுரூவிற்கு இதுவே தாராளமானதாக இருந்தது. நன்றாகச் சாப்பிடுவது, தண்டால் எடுப்பது, படித்துறையில் அமர்ந்து, உருண்டு, திரண்ட, மினுமினுக்கும் உடலைக் காட்டிக் கொண்டிருப்பதைத் தவிர அவனுக்கு வேறு வேலை இருக்கவில்லை.

குஸ்தி, மல்யுத்தம், முதலியவற்றை விட்டுவிட்டபின், குடும்பஸ்தனாகிவிட்டான். இனாமாகக் கிடைத்து வந்த பால் தயிர் போன்றவையும் நின்று போயின. அவன் தனது குடிசையைச் சுற்றிலுமிருந்த காட்டை வெட்டிச் சீர்படுத்தினான். மாமனாரிடமிருந்து, ஏரும், கலப்பையும், உழவு மாடுகளும் வாங்கி, நிலத்தை உழ ஆரம்பித்தான். ஆற்றுப் பாங்கான நிலம் விளைந்து கொட்டியதும் ஊரார் மூக்கின் மேல் விரலை வைத்தனர்.

இரண்டு, மூன்று ஆண்டுகளுக்குள்ளேயே மட்டுருவின் பொருளாதார நிலை உயர்ந்து விட்டது. வீட்டு வாசலில் ஒரு ஜோடி உழவு மாடுகளும், பால் வளம் மிகுந்த ஜமுனா பாரி எருமைகளும் காட்சி தந்தன. மட்டுருவின் ஊக்கமும், உற்சாகமும் அதிகரித்தது. மேலும் காட்டை அழித்து தன் நிலத்தின் எல்லைகளை விஸ்தரித்தான். உதவிக்கு தன்னுடைய மைத்துனன் ஒருவனையும் தன்னிடமே அழைத்துக் கொண்டான். கடுமையாகப் பாடுபட்டு உழைத்தான், பாடுபட்டு உழைத்துச் சிந்திய வியர்வை, பொன்னான நீராகிப் பெருகிப் பாய்ந்து விளைச்சல் கண்டது. பயிர்கள் அசைந்தாடின. வளம் கொழித்தது.

ஜமீன்தாரின் காதுகளுக்கு இச்செய்தி எட்டியதும் அவர் மனம் குமைந்தார். அந்த நிலம் இப்படித் தங்கமாக வாரிக் கொட்டும் என்று யார் கண்டது? அங்கு அடர்ந்து கிடந்த முட்புதர்கள், நாணற்காடுகளையே அவர் பெரிதென நினைத்திருந்தார். சுற்றும் முற்றுமிருந்த குடியானவர்களுக்கும் மார்புயரம் வளர்ந்து செழித்திருந்த 'ரபி' விளைச்சலைக் கண்டதும் நாவில் நீர் சொட்டியது. ஆனால் மட்டுரு போல், துணிவும், உழைப்பும் இருந்தால், தைரியமாக, காட்டை அழித்துப் பயிர் செய்யலாம். அவர்கள் நேராக ஜமீன்தாரிடம் சொல்லி, தாங்கள் விவசாயம் செய்ய நிலம் தரும்படி அவரிடம் கேட்டனர். ஜமீன்தாருக்கென்ன? அவர் கேட்காமலேயே வரம் கிடைத்து விட்டது. அவர்களுக்கு வேறென்ன வேண்டும்? அவர்கள் மடமடவென்று இரண்டு மடங்கு, நான்கு மடங்கு குத்தகையைப் பெற்றுக் கொண்டு குடியானவர்களின் பெயருக்கு நிலம் கொடுக்க ஏற்பாடுகளைச் செய்யத் துவங்கி விட்டனர்.

மட்டுருவின் காதுகளுக்கு இச்செய்தி எட்டியதும், வந்தது ஆபத்து என்று அவனுக்குத் தோன்றியது. அவன் கிராமம் கிராமமாகச் சென்று குடியானவர்களுக்கு, அவர்கள் செய்யும் முட்டாள்தனமான செயலைப் பற்றி எடுத்துரைத்தான். கங்கைத்தாய் வழங்கியிருக்கும் நிலத்தின் மீது ஜமீன்தார்

களுக்கென்ன உரிமை இருக்கிறது? குத்தகையையும், உரிமையையும் பெற்றுக் கொள்ள அவர்களுக்கென்ன உரிமை? யாருக்கு நிலத்தைப் பண்படுத்தி, உழுது பயிரிட விருப்பமோ, அவர்கள் சந்தோஷமாக வந்து, அவனைப் போலவே காட்டை அழித்து, நிலத்தைப் பண்படுத்தி, உழட்டும், விதைக்கட்டுமே! ஜமீன்தார்கள் இந்த நிலத்திற்கான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டிய அவசியமென்ன? நீங்களெல்லாம் புதியதொரு வழக்கத்தை உண்டாக்கி, அந்த ஜமீன்தார்களின் மனத்தைக் கெடுத்துக் கொண்டிருக்கிறீர்களா? என்றெல்லாம் வினவினான்.

அப்பாவி குடியானவர்களுக்கு இதெல்லாம் என்ன தெரியும்? உண்மையில் அவர்களுக்கு மட்டுருவிடம் தான் அதிகம் பயம். தங்களை மட்டுரு தடுத்துவிட்டால் என்ன செய்வது! என்று அஞ்சினார்கள். மட்டுரு இப்படி அவர்களை வரவேற்கத் தயாரென்று அவர்களுக்கென்ன தெரியும்? விஷயம் தெரிந்ததும் அவர்கள் மிகவும் பச்சாதாபப் பட்டுக் கொண்டு, "இப்பொழுது நாங்கள், உரிமைக்கும், குத்தகைக்குமாய், மூன்று வருடங்களுக்கு முன் பணம் கொடுத்து விட்டோமே! இது முன்னரே தெரிந்திருந்தால்—" என்றனர்.

"இன்னமும் ஒன்றும் கெட்டுவிடவில்லை"– என்றான் மட்டுரு. "நீங்கள் கொடுத்திருக்கும் தொகையைத் திரும்பப் பெற்றுக் கொள்ளுங்கள். எங்களுக்கு நிலம் தேவையில்லை, என்று நேரிடையாகவே, தெளிவாகச் சொல்லிவிடுங்கள். இதனால் என்ன ஆகும்? ஒருபோகம் விளைவிக்க முடியாது அவ்வளவுதான். அடுத்த வருடம் உங்களை எவனும் தடுக்க முடியாது. கங்கைத்தாயின் மடியில் எல்லாக் குடியானவர்களுக்கும் இடமுண்டு. இங்கென்ன நிலத்திற்கா பஞ்சம்? நீங்கள் வேண்டுமென்றே இந்தக் கொடுக்கல் வாங்கல் ஆரம்பித்து விட்டிருக்கிறீர்கள். ஒன்றை மட்டும் நன்றாக நினைவு வைத்துக் கொள்ளுங்கள். ஒரு தரம் இந்த ஜமீன்தார்களுக்கு நீங்கள் ருசி காட்டிவிட்டால், நீங்கள் மட்டுமல்ல, உங்கள் குழந்தை குட்டிகளும் கூட அவர்களது

பிடியில் சிக்கிக் கொண்டு விடுவார்கள். அவர்களது பேராசையெனும் நாக்கு ருசி கண்டு 'சுரசை'யைப் போல நீண்டு விடும், பிறகென்ன ஒருநாள் எல்லோரையுமே அது விழுங்கி விடும். இதற்கு மாறாக, நாமெல்லோரும் ஒன்றாகி, ஒருமனதாய், ஜமீன்தார்களை எதிர்பார்க்காமல் நாமே அந்நிலங்களின் மீது நமது உரிமையை நிலைநாட்டிக் கொண்டு விட்டால் இந்த ஜமீன்தார்கள் நம்மை ஒன்றும் செய்ய முடியாது. கங்கைத்தாயின் மீது அவர்களுக்கு பரம்பரைச் சொத்துரிமை கிடையாது. கங்கைத்தாயின் நீரைப் போலவே அவளது நிலத்தின் மீதும் எல்லோருக்கும் சம உரிமையுள்ளது. தங்களுக்கு மட்டும் பரம்பரையான உரிமையுள்ளதென்று அந்த ஜமீன்தார்கள் நினைப்பது தங்கள் கழுத்தைத் தாங்களே வெட்டிக் கொள்வது போன்றது. நீங்களெல்லோரும் நான் கூறுவதை ஏற்றுக் கொள்ளுங்கள். எனக்கு உங்களது முழு ஒத்துழைப்பையும் தாருங்கள். பிறகு அந்த ஜமீன்தார்களால் நம்மை என்ன செய்ய முடிகிறதென்று பாருங்கள்'' என்றான்.

குடியானவர்கள் ஏதேதோ சாக்குப் போக்குகள் கூறித் தாங்கள் கொடுத்திருந்த முன் பணத்தைத் திருப்பிக் கேட்டதும், ஜமீன்தார்கள் புன்னகை பூத்தனர். ஜமீன் தார்களின் பெட்டிகளுக்குள் போன பணம், பாம்பின் வாய்க்குள் போய்விட்ட எலிமாதிரிதான். எலி என்னதான் கீச்கீச்சென்று கத்தினாலும், துடித்தாலும், முரண்டினாலும், ஒருதரம் வாயில் சிக்கி விட்டால் தப்புவதென்பது இயலவே இயலாது. அப்பாவி குடியானவர்களும், கீச், மூச்சென்று கத்துவதைத் தவிர வேறென்ன செய்ய முடியும்? அவர்கள் குடியானவர்களை அதட்டி, மிரட்டித் துரத்தி விட்டனர். கொடுத்த தொகைக்கு ரசீது, கிசீது கிடையாது. அவர்களால் வேறென்ன செய்ய முடியும்? ஆனால் இதன் பலனாக மற்ற குடியானவர்கள் நிலத்தை ஆர்ஜிதம் செய்து கொள்ளும் ஏற்பாடுகளை நிறுத்தி விட்டனர்.

தங்களுடைய வரும்படி பறிபோனது மட்டுமல்ல, நிலத்தைக் குத்தகைக்கு எடுத்துக் கொள்ளவும் குடியானவர்

கள் பின்வாங்குவதைக் கண்ட ஜமீன்தார்களுக்கு வந்த கோபத்திற்கு அளவேயில்லை. விசாரித்ததில் இதற்கெல் லாம் மூல காரணம் மட்டுரூ என்று தெரிய வந்ததும், பல ஜமீன்தார்கள் ஒன்றுகூடி ஒருநாள் மட்டுரூவைக் கூப்பிட்டு அனுப்பினார்கள்.

மட்டுரூ இதுவரை தன் பகுதியில் தனிக்காட்டுச் சிங்கம் போல இருந்து வந்தான். நேரடியாக அவனைச் சீண்ட ஜமீன்தார்களுக்குத் தைரியம் இல்லை. மட்டுரூ பயில்வான் கையில் நூற்றுக்கணக்கான சிலம்பக்காரர்கள் இருக்கின்ற னர் என்ற நம்பிக்கை அக்கம் பக்கத்துக் கிராமங்களில் பரவி இருந்தது. அவன் எப்பொழுது வேண்டுமானாலும் பட்டப் பகலிலேயே கொள்ளையடிக்க முடியும் என்ற அச்சமும் இருந்தது. இதனால் கிராமங்களிலெல்லாம் அவனுடைய ஆதிக்கமும், செல்வாக்குமிருந்தது. அந்த வழி யாகச் செல்லுபவர்கள் யாராக இருந்தாலும் அவனுக்கு வணக்கம் தெரிவிக்காமல் செல்லமாட்டார்கள்.

அழைப்பு வந்ததும் மட்டுரூ முறுக்கிக் கொண்டான். நான் எந்த ஜமீன்தாரின் குடிபடையும் அல்ல, யாருக்குத் தேவையோ அவர்களே தன்னை வந்து சந்திக்கட்டும் என்று தெளிவாகச் சொல்லி அனுப்பி விட்டான்.

இத்தகைய சந்தர்ப்பங்களைப் பயன்படுத்திக் கொள்ளத் தெரிந்தவர்கள் ஜமீன்தார்கள். நன்றாக உரையேற்றிய பின் தங்களது தந்திரசாலியான ஒரு காரியஸ்தனை அவர்கள் மீண்டும் மட்டுரூவிடம் அனுப்பினார்கள்.

காரியஸ்தன் குனிந்த பவ்யமாக "ஜெய் கங்காஜீ" என்று வணங்கிய பின், இருகைகளையும் பிசைந்தவாறே, முகத்தைப் பரிதாபமாக வைத்துக் கொண்டு, "அக்கரைக்குச் சென்று கொண்டிருந்தேன், பயில்வான்ஜி! தங்களுக்கு வணக்கம் சொல்லிவிட்டுப் போகலாம் என்று தோன்றி யது" என்றான்.

காலைப்பொழுது. மார்கழி மாதம். ஆற்றின் மீது வெண்பனி புகைபோல் எழும்பிக் கொண்டிருந்தது. நாற்புறமும் மெல்லிய திரைபோல் மூடுபனி படர்ந்திருந்தது.

கதிரவனின் மென்மையான கிரணங்கள் அதனை ஊடுருவ இயலாமலிருந்தன. மேற்கத்திய காற்று விர்–விர்ரென்று வீசிக் கொண்டிருந்தது. கண்களுக்கெட்டிய தூரம் வரை விளைந்து முதிர்ந்த கோதுமைப் பயிர்கள் பரந்து கிடந்தன. கதிர்களின் பசுமையான இலைகளின் மீது பனித்துளிகள் முத்துக்கள் போல் ஒளிர்ந்தன. கதிர்களின் பால் பிடித்திருந்த முற்றிய தானிய மணிகள் இப்பொழுது பனி நீரைப் பருகி இன்னும் பருத்திருந்தன.

காடா லுங்கியும், குர்தாவும் அணிந்திருந்த மட்டுரூ மாடுகளின் தாழிகளுக்கருகே நின்று கொண்டிருந்தான். குர்தாவின் கைகளை புஜம் வரை சுருட்டி மடித்து விட்டிருந்தான். இடது கரம் முழங்கை வரை ஈரமாகி விட்டிருந்தது. இப்பொழுதுதான் தீவனத் தாழிகளில் தவிட்டைப் போட்டுக் கலக்கி இருந்தான். மாடுகள் கண்கள் வரை முகத்தைத் தாழியில் முக்கிக் கொண்டு, ஜொர்–ஜொர்ரென்று தீவனத்தை உறிஞ்சிக் கொண்டிருந்தன. ஒரு மாட்டின் பிருஷ்டத்தின் மீது, வலது கரத்தை ஊன்றியவனாக, விழிகளை உயர்த்திப் பார்த்த மட்டுரூ காரியஸ்தனை நோக்கி, "படகு புறப்பட இன்னமும் நேரமிருக்கிறது. 'சிலம்' குடிக்கிறாயா?" என்று வினவியவனாய், கணப்பருகே அமர்ந்தான்.

காரியஸ்தனும் அருகே கிடந்த நாணல் பாயின் மீதமர்ந்து கொண்டான். மட்டுரூ, கரண்டியை எடுத்து தணலைக் கிளறிவிட்டான். பிறகு கரங்களையும், கால்களையும் நீட்டி சூடாக்கிக் கொண்டவாறே "லக்னா கொஞ்சம் புகையிலை–சிலம்–கொடுத்து விட்டுப் போ" என்று குரல் கொடுத்தான்.

பொம்மை மாதிரி அழகாக, மாநிறமாக, தளதள வென்றிருந்த பாலகனைப் பார்த்ததும், காரியஸ்தன் "ஏண்டா? உனக்குக் குளிரவில்லையா?" என்று கேட்டான்.

பாலகன் ஒருமுறை இமைகளைக் கொட்டியவாறே அவனைப் பார்த்தவன், வெட்கத்துடன் சிரித்தவாறே தலை கவிழ்ந்து கொண்டான்.

''அவன் எதுவும் அணிந்து கொள்வதும் இல்லை. போர்த்திக் கொள்வதும் இல்லை. தூங்கும் போது, போர்த்தி விட்டால் கூட தூர எறிந்து விடுகிறான்'' என்றான் மட்டுரூ.

''பயில்வான்ஜீ உங்கள் மகன் இல்லையா?''— என்று தூண்டில் போட்டான் காரியஸ்தான்.

''ஆமாம், ஆமாம். ஐந்து வருடங்களுக்கு முன்பு, துணி மணி என்றாலே எனக்கு என்னவென்று தெரியாது. ஒரு லங்கோடு, லுங்கி, இரண்டே போதுமானதாக இருந்தது. கங்கைத் தாயின் மண், அவளது தண்ணீரின் பிரபாவமே அப்படி! குளிர், வெப்பம், வியாதி, வெக்கை எதுவுமே கிட்ட அண்டாது. ஆஸ்துமா நோயினால் உடம்பே கெட்டு விட்டது. என்ன செய்ய?'' என்றவாறே மட்டுரூ சிலம்மில் நெருப்புத் தணலை வைக்கத் துவங்கினான்.

''அந்தப் பகைவன் நாசமாய் போக—''

சட்டென இடைமறித்த மட்டுரூ– ''விடப்பா! அந்தப் பேச்சை. இந்தா சிலம் குடி! கடவுள் எல்லோருக்கும் நன்மையே செய்யட்டும்'' என்றான்.

சிலம்மை வாயில் வைத்து உறிஞ்சியவாறே ''ஆமாம்! தம்பி! மனிதனென்றால் உன்னைப் போலல்லவா இருக்க வேண்டும். பகைவனுக்குக் கூட நல்லதையே நினைக் கிறாய்'' என்றான் காரியஸ்தன்.

''நீ எந்த ஊர்! பார்த்தால் காரியஸ்தன் போல் தோன்றுகிறது?'' என்று வினவினான் மட்டுரூ.

''பாலுபூரில்தான் வசிக்கிறேன். ஆனால் ஜிந்தாப்பூர் ஜமீன்தாரிடம் வேலை பார்க்கிறேன்'' புகையை ஊதிய வாறே விஷயத்திற்கு வந்த காரியஸ்தன் ''ஜமீன்தார்கள் உன்னைக் கூப்பிட்டனுப்பினார்களாம், நீ வர மறுத்து விட்டாயாமே'' என்றான் மெதுவாக.

மட்டுரூவிற்கு சுள்ளென்று கோபம் வந்தது. சீற்றத்துடன், காரியஸ்தனைப் பார்த்தவாறே– ''நான் யாருக்கும் கட்டுப்பட்டவன் அல்ல– தெரியுமா?''

''இல்லை–யப்பா? இல்லை– நான் சொல்ல வந்தது அதுவல்ல—'' என இடைமறித்த காரியஸ்தன்– ''நீ

தனிக்காட்டு ராஜா என்று யாருக்குத் தெரியாது? உனக்கேற்ற முறையில்தான் நீ நடந்திருக்கிறாய். ஆனால், ஆற்றங்கரை படுகைப் பிரதேசத்தில் பங்கு இருக்கின்ற ஜமீன்தார்களெல்லாம் சேர்ந்து, உன் பெயருக்கு ஏதோ பெரிய துண்டு நிலத்தை எழுதிக் கொடுக்கப் போவதாய் காதில் விழுந்தது. நீ வந்து—"

"எழுதிக் கொடுக்க அவர்கள் யார்?" எனப் பொங்கி எழுந்த மட்டுரூ சொன்னான் "இங்கு அதிகாரம் எல்லாம் கங்கைத்தாயினுடையது. அவளுடைய பிரதேசம் இது. இன்று வரை அவளைத் தவிர வேறு யாரையும் எனக்குத் தெரியாது. ஒன்று சொல்லுகிறேன்! கேட்டுக் கொள்! இந்த ஆற்றங்கரைப் பிரதேசத்தில் எந்த ஜமீன்தாரோ, ஜமீன் தாரின் ஆளோ கண்ணிலே பட்டால், அவன் காலை ஒடிக்காமல் விடமாட்டேன்; உனக்கிஷ்டமிருந்தால் இதை நீ போய் சொல்லலாம்"

"ஐயையோ— தம்பி! ஏம்ப்பா! வீணாகக் கோபப் படுகிறாய்! இதையெல்லாம் போய்ச் சொல்ல எனக்கென்ன வந்தது? ஏதோ பேச்சு வந்தது! சொன்னேன்! பயில் வான்ஜி விரும்பினால், காணிக்கையிலும், குத்தகை யிலும் கூட பங்கு தர இருப்பதாகக் கூடக் காதில் விழுந்தது."

மட்டுரூ சிரித்து விட்டான். பின்னர் கோபத்துடன்— "மட்டுரூ பயில்வான் பாவப்பட்டச் சொத்தைச் சாப்பிட மாட்டான். கங்கைத்தாயைத் தவிர வேறு யாரிடமும் அவன் எப்பொழுதும் கைநீட்டியதில்லை. ஜமீன்தார்கள் குடியான வர்களிடம், குத்தகையும், முன்பணமும் எப்படி வாங்கு கிறார்கள், நிலத்தை எப்படி ஆர்ஜிதம் செய்யப் போகிறார்கள் என்பதையும் பார்க்கிறேன்! ஆண் பிள்ளை சொல்லுவது ஒரே வார்த்தைதான். லாலாஜி! இந்த கங்கா மாதாவின் மீது ஆணையிட்டுச் சொல்லுகிறேன்—"

காரியஸ்தன் இடைமறித்தான்— "தம்பி! நான் அவர் களுக்குக் கீழ் வேலைபார்க்கும் அடிமை. உன்னைப் போன்ற தனிக்காட்டு ராஜாவின் முன்னே வாய் திறந்து ஏதாவது சொல்லும் துணிவு எனக்கேது? ஜமீன்தார்களுக்கு

நாயாக உழைத்தே என் காலம் கழிந்து விட்டது. தவறாக நினைக்காதே! தம்பி! இந்த ஜமீன்தார்கள் இருக்கிறார்களே, அநியாயம் பிடித்த சைத்தான்கள். உன்னைப் போல கள்ளம் கபடமற்றவன் அவர்களிடம் மோதிக் கொள்வது சரியல்ல. அவர்கள் உயர்வு, தாழ்வு, பொய், மெய், வஞ்சனை, மோசடி, எதற்கும் தயங்காதவர்கள். அதிகாரி களுடன் தினம் தினம் சந்திப்பதும், குலாவுவதுமாய் இருக்கின்றனர். நெருக்கம் அதிகம். உன்னால் அவர்களை எப்படி ஜெயிக்க முடியும்? தவிரவும் பத்திரங்கள், தஸ்தாவேஜுக்களில் அவர்களின் பெயர்தான் எழுதப் பட்டிருக்கிறது. சட்டம், நியதி, அது, இது என்று கூறியே உன்னை ஆட்டிப் படைத்து விடுவார்கள்" என்றான்.

"வீட்டில் உட்கார்ந்து கொண்டு அவர்கள், சட்டம், கிட்டம் என்று அளந்து கொண்டிருக்கட்டும், எனக்கு அது பற்றி கவலையில்லை, இந்த நிலம் கங்கைத்தாயினுடையது. அவ்வளவுதான் எனக்குத் தெரியும். யார் வேண்டு மானாலும் வரட்டும். பாடுபட்டு, உழைக்கட்டும். சம்பாதிக் கட்டும், சாப்பிடட்டும். ஜமீன்தார்கள் இந்தப் பக்கம் கண் வைத்தால், அவர்களின் கண்ணை நோண்டி விடுவேன். இத்தனை நாட்கள் வரை அவர்களின் சட்டம் கிட்டமெல்லாம் எங்கே வைத்திருந்தார்களாம்? நான் பாடுபட்டேன். பயிர் செய்தேன். விளைச்சலைக் கண்டதும் ஆசை வந்து விட்டது. குறி வைத்து விட்டார்கள். இப் பொழுது ஜமீன்தார்களின் உரிமையைப் பிரகடனம் செய்ய வந்துவிட்டார்கள் எல்லோரும்! கலப்பையைத் தோளில் சுமந்து கொஞ்சம் வரட்டும் பார்க்கலாம்! இங்கே விவசாயம் செய்வது விளையாட்டா என்ன? அப்பாவி விவசாயிகளை முட்டாள்களாக்கி பணத்தைச் சுருட்டிக் கொண்டு விட்டார்கள். பாவம்! அவர்கள் நிலத்தில் பாடுபட்டு உழைப் பார்கள், குஷாலாய் திண்டில் உட்கார்ந்து கொண்டு உன் னுடைய ஜமீன்தார்கள், கொட்டமடிப்பார்கள். இதெல்லாம் இங்கே நான் நடக்க விடமாட்டேன். கங்கைத்தாயின் அதிகாரத்திற்கு உட்பட்ட பிரதேசம் என்று அவர்களிடம்

போய் சொல்! யாராவது காலெடுத்து வைத்தால், பார்த்தாய் அல்லவா இந்த வெட்டுக் கத்தியை? ஒருத்தன் கூட உயிரோட இருக்கமாட்டான். போ–போ, படகு புறப்பட்டு விடும்" என்றான் மட்டுரூ.

முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு காரியஸ்தன் எழுந்து நின்றான்.

"ஹூம்! வந்து விட்டார்கள் கங்கைத்தாயின் நெஞ்சை நோகடிக்க—" என்று மட்டுரூ முணுமுணுத்துக் கொண்டேயிருந்தான்.

* * *

ஆற்றங்கரைப் படுகைப் பிரதேசத்தில், மட்டுரூவையும் அவனுடைய சிலம்பக்காரச் சீடர்களையுட ஜெயிப்பது எளிதல்ல என்பது ஜமீன்தார்களுக்கு மட்டுமல்ல, போலீஸுக்கும் தெரியும். தெரிந்து கொண்டே பாம்புப் புற்றில் கைவிடுவது போன்ற விஷயம்-இது.

மைல் கணக்கான தூரத்திற்கு கருவேல மரங்களும், நாணல் புதர்களும், முட்செடிகளுமாய் அடர்ந்து மண்டிக் கிடந்த காட்டினிடையே நடந்து செல்லச் சரியான பாதையில்லை. முன்பின் தெரியாதவன் எங்கேயாவது நுழைந்து விட்டால் மாட்டிக் கொண்டுவிடுவான். அறிந்தவர்கள், தெரிந்தவர்களுக்குத்தான் காட்டின் மையப் பகுதியிலிருந்து, படித்துறை வரையிலான, வளைந்து நெளிந்து, மேடு பள்ளமும் நிறைந்து, கண்களுக்குத் தெரிந்தும், தெரியாமலும் இருக்கிற அந்த ஒத்தையடிப் பாதை தெரியும். இருந்தாலும் அவர்களுக்குக்கூட மாலையான பின் அப்பாதையில் செல்லத் தைரியமிருக்காது. அந்த அடர்ந்த காட்டினிடையே எத்தனையோ கொள்ளைக்காரர்களின் இருப்பிடங்கள், மறைவிடங்கள் இருக்கின்றன என்று ஊரார் சொல்லுவார்கள். இப்பிரதேசத்தில் மட்டுரூவை எதிர்த்து நிற்பது என்பது உயிரிழப்பது என்பதைத் தவிர வேறில்லை. இதனால்

சந்தர்ப்ப சூழலை அறிந்து கொண்ட ஜமீன்தார்கள் வாயை மூடிக் கொண்டாலும், போலீசாருடன் கலந்து பேசி சூழ்ச்சி வலை விரிக்கத் தயாராக இருந்தனர். ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன.

எப்பொழுதும் போல் ஆனி மாதம் பிறந்ததுமே, அறு வடை செய்து, கதிர் அடித்து, நெல்லையும், வைக் கோலையும் மட்டுரு தன் மாமனார் வீட்டிற்கு அனுப்பி விட்டான். குழந்தைகளையும் அங்கு அனுப்பி விட்டான். நாடோடி வாழ்க்கையைத் துவங்க வேண்டிய நாட்கள் நெருங்கி விட்டன. கங்கைத்தாய் எப்பொழுது பொங்குவாள் என்று யாருக்குத் தெரியும்? இரவோடிரவாக கைக்கெட்டும் உயரத்திற்கு நீர் மட்டம் உயர்ந்து விடுகிறது. ஆர்ப்பரித்துக் கொண்டு வரும் நீர்ப் பெருக்கிலிருந்து தப்பி குடிசையை மேற்புறமாக நகர்த்துவதற்கு எத்தனை விரைவாகச் செயல்பட வேண்டுமோ, அத்தனை ஆபத்தான காரியமும் கூட. இப்படிப்பட்ட நிலையில் குழந்தை குட்டிகளைக் கூட வைத்துக் கொள்வது சரியல்ல. தன்னந் தனியாக மட்டுரு மட்டுமே இருப்பான். மாமனார் அவனையும் வந்து விடும்படிதான் சொல்லுவார். ஆனால் ஆற்றங்கரையின் காற்று உடம்பில் படாவிட்டால் மட்டுருவிற்கு உறக்கம் வராது. தன்னிச்சையான, சுதந்திரப் போக்குடைய அவனுக்கு கங்கைத்தாயின் நீரலைகளை விட்டு கண நேரம் கூட பிரிந்திருக்க இயலாது. கிணற்றுத் தண்ணீர் அவனுக்கு ருசிக்காது.

இந்த முறை மட்டுரு இன்னொரு காரியமும் செய்து விட்டான். அக்கம் பக்கத்து ஊர்களுக்கெல்லாம், "யார் வேண்டுமானாலும் வந்து, நாணலையும், முட்செடிகளையும் வெட்டிக் கொண்டு போகலாம் என்று சேதி சொல்லி அனுப்பி விட்டான். ஜமீன்தார்களிடமிருந்து விலைக்கு வாங்கிக் கொள்ள வேண்டிய அவசியமேதுமில்லை. கங்கைத்தாயின் செல்வத்தில் எல்லோருக்கும் சரிசமான உரிமையுண்டு என்று கூறி அனுப்பினான்.

நாலாபக்கமிருந்தும், குடியானவர்கள், கூலிகள், ஏழைகள்

வந்து குவிந்து அமர்க்களம் செய்து விட்டார்கள். யாரைப் பார்த்தாலும் தலையில் நாணல், முட்புதர், சுமையுடன் ஓடிக் கொண்டிருந்தனர்.

ஜமீன்தார்களின் காதுகளுக்கு இவ்விஷயம் எட்டியதும் அவர்கள் கோபத்தால் கொதித்தனர். ஆயிரக்கணக்காக நஷ்டமாகியது மட்டுமல்ல, ஒவ்வொரு வருடமும் நிலையாக, ஒழுங்காக, கிடைத்து வந்த வரும்படியும் குறைந்து போய்விட்டது. இனிக் கிடைக்காது என்றும் தோன்றியது. இனி என்ன செய்வது, என அவர்கள் போலீஸாரின் அபிப்பிராயத்தைக் கேட்டதும், போலீஸார் அவர்களைச் சும்மா இருக்கும்படி கூறினர். இந்தச் சமயத்தில் ஏதாவது செய்வதென்பது, மட்டுரூவுடன் மோதுவது என்பது மட்டுமல்ல, ஆயிரக்கணக்கான குடியானவர்கள், கூலிகள், ஏழை பாழைகளை, எதிர்த்து நிற்க வேண்டியிருக்கும். ஏன் என்றால் இந்த விஷயத்தில் அவர்களுக்கும் நன்மை ஏற்பட்டுக் கொண்டிருந்தது. போலீஸ் ஸ்டேஷனில் அதிகபட்ச மாக ஒரு டஜன் துப்பாக்கிகள் இருக்கக் கூடும். ஆயிரக் கணக்கானவர்களின் குண்டாந் தடியை எதிர்த்து நிற்க போலீஸிடம் அத்தனை வலிமை இல்லை. மேலும் அது அடர்ந்து குறுகிய காட்டுப் பிரதேசம். ஒருமுறை வழி தவறிவிட்டால் வெளியே வருவது கடினம். அவர்களுக்கோ ஒவ்வொரு அடி நிலமும் அறிந்து தெரிந்த இடம். மாவட்டத்திலிருந்து போலீஸ் படையை வரவழைத்துக் கொள்ளலாம். ஆனால் அப்படி செய்வதினால் ஏற்கனவே நஷ்டப் பட்டிருக்கும் ஜமீன்தார்களின் தலையில் போலீஸ் படையை வரவழைக்கும் செலவும் வந்து விழும். அப்பிரதேசத்தைப் பற்றித் தெரியாத புதியவர்கள் வந்து ஏதாவது செய்ய முடியும் என்பதும் சரியானதா என்ன? அடர்ந்த நாணற் புதற்காட்டில் யாரையாவது தேடிக் கண்டு பிடிப்பதென்ன விளையாட்டா? இந்நிலையில் மட்டுரூவைச் சீண்டிவிடுவது எப்படிப் பார்த்தாலும் உசிதமல்ல. நேரம் வரட்டும் பார்க்கலாம். பாம்பும் சாக வேண்டும், தடியும் உடையக் கூடாது..... ஹூம்!

ஜமீன்தார்கள் என்ன செய்வார்கள்? கசப்பை விழுங்கிக் கொண்டார்கள்.

மட்டுரூ இங்குமங்கும் சுற்றித் திரிந்து காட்டை வெட்டச் செய்து கொண்டிருந்தான். இப்பொழுதுதான், மட்டுரூ சொல்வது உண்மைதான் என்பது குடியானவர்களுக்குப் புலப்பட்டது. இப்பிரதேசத்தில் யாருடைய ஜமீன்தாரியோ, கிமீன்தாரியோ கிடையாது. உரிமை இருந்திருந்தால் ஜமீன்தாரென்ன அவரது தூரத்து உறவினன் கூடவா கண்ணில் படமாட்டான்? ஒருத்தன் கூடத் தென்படவில்லையே! சுற்றும்முற்றும் "கங்கா மாதாகி ஜெய்" என்ற கோஷம் முழங்கிக் கொண்டிருந்தது. ஆற்றின் பிரவாகம் கலகலவென சிரித்துக் கொண்டோடியது.

அந்த வருடம். ஆயிரக்கணக்கான குடியானவர்கள், கூலிகள், ஏழை எளியவர்களின் குடிசைகளுக்குக் கூரை வேயப்பட்டது. அடுப்பெரிக்கவும் போதிய விறகு வீட்டிற்கு வந்து விட்டது. யாவரும் மட்டுரூவை மனமாற நெஞ்சார வாழ்த்திக் கொண்டிருந்தனர்.

* * *

ஆனி மாதத்தில் தசரா நெருங்க நெருங்க, ஆற்றில் நீர்ப் பெருக்கம் துவங்கிவிட்டது. இம்முறை சற்று முன்னதாகவே பலத்த மழையும் துவங்கி விட்டது. ஒருநாளில், இரண்டு முறை, மூன்று முறை மட்டுரூ தன் குடிசையைத் தள்ளிப் போட வேண்டியிருந்தது. நீர்ப் பெருக்கம் மிக வேகமாய் அதிகரித்துக் கொண்டிருந்தது. ஒரு மணி நேரத்தில் பத்து, இருபது அடி தூரத்தை மூழ்கடிப்பது சாதாரண விஷயமாக இருந்தது. பகல் வேளைகளைப் பற்றிக் கவலையில்லை. ஆனால் இரவில் தூக்கமென்பதே இல்லை. ஆற்று வெள்ளம் எப்படி இருக்குமோ, எப்பொழுது குடிசை மூழ்கி விடுமோ என்ற கவலை.

மட்டுரூ உட்கார்ந்தவாறே பளபளக்கும் நீரோட்டத்தைப் பார்த்தவாறு இருப்பான். மேலே வானத்தில் மேகங்கள்

குமலும். மின்னல்கள் வெட்டும். கீழே ஆற்றின் நீரோட்டத்தில் நீர் புரண்டோடி வரும் பேரோசை எதிரொலிக்கும். இடையிடையே கரையோர மணற்திட்டு களும், கரைகளும் உடைந்து சரியும் ஓசை சளக், சளக் எனக் கேட்கும். சில்வண்டுகளின் காதைத் துளைக்கும் கிறீச் கிறீச் என்ற சத்தமும், டர், டர்ரென, தவளைகள் எழுப்பும் ஓசையும் நாற்புறமிருந்தும், இவ்விரண்டினிடையே கடும் போட்டி நடப்பது போல் இடைவிடாமல் ஒலித்துக் கொண்டே இருக்கும். எங்கும் கவிந்திருக்கும் கனத்த இருளினிடையே இங்கொன்றும், அங்கொன்றுமாய் எதோ பக்கென்று எரிந்து அணையும். மட்டுரூ உட்கார்ந்த நிலையிலேயே "கங்கைத்தாயின்" இந்தப் பயங்கரமான அச்சுறுத்தும் தோற்றத்தைக் கண்டு "அன்பால் இதயம் நிரம்பி வழிய, மகனை மடியிலிட்டு பாலமுதம் ஊட்டும் அன்னை, சீற்றம் மிகும்போது மகனின் கன்னத்தில் எப்படி அறைகிறாள்" என்று நினைப்பான்.

ஆவணி மாதம் நாட்கள் செல்லச் செல்ல மட்டுரூவின் குடிசை ஆற்றங்கரையோரத்து கிராமத்திற்கு அருகிலே வந்து விட்டது. மட்டுரூவிற்கு இந்நாட்கள் மனத்திற்கு உறுத்தலாகவே இருக்கும். கோபம் கொண்ட தாயொருத்தி, விரட்டி விரட்டி அடித்தவாறே, "இதோ பார் நீ மட்டும் அகப்பட்டால் அனுபவித்த சுகமெல்லாம் மறக்க வைக் கிறேன் பார்" என்று மிரட்டுவது போலிருக்கும். ஐப்பசியிலிருந்து துவங்கும் நாட்கள் அவனுக்கு மிகவும் பிடித்தமானவை. அம்மா முன்னால் ஓட ஓட, அவன் பின்னாலேயே, அன்புடன் பவ்யமாக, கரம் நீட்டியவாறே அவளைப் பிடிக்க ஓடுவான். அவளைப் பிடித்து, அவள் முந்தாணியில் முகம் புதைத்து, ஆற்றாமை பொங்க, கண்ணீர் பெருக்கியவாறே "அம்மா! இத்தனை நாட்கள் என்னுடன் ஏன் கோபித்துக் கொண்டிருந்தாய்" என்று கேட்க வேண்டும் போலிருக்கும். தாய்க்கும், மகனுக்கு மிடையே இந்த ஓடிப் பிடிக்கும் விளையாட்டு, ஒவ்வொரு வருடமும் நடைபெறும். சில சமயம் அம்மா விரட்ட, மகன்

ஓடுவான், சில சமயம் அம்மா ஓட, மகன் பின்னால் ஓடுவான். இந்த விளையாட்டில்தான் எத்தனை சந்தோஷம்! எத்தனை ஆனந்தம்.

ஆறு கடலாகி, கரைபுரண்டதும், மட்டுரூவிற்கு கரை யோரம் எங்குமே இடம் கிடைக்காமற் போகவே வேறு வழி யின்றி, தாயின் முந்தாணியை விட்டு விட்டு, கரை யோரத்துக் கிராமம் ஒன்றில் குடிசையைக் கட்டிக் கொள்ள வேண்டியிருந்தது. பிரிவாற்றாமையின் இந்நாட்களில் கண் களில் நீர் மல்க, மட்டுரூ கரையின் மீது அமர்ந்த வண்ணம், மணிக்கணக்காக, நீர் பெருக்கமெனும் முந்தாணி அலை வீசிப் பெருகுவதைப் பார்த்தவாறு இருப்பான். புயல் வேகத்தில் ஓடிவரும் நீரோட்டம் பனை உயரத்திற்கு உயர்ந்தெழுந்து, குதித்து, மடிந்து, பிரளய கால ஓசையுடன் பெருகி ஓடும். இடையிடையே, ஆங்காங்கே, கரும் புள்ளிகள் போல் நீர் வாழ் பிராணிகள் மேலெழுந்து மறைந்து போகும். சுழலிலே சிக்கிய மரத்தின், அடிமரத் துண்டுகள் யாரோ விரலிலே சக்கரத்தைச் சுற்றுவது போல் சுழன்றோடும். ஒரு குழந்தை போல் மட்டுரூவிற்கும், நீரோட்டத்திலே குதித்து, அதைப் பிடுங்கி வந்து தனது விரலிலே சுழற்றி ஆரவாரம் செய்ய வேண்டும் போல் தோன்றும், தாயின் வலிமையை விட மகனின் வலிமை குறைந்ததா என்ன? ஏதேனும் குடிசை மிதந்து செல்வதைக் கண்டால், "அம்மா? என்ன செய்து விட்டாயம்மா நீ! ஒரு பிள்ளையின் இருப்பிடத்தை நாசமாக்குவது உனக்கு வேதனை தரவில்லையா?" என்று துடிப்பான். இத்தனை சீற்றம் ஏன், என்று கேட்பான்.

ஊர்க் காற்று அவனுக்கு ஒத்துக் கொள்ளாது. மூச்சுத் திணறுவது போலவே இருக்கும். காட்டு மலர் நாட்டுக்கு வந்தால் வாடிவிடுவது போல், சோர்ந்து போய் விடுவான். கங்கு கரையற்ற அந்த அகன்று பரந்த வெட்ட வெளி, தூய்மையான காற்று, மிருதுவான மண், பளிச்சென்ற வெயில், சுயேச்சையான அந்த சூழலுக்காக அவன் உள்ளம் ஏங்கி மறுகியது. சில சமயம் ஆற்றிலே குதித்து, மனமும்,

உடலும் குளிரும் வரை நீந்த வேண்டும் என மனது பர பரக்கும். அந்நீரலைகளென்னும் மெத்தையிலேயே உறங்கி விடலாமா என்று கூட நினைப்பான். ஆனால் அக்கணமே, தன் மனைவி, பச்சிளம் குழந்தைகளின் நினைவு வந்து விடும். கனத்த உள்ளத்துடன் கரையிலிருந்து எழுந்து வந்து விடுவான். அங்கேயே அமர்ந்திருந்தால் எங்கே தான் தன்னை அறியாமலேயே குதித்து விடுவோமோ என்று தோன்றும்.

இந்தச் சமயங்களில் மிக மிக வற்புறுத்தினால் தான் கட்டாயத்தின் பேரில் சில சமயம் மாமனார் வீட்டிற்குச் செல்லுவான். இரண்டொரு இரவுகளுக்கு மேல் அவனால் தங்க முடியாது. கங்கைத்தாய் தன்னைக் கூப்பிடுவதுபோல் அவனுக்குத் தோன்றும். திரும்பி வந்து மணிக்கணக்காக ஆற்று நீரிலே மூழ்கித் திளைக்காவிட்டால் அவனுக்கு நிம்மதியிராது.

* * *

அன்றிரவு நெடுநேரம் கரையோரம் அமர்ந்திருந்தவன் உறக்கம் இமைகளைத் தழுவவே எழுந்து வந்து குடிசையின் வாசலில் கிடந்த மெலிதான பாயில் படுத்து விட்டான். இதமான, சுகமான, குளிர் காற்று வீசிக் கொண்டிருந்தது. நீரோட்டம் தாலாட்டிசைக்க, கரைகள் தாளமிட்டது போலிருந்தது. மட்டுரூவிற்கு சுகமான நித்திரை வந்து விட்டது.

உறக்கத்தினிடையே. திடீரென தனது மார்பின் மீது, பலமணங்கு பாரம் ஏறி இருப்பது போல் தோன்றவே, மனம் குழம்பியவனாய் கண்களைத் திறந்தான். டார்ச் விளக்கின் ஒளியில் இரண்டு இளைஞர்கள் தன் நெஞ்சின் மீது அமர்ந்திருப்பதைக் கண்டான். கரங்களை ஊன்றிக் கொண்டு முழு பலத்துடன் எழுந்திருக்க முயன்றபோது விலங்குகள் கணகணவென ஒலி எழுப்பின. தன் கரங்களில் விலங்கிடப்பட்டிருப்பதை அவன் உணர்ந்தான்.

நாற்புறமும் ஈட்டி ஏந்திய போலீஸ்காரர்கள் தென்பட்டனர். அக்கணமே அவனுக்கு யாவும் புரிந்து விட்டது. வெறுப்பினாலும், கோபத்தினாலும் உடல் வெடவெடக்க அவன் பற்களைக் கடித்துக் கொண்டான்.

அவன் ஆற்றங்கரையை விட்டு ஊருக்குள் வந்ததிலிருந்து போலீஸார் அவனைப் பின் தொடர்ந்து கொண்டிருந்தனர். இன்று சமயம் வந்ததும் அவனை அடக்கிப் பிடித்து விட்டனர். இரவோடிரவாக, கை கால்களுக்கு விலங் கிடப்பட்டு மட்டுரூ மாவட்டச் சிறைக்கு அனுப்பப்பட்டு விட்டான். கிராமத்தார்களின் மீது அடக்கு முறை அதிகக் கடுமையாக இருந்ததால் யாரும்– "ச்சூ"– என்று கூடக் கூற முடியவில்லை.

குற்றப்பத்திரிகை, வழக்கு, சாட்சிகள், சாட்சியம் யாவும் முன்னரே தயாராக இருந்தன. மட்டுரூவின் மாமனார் விஷயத்தை விசாரிக்கப் போலீஸ் ஸ்டேஷன் சென்றதும் மட்டுரூ கொள்ளையிட்ட குற்றத்திற்காக, கைது செய்யப் பட்டிருந்ததாகத் தெரிய வந்தது. போலீஸார் மட்டுரூவின் குடிசையைச் சோதனையிட்டபோது கிடைத்த நகை நட்டுகள், ஜிந்தாப்பூர் ஜமீன்தார் துனிசிங்கினுடையவை என்று தெரிந்தது. அவைகள் ஒவ்வொன்றாக அடையாளம் காட்டப்பட்டன. விரைவிலேயே வழக்கு நீதிமன்றத்துக்கு வந்துவிடும். அதற்கான ஏற்பாடுகள் தயாராகிக் கொண் டிருந்தன.

இதைக் கேட்டவர்கள் பிரமித்து நின்றனர் சிலர். துயரத்தினாலும், ஆச்சரியத்தினாலும் கலங்கினர் சிலர். ஆனால் இதற்கிடையே அக்கம் பக்கத்து கிராமங் களிலெல்லாம் போலீஸின் கெடுபிடி மிகவும் கடுமையாகி விட்டிருந்ததால், எவருக்கும் போலீஸிற்கோ, ஜமீன் தாருக்கோ, எதிராக ஒரு வார்த்தை வாயால் சொல்ல துணிவு உண்டாகவில்லை. மட்டுரூவைத் தலைவனாகக் கொண்ட கொள்ளையர் கூட்டத்தில் கிட்டத்தட்ட ஐம்பது கொள்ளைக்காரர்கள் தலைமறைவாகி விட்டனர் என்று

பறைசாட்டப்பட்டது. போலீஸ் அவர்களைப் பிடிக்க மிகத் தீவிரமாய் இருப்பதாகச் சொல்லப்பட்டது. இரண்டொரு நாட்களுக்கொருமுறை கிராமங்களில், இன்று இரண்டு பேர்கள் பிடிக்கப்பட்டார்களாம், நேற்று நாலு பேராம் என்ற வதந்திகளும் பரவலாயின. போலீஸார் விசித்திர மானதொரு பெரும் குழப்பத்தை மக்களிடையே தோற்று வித்து விட்டனர்.

மாதக் கணக்காகத் திட்டம் போட்டு, கற்பனை செய்து எல்லாவிதமான ஆயுத முஸ்திப்புகளுடன் ஜோடிக்கப்பட்ட வழக்கில் துருவித் துருவிப் பார்த்தாலும் ஒரு குறையைக் கண்டு பிடிப்பது கடினமாக இருந்தது. தவிரவும், கீழேயிருந்து மேலே வரை, சிறிய, பெரிய அதிகாரிகள் வரை லஞ்சம் வழங்கப்பட்டிருந்ததால், யாவருமே நின்ற நிலையிலேயே எதையும் விழுங்கத் தயாராக இருந்தனர்.

கீழ்க் கோர்ட்டிலிருந்து வழக்கு செஷன் கோர்ட்டுக்குச் சென்றது. மாமனாரும், மைத்துனரும் அவர்களால் எவ் வளவு முடியுமோ, அத்தனை முயற்சிகளும் செய்தனர். ஆனால் தீர்ப்பு என்னவோ முன்னரே முத்திரை குத்தி வைத்திருந்தது போல்தான் வழங்கப்பட்டது.

மட்டுரூவிற்கு மூன்று வருடம் கடுங்காவல் தண்டனை கொடுக்கப்பட்டது. மூன்று நாட்களுக்குள்ளாகவே இரவு வண்டியில் அவன் பனாரஸ் சிறைச்சாலைக்கு அனுப்பி வைக்கப்பட்டான்.

## 6

அண்ணியின் வாழ்க்கை கடும் சாதனை புரியும் வாழ்க்கை ஆகிவிட்டது.

இதயத்தைக் குத்தி எடுக்கும், கணவனைப் பற்றிய நினைவுகளை அடக்கிக் கொண்டு இரவும், பகலும் ஏதாவ

தொரு வேலையில் அவள் தன்னை ஈடுபடுத்திக் கொண்டிருந்தாள். கண்கள் மளமளவென்று ரத்தக் கண்ணீர் வடிக்க, கரங்கள் தன்பாட்டில் வேலை செய்து கொண்டிருந்தன. மாமனாரும், மாமியாரும் மௌனமாய் யாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்தனர். ஒரு வார்த்தை கூட அவர்கள் வாயிலிருந்து வெளி வரவில்லை. இப்படிப்பட்ட விதவைக்கு யார் என்ன ஆறுதல் மொழி கூற முடியும்? குழந்தை இருந்தாலாவது, அதன் முகத்தைப் பார்த்து, உயிர் வாழ்ந்து கொண்டிரு என்று கூறலாம். இங்கோ அதுவுமில்லை. யார் என்ன சொல்வது? குழந்தைகளற்ற விதவையின் வாழ்க்கை ஒரு காய்ந்த மொட்டை மரம் போன்றது. அதில் இனி பசுமை துளிர்க்காது. பூவோ, காயோ, அரும்பாது. அது வீணானது. முற்றிலும் பயனற்றது, அது பூமிக்கு வீண் சுமை. பாரம் இது. ஹும்! மொட்டை மரத்தினால் ஒரே ஒரு பிரயோஜனம் தான் உண்டு. அதை வெட்டி அடுப்பெரிக்கலாம். குடும்ப வாழ்க்கையிலும் ஒரு விதவையின் நிலை ஒருக்கால் விறகுக் கட்டை போன்றதுதானே! வாழ்க்கை முழுவதும், உயிருள்ள வரை எரிந்து கொண்டே இருக்க வேண்டும். எரித்துக் கொண்டு வீட்டிலுள்ளவர்களுக்கு பணிவிடை, குற்றேவல் புரிய வேண்டும். அவள் புரியும் பணியினால் பிறர் பயனடைவார்கள். ஆனால் அவள் சாம்பலாய் கருக வேண்டும்.

அண்ணியின் நிலையும் கிட்டத்தட்ட இதுவாகத்தான் இருந்தது. வயதான மாமியார் ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டு, தன் பிள்ளைகளை நினைத்து நினைத்து இரவு பகலாக அழுது கொண்டிருப்பாள். முடமாகி முடங்கி விட்ட மாமனாரின் அறிவும், மனமும் திடீரென அடுத்தடுத்து வந்த விபத்துகள், துன்பங்களின் காரணமாய் பாதிக்கப்பட்டு விட்டது. அவர் ஆழ்ந்த மன வேதனையில் மூழ்கிக் கிடந்தார். "இப்படியாகிவிட்டதே! ஏன் இப்படியாகி விட்டது!" என்ற வேதனை. பசுமையும், வளமும் நிறைந்த

தனது வாழ்வெனும் தோட்டத்தின் நினைவு வந்ததுமே "ஐயோ! ராமா! நீ என்னப்பா செய்துவிட்டாய்! பகவானே! இப்படியொரு கஷ்டத்தைக் காண நான் அப்படியென்ன பாவம் செய்து விட்டேன்!" என்று மனதிற்குள் மௌன மாகவே புலம்புவார்.

சில சமயம் மூவருமே ஒருவருக்கொருவர் தேறுதல் சொல்லிக் கொள்ளக் கூடுவதுண்டு. பேசிக் கொண் டிருக்கும் போதே என்னவாகுமோ தெரியாது. மூவருமே ஒன்றாகவே, சங்கோஜம், மரியாதை எல்லாம் விட்டு விட்டு, ஒருவரையொருவர் கட்டிக் கொண்டு அழத் துவங்கி விடுவார்கள், பொதுவான துக்கத்தின் வேகம் அவர்களை ஒன்று படுத்திவிடும். அம்மாதிரியான சமயங்களில் அக்கம் பக்கத்தவர்கள் வந்து அவர்களுக்கு ஆறுதல் கூறி, புத்திமதி சொல்லி, பலவந்தமாக அவர்களைப் பிரித்து கண்ணீரைத் துடைப்பார்கள். இதன் பின் மயான அமைதிதான். அந்த வீட்டில் உயிருள்ள மனிதர்கள் யாரேனும் இருக்கிறார்களா என்று தோன்றிவிடும். வேதனையின் தீவிரம் உள்ளுக் குள்ளேயே ரத்தத்தைச் சுரண்டும். ஆனால் உதடுகள் அசையாது. ஊரார் அங்கிருந்து செல்லும்போது அவர்களது மூச்சும் பெருமூச்சாகிவிடும். "ஐயோ! எப்படி இருந்தவர்கள், எப்படியாகிவிட்டனர்? பாவம்! அந்த கோபி சிறையி லிருந்து வந்தாலாவது இவர்களுக்கு கொஞ்சம் ஆறுதலாக இருக்கும்"– என நினைப்பார்கள்.

அண்ணிக்குத் தூக்கம் சரியாக வராது. எப்பொழுதாவது கண்ணயர்ந்தால், பயங்கரமான கனவு கண்டு திடுக்கிட்டு விழித்துக் கொள்வாள். பின்னர் மௌனமாக கண்ணீர் வடிப்பாள். நினைவுகள் ஒவ்வொன்றாய் வரும். கூடவே விம்மலும் எழும். இரவின் அமைதியும், அந்தகாரமும் வரலாறு முழுவதையும் திறந்துவிட்டு விடும். நிம்மதி யிழந்தவளாய் அவள் புரண்டு கொண்டிருப்பாள், ஒவ் வொரு பக்கமாக மனம் புரட்டும். சகிக்க இயலாமல் போகும் நிலையில், எழுந்து சமையலறையிலிருந்து பத்துப் பாத்திரங்களை முற்றத்துக்கு எடுத்து வந்து தேய்க்கத்

துவங்கிவிடுவாள். பாத்திரங்களின் ஓசை கேட்டதும் படுத்த வாறே மாமியார் குரல் கொடுப்பாள் "அடியே! மருமகளே! இப்பொழுதே எழுந்து விட்டாயா? இன்னும் விடியவில்லை போலிருக்கிறதே! போ! போய்த் தூங்கு"

அண்ணி தொண்டையைச் செறுமிக் கொண்டு "இன்னும் இரவு எங்கே இருக்கிறது அம்மா! சுக்கிரன் முளைத்து விட்டது" என்பாள்.

"இன்னமும் நான் ஒரு தூக்கம் தூங்கவில்லை அதற்குள் வெள்ளி முளைத்துவிட்டது என்கிறாயே! போம்மா... போய் தூங்கு! போ! சாப்பிட இங்கு யார் இருக்கிறார்கள்? நீ இப்பொழுதே பாத்திரம் தேய்க்க ஆரம்பித்து விட்டாயே! போம்மா! போய் படுத்துக் கொள்" என்பாள்.

அண்ணி பதிலே கூறமாட்டாள். மாமியார் ராமா! ராமா! என்று முணுமுணுத்தவாறே, முக்கி, முனகிய வண்ணம் புரண்டு படுத்துக் கொள்வாள். சற்றைக்கெல்லாம் ஆழ்ந்த உறக்கத்தில் மூழ்கிவிடுவாள்.

சத்தமில்லாமல் மெதுவாகப் பாத்திரங்களைத் தேய்த்துக் கழுவி விட்டு எழுந்திருப்பாள் அண்ணி. மெதுவாக அடுப்பைப் பற்ற வைப்பாள். பிறகு குளித்து உடை மாற்றிக் கொண்டு பூஜை அறைக்குச் செல்லுவாள். நிர்மால் யங்களை அகற்றி, துடைத்து, விளக்கேற்றி, விக்கிரகங்களின் முன்னே அமர்ந்து, ராமாயணத்தைத் திறந்து வைத்துக் கொண்டு, மனதிற்குள் கூட்டிக் கூட்டிப் படிப்பாள், அவளுக்கு ஒன்றுமே புரியாது. அவள் படித்தவள் அல்ல. கொஞ்சம் கூடப் படிக்கத் தெரியாது. சிறு வயதில் இரண்டொரு மாதம் அண்ணாவுடன் விளையாட்டாக பள்ளிக்குச் சென்றாள். அச்சமயத்தில், எழுத்துக்களும் குறில், நெடில்களும் கொஞ்சம் கற்றுக் கொண்டாள். பிறகு அவள் அம்மா அவளைப் பள்ளிக்குச் செல்வதிலிருந்து நிறுத்தி விட்டாள். பெண்ணாகப் பிறந்தவளுக்குப் படிப்பென்ன அவசியம்?

அவளுக்கு எல்லாமே மறந்து போய்விட்டது. இப்பொழுது பொழுதே போகாத நிலையில், எத்தனையோ

வருடங்களுக்குப் பின்னர், அந்த எழுத்தறிவைப் புதுப்பித்துக் கொண்டாள். அந்த வீட்டில் ராமாயணத்தைத் தவிர வேறு புத்தகங்களே இல்லை. அதையே எடுத்துப் பயிற்சி செய்து கொள்ளத் துவங்கி இருந்தாள். ஒவ்வொரு சௌபாய் (நாலுவரிப் பாடல்) படிக்க, பல நிமிடங்களாயின. ஒவ்வொரு எழுத்தாகக் கூட்டி, அவள் வார்த்தைகளை இணைப்பாள். பிறகு பலமுறை அதைத் திருப்பித் திருப்பிப் படித்த பின் மேலே தொடர்ந்தாள். பிறகு இரண்டிரண்டு வார்த்தைகளாகச் சேர்த்துப் படிப்பாள். அதைத் திரும்பச் சொல்லிய பின் அடுத்த வார்த்தைக்குச் செல்லுவாள். இம்மாதிரி ஒரு சரணத்தை முடித்த பின் அதை இருபது முறை திருப்பித் திருப்பிச் சொல்லுவாள்.

இதில் பொழுது கழிந்தது மட்டுமல்ல, அதன் பொருளை முழுமையாக உணர்ந்து கொள்ள இயலாவிடினும் ஒருவித ஆன்மீகமான சுகமும் ஆறுதலும் அவளுக்குக் கிட்டியது. மெல்ல மெல்லப் பழக்கம் ஆனபின், நேரத்தைக் கழிக்கும் பிரச்சினையை விட பெரியதொரு பிரச்சினை எதுவுமில்லை. அதுவும் அவள் எத்தகைய துக்கப்பட்டிருக்கிறவள்? வாழ்க்கை முழுவதையுமே அவள் இப்படித் தானே கழிக்க வேண்டும்? ஒரு விதவையின் வாழ்வில் இன்பமான, சுகமான கணத்தைப் பற்றி கற்பனை கூட எவ்வாறு செய்ய முடியும்?

காலையில் மாமனார், மாமியார் கண் விழிக்கும் முன்னரே, வீடு முழுதும் பெருக்கிச் சுத்தம் செய்துவிடுவாள். குடியானவன் வந்தால், அவனிடம் எருமையைக் கறந்து பால் வாங்கிக் கொள்வாள். தீவன அறையைத் திறந்து மாட்டுத் தாழியில் தீவனம் கலந்து வைக்க, வேண்டியதை எடுத்துத் தருவாள். பிறகு தேவையான பொருட்களைக் கொடுத்து அவனை வயலுக்கு அனுப்புவாள். பழைய குடியானவன் அவன். நன்றி விசுவாசம் மிகுந்தவன். வயல் வேலைகள், விவசாயம் முழுதும் இப்பொழுது அவன் பொறுப்பில்தான் விடப்பட்டிருந்தது. வீட்டு மனிதனைப் போல் அவனே யாவற்றையும் கவனித்து வந்தான்.

அவளிடம் வரவு செலவுக் கணக்கு எல்லாவற்றையும் கொடுத்து விடுவான்.

மாமனார் கண்விழித்ததும், மருமகளைத்தான் கூப்பிடு வார். அவள் அவசர அவசரமாக தணலை மூட்டி, ஹுக்காவை நிரப்பி அவர் கையில் கொடுத்து விட்டு வருவாள். மாமியார் தன் காரியத்தையெல்லாம் விட்டு விட்டாள். அவள்தான், உலக வழக்கத்திலிருக்கும் மரியாதை முறைகளைத் துறந்து அவருக்கு வேண்டிய காரியங்களை எல்லாம் கவனிக்க வேண்டியிருந்தது.

கட்டிலிலேயே அவருக்கு கை, கால், முகம் கழுவி விடுவாள். பாலைக் காய்ச்சிக் குடிக்கக் கொடுப்பாள். ஹூக்காவை புதிதாய் நிரப்பி, தணல் போட்டு கையில் கொடுப்பாள். ஏன், மருந்து தைலத்தை மாலிஷும் செய்து விடுவாள். கிழவர் முக்கி முனகியவாறே குட்-குட்வென்ற ஓசையுடன் ஹுக்காவை உறிஞ்சிக் கொண்டிருப்பார். எங்கேயாவது முட்டியில் அவளது கை வேகமாய் அழுத்தி விட்டால்– "அடியே! மருமகளே! மெதுவாகத் தேய்! ஐயோ! ஹா!" என்று கத்துவார்.

இதன்பின் அவள் வீட்டு வேலைகளில் இறங்கி விடுவாள். தானியங்களைப் புடைப்பது, அரைப்பது, குத்தி எடுப்பது, பொறுக்குவது, என்பதிலிருந்து சமைத்து, பரிமாறு வது வரையில் எல்லா வேலைகளையும் அவளே செய் தாள். மாமியாரோ, நடந்தவைகளை நினைத்து நினைத்து அழுது புலம்பியவாறு ஏதாவதொரு மூலையில் உட்கார்ந் திருப்பாள், அல்லது மருமகள் வேலை செய்வதை கொட்டக் கொட்டப் பார்த்தவாறே இருப்பாள்.

அண்ணி இப்பொழுது பழைய அண்ணி அல்ல. அந்த ரூபம், வனப்பு, நிறம், இளமை, அந்த கட்டான உடல் இப்பொழுது இல்லை. முந்திய அண்ணியின், நடமாடிக் கொண்டிருக்கும் ஒரு நிழலாகி விட்டிருந்தாள். இளைத்து, கறுத்து, வற்றலாகிப் போன உடல், சோபை குன்றிய, வெளிறிய முகம், சோகம் படிந்து எப்பொழுதும் கண்ணீரில் மிதக்கும் கருவிழிகள், உலர்ந்துவிட்ட உதடுகள். அவ

ளுடைய உடலின் ஒவ்வொரு மயிர்க் காலிருந்தும் கருணை சொட்டியது. உயிருள்ள சவத்தின் சித்திரம் போலோ, அல்லது ஒரு சவம் உயிருடன் நடமாடுவது போலவோ அவள் தோற்றமளித்தாள்.

இறைவா! இவள் ஏன் இன்னும் உயிரோடிருக்க வேண்டும்? அவனுடனேயே இவள் உயிரும் ஏன் பிரியவில்லை? தங்கை என்ன புண்ணியம் செய்தாளோ? பகவான் அவளை அழைத்துக் கொண்டு விட்டார். எத்தகைய மகாபாவி இவள். நரக வாதனையை அனுபவிக்க இன்னமும் உயிருடன் இருக்கிறாளே! இந்த நரகத்திலிருந்து மீட்சி ஏது? இந்த வேதனையிலிருந்து எப்பொழுது விடுதலை?

* * *

மாதங்கள் பல கடந்த பின், மழைக்கால வெள்ளம், கொஞ்சம், கொஞ்சமாய் வடிவது போல் அவளது வேதனையும் மெதுவாக அமைதியுறத் துவங்கியது. நாட்கள் செல்லச் செல்ல யாவற்றையும் சகித்துக் கொள்ள அவள் தன்னைப் பழக்கிக் கொண்டு விட்டாள். அவளது இதயத்தைத் தூள் தூளாக்கிவிட்ட எல்லையற்ற நிராசையும், வாழ்வே வீணாகிவிட்ட வேதனையின் கூர்மையும் கூட மழுங்கத் துவங்கியது. இப்பொழுதெல்லாம் மனதில் ஏதேதோ எண்ணங்கள்! சில சமயம் வாழ்க்கையின் இன்பங்கள், எதை அவள் தன் வாழ்வில் ஒரே ஒரு முறை மலர்ந்து, காய்த்து குலுங்கியதைக் கண்டாளோ, அந்த சுகங்கள் மீண்டும் முளைத்தெழுவதை உணர்ந்தாள். கணவனைப் பற்றிய நினைவுகளுடன் கூட சில சமயம் அவனது உடல் உறவில் அவளுக்குக் கிட்டிய அந்த மென்மையான உணர்வுகள் அவள் மனதில் மலர்ந்தன. இப்பொழுதெல்லாம் அடிக்கடி, அவள் மனத்தில் ஏழு திரைகளுக்கடியிலிருந்து கேள்வி எழுந்தது. "என் வாழ்வில் அந்த நாட்கள் மீண்டும் வரவே வராதா? அவ்வின்பங்கள்

மீண்டும் கிட்டவே கிட்டாதா? அந்த— அந்த—" கூடவே நீண்டதொரு சில்லிட்ட பெருமூச்செழும். உயிரையே திருகி எடுப்பது போன்ற வலியின் வாதனையை அவள் உணர்வாள். அக்கணங்களில் அவள் பெரிதும் வேதனையை அடைவாள். ஹூம்— பகவானே!

அத்தகைய தருணங்களில் ஏனோ அவள் கவனம் தன் மைத்துனன் பால் செல்லும். அவனுடைய நிலைமையும் தன் நிலை போன்றதுதான் என்று நினைப்பாள். அவனுடைய இன்பமான உலகமும், அவளுடையதைப் போன்றே பாழாகி விட்டது. அவன் மனதிலும் இப்பொழுது இத்தகைய எண்ணங்கள், உணர்வுகள் ஏற்பட்டுக் கொண்டிருக்கக் கூடும். அவளைப் போலவே அவனும் துடித்துக் கொண்டிருப்பான்.

அக்கணத்தில் யாரோ அவளிடம் "அவன் ஆண் பிள்ளை. அவன் சிறையிலிருந்து வெளியே வந்ததுமே அவனுக்கு இன்னொரு திருமணம் நடந்து விடும். அதன் பின் அவனுடைய புதிய வாழ்வு துவங்கி விடும். அதன் பின் முந்திய இன்பங்கள், சுகங்களைப் போன்றே—" எனக் கூறுவது போலிருக்கும். அவள் உள்ளத்தில் அடிபட்டவள் போல் துடித்துப் போவாள். வெறுப்பும், கோபமும் மூண்டெழுவதுபோல் உதடுகள் சுழித்துக் கொள்ளும். உள்ளத்தின் துடிப்புடன், "ஏன் அப்படி? அப்படி ஏன் நடக்கிறது? இந்த வித்தியாசம் ஏன்? ஒருத்தி மட்டும் பாழ்பட்டு விட்ட தன் வாழ்க்கையைக் கழுத்தில் கட்டிக் கொண்டு, அணு அணுவாக எரிந்து சாம்பலாக வேண்டுமென்று நிர்ப்பந்திக்கப்படுகிறாள்? இன்னொருவனுக்கோ வீணாகிவிட்ட வாழ்வை, மீண்டும் அமைத்துக் கொண்டு, சுகமாய், இன்பமாய் வாழும் உரிமை ஏன் உள்ளது?" என்ற கேள்வியும் எழும்.

அவள் தனக்குள் வெகுண்டெழுவாள் "இல்லை— அப்படி நடக்கக் கூடாது. கூடவே கூடாது. அவளுக்கும் அந்த உரிமை வேண்டும்—"

மனத்தில் ஏன் இப்படியெல்லாம் எண்ணங்கள் தோன்று

கின்றன? தன்னுணர்வு பெற்றதும் அவளுக்கே தன் மீது வியப்பு உண்டாகும். சமீபத்தில், கொஞ்ச நாட்களுக்கு முன்னர்தான், கணவனது பிரிவுத் துயரில் அவளும் சாக விரும்பினாள். ஆனால் இன்று! இன்று என்னவாகி விட்டது அவளுக்கு? அடியோடு மாறிவிட்டாளே! என்ன என்னவெல்லாம் உள்ளத்தில் எழுகின்றன? என்னென்ன ஆசைகள் மனத்தின் அடித் தளத்திலிருந்து தலை தூக்குகின்றன? நேற்று தன் மனத்திலே மூண்டெழுந்த எண்ணங்களுக்காக, தனது மன நிலையை எண்ணி இன்று தன் முன்னே தானே வெட்கப்படுகிறாள். யாருக்கேனும் அவள் மனத்தில் எழும் எண்ணங்கள் தெரிந்து விட்டால்! ஊஹூம், கூடாது. தெரியவே கூடாது. உலகம் என்ன சொல்லும்? அவள் எத்தகைய பாவி என்று ஊரார் நினைப்பார்கள்? கட்டிய கணவன் இறந்து இரண்டு, மூன்று வருடங்கள் கூட ஆகவில்லை. இந்தப் பா ராய்ப் போனவள் என்னவெல்லாம் நினைக்கத் துவங்கிவிட்டாள் என்று ஏச மாட்டார்களா? விதவையாகிவிட்ட இவளால் இந்த வாழ்க்கையின் தூய்மையை கட்டிக் காக்க முடியுமா? ஐயோ? காலம்தான் எத்தனை கெட்டுவிட்டது? பார்த்தா யல்லவா? நேற்றய விதவை– இன்று— என வசைபாட மாட்டார்களா?

வேறு வழியற்ற நிர்பந்தம், உள்ளத்தின் நிம்மதியற்ற குழப்பத்தால் அவள் தவித்துப் போனாள். தன்னுடைய இந்த மனத்தை என்ன செய்வது? தூய்மையற்ற இந்த எண்ணங்களை எப்படி நசுக்கி, அடக்குவது? இப்பொழு தெல்லாம் பூஜை அறையில் அமர்ந்திருக்கும் போது, அவள் "பகவானே! எனது குல தர்மத்தை, வழக்கத்தை, உறுதியுடன் எழும் மாசுபடிந்த எண்ணங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ள வலிமையைக் கொடு. என்னுடைய வைதவ்ய வாழ்க்கையின் மீது களங்கம் படியாமல் இருக்க உறுதியைத் தா" என வேண்டினாள்.

ஆனால் பகவானிடமிருந்து அவளுக்கு அச்சக்தியோ, உறுதியோ கிட்டவில்லை. மனம் மானைப் போல்

அவ்வப்போது துள்ளியது. கட்டவிழ்த்துக் கொண்டது. அவள் வலிந்து தன் கணவனைப் பற்றி நினைத்துக் கொண்டாள். அவனுடைய நினைவுகள் உள்ளத்தில் மிகுந் திருக்கும் வரையில் அவள் நிலைகுலைந்து விட மாட்டாள் என்று நினைத்தாள். அவனது நினைவும் எப்பொழுது தன்னுருவத்தை மாற்றிக் கொள்ளுமோ தெரியாது. மிகுந்த முயற்சி செய்தாலும் நெடு நேரம் அந்நினைவுகளில் ஆழ்ந்து இருக்க இயலவில்லை. வேதனையை உண்டு பண்ணும் நினைவுகள், அவளுக்குத் தன் கணவனிட மிருந்து கிடைத்த இன்பங்களை நினைவுபடுத்துபவையாக இருந்தன. அவ்வின்பங்களை நினைவு கூருகையில் மீண்டும் அவற்றைப் பெறும் ஆசை உள்ளத்தில் மூண்டெழுந்ததும், இதயம் இனிமையான சிலிர்ப்பினால் நிரம்பியது. இத்தகைய நினைவுகளும், உணர்வுகளும் கிளர்ந்தெழும் போதெல்லாம் அவள் தன்னைத்தானே நொந்து கொண்டாள். விசித்திரமான, ரகசியமான இத் தகைய் போராட்டங்கள் அவள் உள்ளத்திலே நிலை பெற்று விட்டன. இதில் எந்த கட்சி ஜெயிக்கிறது, எது தோற்கிறது என்பதையும் தெரிந்து கொண்டே உணர்ந்தும் கொண் டிருந்தாள்.

இப்பொழுது அவள் நிலை முன்போலில்லை. வீட்டு வேலை, மாமனார், மாமியாருக்குப்பணிவிடைகள் செய்தல் போன்றவைகளிலெல்லாம் முன்போல் ஈடுபாடு இல்லை. ஏதோ அரை மனதுடன் செய்து கொண்டிருந்தாள். சில சமயம், ஏதேனும் ஒரு காரியத்தில் தாமதமாகிவிட்டது என்று மாமியார் அதட்டினால் அவள், "எனக்கு இரண்டு கைகள்தானே இருக்கின்றன? ஏன்? நீங்களே செய்வதுதானே? நாள் முழுவதும்,இரவு பகல்,வேலைக்காரி மாதிரி உழைக்கிறேன். அப்படியும் இதைச் செய்யவில்லை, அதைச் செய்யவில்லை என்று கேட்டுக் காது புளித்து விட்டது" என்று பதிலும் கூறிவாள்.

இதைக் கேட்ட மாமியார் படபடவென்று பேசத் துவங்கிவிடுவாள், கண்டபடி வாய்க்கு வந்ததைச் சொல்லி

விடுவாள். அண்ணிக்கு அவளிடம் சண்டை போடும் தைரியம் இல்லை என்றாலும், இப்பொழுதெல்லாம் உதட்டுக்குள் முணுமுணுக்காமல் இருப்பதில்லை. நாட்கள் செல்லச் செல்ல இருவரும் சிடுசிடுப்பான குண முடையவர்களாகி விட்டார்கள். கோபத்துடன் எரிந்து விழுவார்கள். இத்தனை நாட்களாக அந்த வீட்டில் நிலவி வந்த சோகமான அமைதிக்கு இப்பொழுது ஒரு முடிவு வந்து விட்டது. இப்பொழுது ஊரார் காதுகளுக்கும் இந்த வீட்டு விஷயங்கள் எட்ட ஆரம்பித்து விட்டன. துயரத்தால் ஆத்திரமடைந்திருந்த நோய்பிடித்த வாழ்க்கையைப் பற்றிய விஷயம் இது. எரிச்சல், கோபம், நிர்ப்பந்தம், இயலாமை யினால் நிறைந்தது இது.

ஒரு நாள் காலை, தீவனம் வைத்திருந்த அறையிலிருந்து, ஒரு கூடையில் தவிட்டை எடுத்துக் கொண்டு, முற்றத்தில் நின்று கொண்டிருந்த உழவனிடம் கொடுக்க அண்ணி வந்தபோது, மண் குடத்தைக் கையிலெடுத்தவாறே, "சின்ன எஜமானியம்மா! தவறாக நினைத்துக் கொள்ளாதீர்கள். சில நாட்களாகவே தங்களிடம் ஒரு விஷயத்தைச் சொல்ல வேண்டுமென்று தோன்றுகிறது" என்றான் அவன்.

புடவையில் ஒட்டிக் கொண்டிருந்த தவிட்டைத் தட்டியவாறே அவள்– "என்ன விஷயம்? உனக்கு ஏதாவது வேண்டுமா?" என வினவினாள்.

"இல்லையம்மா!" என்ற உழவன், கண்களில் கருணை யும், உதட்டில் உண்மையான பாசமும் கொண்டவனாய்– "சின்ன எஜமானியம்மா! உங்களைப் பார்க்கும்போது எனக்கு ரொம்பவும் துக்கமாக இருக்கிறது. உங்களுக்கு இப்பொழுது அப்படி என்ன வயதாகிவிட்டது. இந்த வயதிலிருந்து உங்கள் வாழ்க்கை முழுவதும் எப்படிக் கழியப் போகிறது? இதற்குள்ளாகவே உங்களுடைய பொன்னான உடல் எப்படி மண்ணாகி விட்டது? எஜமானியம்மா! தங்களை இந்நிலையில் பார்க்கும்போது எனக்கு மிகவும் வருத்தமாக உள்ளது" என்றவன் அழுது விடுவான் போலிருந்தது.

அண்ணியின் வாடிய முகம் பின்னும் கறுத்து விட்டது.

"என்ன செய்ய! பிலரா! விதியின் முன் யார் என்ன செய்ய இயலும்? பகவான் குங்குமத்தை அழித்து விட்டால், அதிர்ஷ்டத்தைக் குலைத்துவிட்டால், இம்மாதிரி கண்ணீரும், கம்பலையுமாய்தான் வாழ்க்கையைக் கழித்தாக வேண்டும். நீ எதற்காக வருத்தப்படுகிறாய்? நம்முடைய துரதிருஷ்டத் திற்கு யார் துணை இருப்பார்கள். பகவானாலேயே என்னு டைய சுகத்தைக் காண சகிக்க முடியாமற் போய் விட்டபோது—" அண்ணி தலைப்பினால் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

நீண்ட பெருமூச்செறிந்தவனாய் பிலரா– "உங்களுடைய குலத்தில் இதென்ன வழக்கம், சின்ன எஜமானியம்மா! இந்த விஷயங்களில் எங்கள் குலம் மேல். எந்தவொரு கைம் பெண்ணும் வாழ்க்கையை வீணாக்கிக் கொள்ள வேண் டிய கட்டாயமில்லை. என்னையே எடுத்துக் கொள்ளுங்கள். அண்ணா அண்ணியை விட்டுவிட்டுக் காலமாகியதும் அண்ணியை நான் கட்டிக் கொண்டுவிட்டேன். சந்தோஷ மாக இருக்கிறது எங்கள் வாழ்க்கை. நீங்கள் உயர்ந்த குலத்தில் பிறந்திருப்பதால் உங்கள் வாழ்க்கையே வீணாகி விட்டதம்மா!– என்ன சொல்லட்டும்? எஜமானி யம்மா! சின்ன எஜமானருடன் உங்களுக்கு திருமணமாகி விட்டால்— என்னவோ மனதில் தோன்றுகிறது".

"பிலரா!"– உயர் குடிப்பிறப்பின் அகங்காரம் பொங்கி எழுந்தது. "மறுபடியும் இந்த வார்த்தையை நாவில் வைத்துப் பேசாதே! எந்தக் குலத்தின் உப்பைத் தின்கிறாயோ, அதன் கௌரவம், மரியாதையைப் பற்றி எண்ணாமல், இப்படி, நீ மறுபடியும் பேசினால் உன் நாக்கைத் துண்டித்து விடுவேன். இந்தக் குலத்தில் கைம்பெண், உயிருடன் எரிந்து சிதையில் சாம்பலாகிப் போகிறவள், என்று உனக்குத் தெரியாதா? ஆனால்— சரி- சரி போ— போய் விடு" என்று ஆவேசத்துடன் கூறிய அண்ணி உள்ளே வந்து கட்டிலில் படுத்துக் கொண்டு விம்மி விம்மி அழலானாள்.

மாமனார், மாமியார் இன்னமும் தூங்கிக் கொண்

டிருந்தனர். நெடு நேரம் வரை அவள் அழுது கொண்டிருந்தாள். இந்த அழுகை, அவமதிக்கப்பட்ட ஆத்மாவின், அகங்காரத்தினுடைய கண்ணீர். ஒரு நீசன், அற்பமானவன் எந்தக் கம்பியை மீட்டி விட்டானோ, அது முன்னரே எத்தனையோ முறை தானாகவே உள்ளுக்குள் நாத மெழுப்பியுள்ளது. அவளும் மனதிற்குள்ளாகவே அதன் இனிமையை ரசித்திருக்கிறாள், ஆனால் அந்த நாதம் மிகமிக ரகசியமாய், அகங்காரங்கள், சம்ஸ்காரங்களுக் கிடையே, பத்திரமாக ஒளித்து மறைத்து வைக்கப்பட்டிருந்தது. அதை யாரேனும் சுண்டிவிடக் கூடும் என அவள் கற்பனை கூடச் செய்ததில்லை. அந்த நரம்பின் மீது அந்த நீசன், அற்பனானவன் நேரடியாக விரலை வைத்துச் சுண்டி விட்டுவிட்டான். இது சாதாரணமான அவமானமா என்ன? அதனுடைய சீற்றம்தான் கண்ணீராகப் பொங்கியது. இச் சீற்றமெனும் வாளின் ஒரு பக்கத்துக் கூர்முனை, அந்த நீசனின் கழுத்திலிருந்தது. மற்றொரு முனை தன்னுடைய கழுத்தில் என்பது அவளுக்கு நன்றாகவே தெரிந்திருந்தது. இல்லாவிடில் அந்த அயோக்கியன் கன்னத்தில் அறை வாங்காமல் போயிருக்க முடியுமா? ஒரு ராஜபுத்திரப் பெண்ணின் ரத்தம் அது. பரிகாசமா என்ன?

அன்றிலிருந்து, கையும் களவுமாய் அகப்பட்டுக் கொண்டு விட்ட திருடனைப் போல் எச்சரிக்கையுடன் அவள் நடந்து கொண்டாள். இப்பொழுதெல்லாம் அவள் பிலராவின் எதிரே வருவதில்லை. விடியற்காலையிலேயே மாமியாரை எழுப்பி விட்டாள். அவள் கையிலேயே பால் சொம்பும், தொட்டியில் கலக்கி வைக்க தவிட்டையும் அனுப்பி விடுவாள். யாரானாலென்ன? அவனும் ஆண்பிள்ளை தானே? கைம்பெண்ணொருத்தி எந்த ஆண் மகன் முன்னேயும் வர விரும்பாவிட்டால், யார்தான் பாராட்டாமலிருப்பார்கள்!

எது எப்படியானாலும் அந்த அயோக்கியன் கூறிய வார்த்தைகள், அண்ணியின் அந்தரங்கமான, பாவப்பட்ட கற்பனைகள் கொடிகட்டிப் பறக்க ஒரு பலமான

ஆதாரத்தைத் தந்து விட்டிருந்தன. அறிந்தோ, அறியா மலோ, அண்ணியின் எண்ணங்களிலே இப்பொழுதெல் லாம் மைத்துனனின் உருவம் மேலோங்கி நின்றது. அவனைப் பற்றி நூற்றுக் கணக்கான விஷயங்கள், நினைவுகள், வெவ்வேறு ரூபத்தில் வரத் துவங்கியதும், மைத்துனன் உண்மையிலேயே தன்னை விரும்பினானோ என்ற சந்தேகம் அவளுக்கு ஏற்பட்டது. களங்கமற்ற, மாசுமருவற்ற, நிச்சலமான, தூய்மையான அன்பின் மீது, காம இச்சையெனும் மென் துகிலைப் போர்த்த, யாருக்கு எத்தனை நேரமாகும்? அதுவும் அண்ணியின் பசித்த உள்ளம், தாபம் கொண்டதாய், இத்தகைய கற்பனை களிலேயே சுழன்று கொண்டிருந்தது. சில சமயம், அந்த நீசனின் குலத்தின் மீது கூட பொறாமை ஏற்பட்டது. ஹும்! அக்கணங்களில் எங்கிருந்தோ, யாரோ ஒரு கொடுமைக் காரன் வந்து தோன்றுவான். அவன் சவுக்கினால் அடிக்கிற அடியில், அவள் ரத்த விளாராய் துடித்துப் போவாள்.

அண்ணியின் கற்பனைகளின் மெத்தை கூட முட்களாக இருந்தது. அதில் ஒவ்வொரு கணமும் அவளது மென்னுடல் ரணமாகிக் கொண்டிருந்தது.

# 7

பனாரஸ் சிறைச்சாலைக்கு வந்ததுமே மட்டுருவின் ஆஸ்துமா நோய் திரும்பவும் வந்துவிட்டது. மூன்று, நான்கு நாட்கள் வரை எவரும் அவனைக் கவனிக்கவில்லை. முற்றிலும் சோர்ந்து, களைத்துப்போன அவனால், எந்த வேலையும் செய்ய முடியாமல் போகவே, ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டான். அவனுடைய படுக்கை, கோபிக்கு அடுத்தாற்போல் பக்கத்திலிருந்தது. டாக்டர் ஒருநாள் வரு வார்; ஒருநாள் வரமாட்டார். பெரும்பாலும் கம்பௌண் டர்தான் எல்லாமே செய்து கொண்டிருந்தான். அவன்

மிகவும் நல்லவன். நேர்மையானவன். அவனுடைய கவனிப்பிலும், பணிவிடைகளிலும் நோயாளிகள் குணமடைந்து விட்டனர். இங்கு சாப்பாடும் கொஞ்சம் நன்றாகக் கிடைத்தது. கொஞ்சம் பாலும் கிடைத்தது. கடினமான உழைப்பிலிருந்தும் விடுதலை. இந்த சௌகரியங்களை எல்லாம் பெறுவதற்காகவே ஆரோக்கியமான கைதிகள் நிறையப் பேர் ஆஸ்பத்திரியில் படுக்கையில் இருந்தனர். ஆனால் இதற்காக, டாக்டர் மற்றும் வார்டனுக்கு கையூட்டுக் கொடுக்க வேண்டியிருந்தது. நல்ல நிலையில் வசதியாக இருக்கும் கைதிகளால்தான் இது இயலும் என்பது வெளிப் படை.

ஒரு வாரம் வரை மட்டுரூவின் உடல் நிலை மோசமாக இருந்தது. வறட்டு இருமல் வாட்டியது. வலியினால்– ஐயோ! அப்பா! என்று அரற்றிக் கொண்டிருந்தான். கபம் உறைந்து விட்டது. கம்பௌண்டர் இரவு நெடு நேரம் வரை அவனது மார்பிலும், முதுகிலும் மருந்தைத் தேய்த்துக் கொண்டிருப் பான். தனது ஓய்வைப் பற்றிப் பொருட்படுத்தவே மாட் டான்.

பலமுறை ஊசி போட்டபின் கபம் கொஞ்சம் இளகியதும் மட்டுரூவிற்கு கொஞ்சம் குணம் தெரிந்தது. மணிக் கணக்காய் தூங்கிக் கொண்டிருப்பான். உறக்கத்திலேயே சில சமயம் 'அப்பா', 'அம்மா' என்று கத்துவான். எழுந்து உட்காருவான். நாற்புறமும் விழிகளைச் சுழற்றி வெறித்து வெறித்துப் பார்ப்பான்.

ஒருநாள் இம்மாதிரியான ஒரு சந்தர்ப்பத்தில் கோபி, அவனைப் பார்த்து "உனக்கு அம்மாவின் நினைவும் அதிகம் வருகிறதா?" என வினவினான்.

தூரத்தில் பார்வையை அலையவிட்டவாறே மட்டுரூ, "ஆமாம்" என்றான். தொடர்ந்து "அவள் இரவும் பகலும் என்னை அழைத்துக் கொண்டே இருக்கிறாள். அவளிடம் செல்லாத வரையில் எனக்கு நிம்மதி கிடைக்காது. அவளு டைய காற்றும், நீரும் எனக்குக் கிடைக்காத வரையில் எனக்குக் குணமாகாது" என்றான்.

திடுக்கிட்டவனாய் கோபி கேட்டான், "அம்மா, காற்று, தண்ணீர் இதற்கெல்லாம் என்ன அர்த்தம்? நீ வந்து—"

"நீ எந்த ஊர்க்காரன்?" எனப் புன்னகையுடன் விசாரித்த மட்டுரூ "மட்டுரூ பயில்வானின் பெயரைக் கேட்ட தில்லையா? அவனுடைய அம்மா 'கங்கைத்தாய்' என்பது தெரியாதவர் யார்?" என்றான்.

'மட்டுரூ உஸ்தாத்' வியப்பினால் விழிகள் விரிய கோபி கத்தினான். "வணக்கமய்யா? நான்தான் கோபி. அண்ணே! என்னை எங்கே தெரிந்திருக்கப் போகிறது!"

"தெரியும் கோபி! எல்லாமே தெரியும். அன்று கோதாவில் நானும் கலந்து கொண்டிருந்தேன். பின்னால் நடைபெற்ற சம்பவம் பற்றியும் கேள்விப்பட்டேன். ஒருவனுடைய பலத்தை, வலிமையை இன்னொருவனால் சகித்துக் கொள்ள முடிவதில்லை. வெல்ல முடியாமல், ஜயிக்கமாட்டாமல் போகும்போது, நீசத் தனத்தில் இறங்கி விடுகிறான். உன் அண்ணனின் நிலைமை அப்படி யாயிற்று. நீ சிறையில் தள்ளப்பட்டாய். என் நிலையைப் பற்றியும் நீ கேள்விப்பட்டிருப்பாய். அயோக்கியப் பயல்களால் என்னை மிஞ்சமுடியாமல் போனதும், உணவில் என்ன கலந்து கொடுத்து விட்டார்களோ தெரியாது? மூச்சிறைப்பு வந்து விட்டது. உடம்பு பாழாகிவிட்டது. பார்த்தாய் அல்லவா?" என்றான்.

"ஊம்– அதுதான் கண் எதிரேயே தெரிகிறதே"– துயரம் மிகுந்த குரலில் கோபி கேட்டான்– "பின், இங்கே எப்படி வந்தீர்கள் அண்ணே!"

மட்டுரூ சிரித்தான், "ஜமீன்தார்களுக்கு நான் வாழ்வதைக் காணச் சகிக்கவில்லை. கொள்ளைக் குற்றத்தில் மாட்டி விட்டு இங்கே அனுப்பி வைத்து விட்டார்கள்" என்றவன் நடந்ததை முழுவதும் கோபியிடம் விவரமாகக் கூறினான். முடிவில் சொன்னான்– "என்ன சொல்லட்டும்? எல்லா வற்றையும் என்னால் சகித்துக் கொள்ள முடிகிறது. ஆனால் கங்கைத்தாயின் பிரிவைத்தான் தாங்க இயலவில்லை. கண்முன்னால் அவளது நீரோட்டத்தைக் காணாத வரை

யில் எனக்கு நிம்மதியில்லை. எதுவும் செய்ய வேண்டு மென்ற உற்சாகம் இல்லை. அந்தக் காற்று, அந்த மண், அந்த நீர், வேறெங்கு கிடைக்கும்? அவளை விட்டுப் பிரிந்த திலிருந்து, வயிறு நிறைய தண்ணீர் நான் குடிக்கவில்லை. வேறெதுவும் ருசிக்கவில்லை தம்பி! என்ன செய்ய? மூன்று வருடம் எப்படிக் கழியப் போகிறது?"

"அண்ணே! நான் ஐந்து வருடத்தைக் கழித்தாக வேண்டும்! எங்கே இருந்தாலும் ஆண்பிள்ளைக்கு நேரத் தைக் கழிப்பது கடினமல்ல, ஆனால் உள்ளத்தில் ஒரு வேதனையை, வலியைச் சுமந்து கொண்டு ஒருவன் எப்படி நேரத்தைக் கழிப்பது? என் விதவை அண்ணியைப் பற்றிய நினைவு என்னைத் தின்கிறது. உங்களுக்குக் கங்கைத் தாயினுடைய நினைவு, ஏதோ ஒரு துயரம் ஒவ்வொரு வரையும் தொடர்கிறது. துக்கமாக இருந்தாலும், சுகமாக இருந்தாலும் நேரமென்னவோ கழிந்து விடும். இப்பொழுது நாம் ஒரே இடத்தைச் சேர்ந்த இருவர்களாகி விட்டோம். பரஸ்பரம் சுக துக்கங்களைப் பரிமாறிக் கொண்டு சந்தோஷமாய் கழித்து விடலாம். நீங்கள் திருமணம் செய்து கொண்டீர்களெனக் கேள்விப் பட்டேன்."

"ஆமாம்! மூன்று பாலகோபாலர்கள் இப்பொழுது வீட்டிற்கு வந்து விட்டார்கள். வாழ்க்கை சந்தோஷமாய் கழிந்து கொண்டிருந்தது. வருடம் ஐம்பது பீகா நிலத்தை உழுது பயிரிட்டுக் கொண்டிருந்தேனப்பா? கங்கைத்தாய் நிறைய அள்ளிக் கொடுத்தாள். சாப்பிட்டு மாளவில்லை. ஆனால் ஜமீன்தார்களுக்கு இதைக் காணப் பொறுக்க வில்லை. கங்கைத்தாயின் நிலத்தில் கூட அவர்கள் அட்டூழியம் செய்ய ஆரம்பித்து விட்டனர். அந்த அநியாயத்தைப் பார்த்துக் கொண்டு சும்மா இருக்க முடியவில்லை. ஆண்பிள்ளையாக இருந்து கொண்டு தாய்க்கு நேரிடும் அநியாயத்தை, துன்பத்தைப் பார்த்துக் கொண்டிருப்பது எப்படி?"

"நீங்கள் செய்தது முற்றிலும் சரிதான் அண்ணே! இந்த ஜமீன்தார்களே மகா மோசமானவர்கள். குடியானவன்

கொஞ்சம் சுகப்படுவதைக் கூட இவர்கள் காணச் சகிக்க மாட்டார்கள். உங்களை அந்த இடத்திலிருந்து அகற்றிய பின்னர் இப்பொழுது தங்களிஷ்டம் போல செய்து கொண்டிருப்பார்கள். பேராசை பிடித்த சில குடியானவர் கள், நீங்கள் அங்கிருந்தபோது ஒன்றும் செய்ய முடியாமல் இருந்தவர்களைக் கொண்டு அவர்கள் எல்லாக் காரியங் களையும் சாதித்துக் கொள்வார்கள். கொஞ்சம் தடுத்து நிறுத்திக் கடிவாளம் போட உங்கள் கூட்டாளிகள் யாரேனும் அங்கிருக்கிறார்கள் இல்லையா?"

"ஒரு பயல் இருக்கிறான். ஆனால் அவனுக்குத் துணிச்சல் போதாது. இருந்தாலும் சும்மா இருக்க மாட்டான். கொஞ்ச நாட்கள் என்னுடைய சீடப் பிள்ளையாய் இருந்ததின் பாதிப்பு ஏதாவது கொஞ்சமிருக்கும். பார்க்கலாம்".

"அவன் உங்களைப் பார்க்க வருவான் அல்லவா? அப்பொழுது கேளுங்கள்"

* * *

மெல்ல மெல்ல மட்டுரூ, கோபியின் உறவு நெருக்கமடைந்தது. இருவருடைய சுபாவமும் ஒன்று போலிருந்தது. இருவருடைய துயரமும், வாழ்வும் கூட ஒன்றாக இருந்தது அவர்களை அந்தரங்கமான நண்பர் களாக்கியது. இப்பொழுது ஒருவர் மற்றொருவரைச் சார்ந்து, சற்றே மகிழ்ச்சியுடன் தங்கள் காலத்தைக் கழிக்க லானார்கள். இருவரும் ஒரே கொட்டடியில் இருந்தனர். வேலை சம்பந்தப்பட்டவரையில் அவர்களுக்கு எந்த முறையீடும் இல்லை. இதனால் எந்த அதிகாரியும் அவர்களைச் சீண்ட வேண்டிய அவசியம் ஏற்படவில்லை.

சிறைச்சாலை முழுவதும் மட்டுரூவின் 'கங்கைத்தாய்' பிரசித்தமாகி விட்டாள். சிறியவர்கள், பெரியவர்கள் யாவருமே அவனை ஒரு தார்மீக புருஷனாக மதித்தனர். அவனைப் பார்க்கும் போதெல்லாம் "ஜெய்! கங்கா மாதா கீ" என்று வணக்கம் தெரிவித்தனர். சிறைச் சாலையின்

நெடிய மதிற்சுவர்களுக்குள்ளேயும் வாழ்க்கை அவனுக்கு ஒருவிதமாய் அமைந்து விட்டிருந்தது. சிரிப்பும், பரிகாசமும், சண்டை, சச்சரவுகளும், போட்டி, பொறாமையும், பாட்டும், அழுகையும் அங்கும், வெளியுலகத்திலிருப்பது போலவே இருந்தது. அங்கு நிலவும் சூழலிலிருந்து ஒருவன் எத்தனை நாள், தனித்து, ஒட்டாமல் பிரிந்திருக்க முடியும்? நூற்றுக் கணக்கான மனிதர்களின் சுக துக்கங்களில் கலந்து கொண்டு இருப்பதிலும் மனிதர்களுக்கு ஒரு வகையான மகிழ்ச்சி கிட்டுகிறதல்லவா!

மட்டுரூ, கோபி, இருவருக்கிடையே, சிறைச்சாலைக்கு வெளியேயும் ஒன்றாக வாழ்வது பற்றி பேச்சு இடை யிடையே எழுந்து கொண்டிருந்தது. இருவரும் மிகமிக நெருங்கியவர்களாகி விட்டதால் பிரிவது என்று எண்ணி னாலே இருவரும் கலக்கமுற்றனர்.

"சிறையிலிருந்து வந்ததும் நீ என்னுடன் இருந்து விடுகிறாயா? கங்கைத்தாயின் தண்ணீர், அந்தக் காற்று அந்த மண்ணின் ருசி, ஒரு முறை உனக்குத் தட்டிவிட்டால், பிறகு நான் துரத்தினாலும் நீ அதை விட்டுப் போகமாட்டாய். எனக்கும் உன்னைப் போலொரு தோழன் அவசியம் தேவை. ஜமீன்தார்கள் இப்பொழுது வன் முறைக்கு இறங்கிவிட்டார்கள். என்னை அங்கிருந்து நகர்த்திவிட்ட பின் என்னென்ன செய்திருக்கிறார்களோ யார் கண்டது? நான் திரும்பிச் சென்றதும் நிச்சயம் என்னோடு மோதுவார்கள். இப்பொழுது நான் அவர்களை எதிர்த்தாக வேண்டும். ஆற்றங்கரைப் பிரதேசத்துக் குடியானவர்களின் ஒற்றுமை இதுவரை குலையாமல் இருந் தால் அவர்கள் என் கூட ஒத்துழைப்பார்கள். கங்கைத் தாயின் நெஞ்சிலே வரப்புக் கட்டி, கோடு இழுக்காமலிருக்க வேண்டுமென்று நான் விரும்புகிறேன். அங்கு வரப்புக் கட்டுவதும் இயலாது. ஏன் என்றால் ஒவ்வொரு வருடமும் கங்கைத்தாய் யாவற்றையும் சமதளமாக்கிவிடுவாள். எந்த அடையாளமும் அங்கு நிலையாக, நிலைபெற்றிருக்க முடியாது. கங்கைத்தாய் விலகிக் கொண்ட பின் யார்,

எத்தனை நிலத்தை வேண்டுமானாலும் உழுது, பயிரிட்டுக் கொள்ளலாம். நிலத்திற்கு அங்கு பஞ்சமே இல்லை. உழு பவர்களுக்கு வேண்டுமானால் பஞ்சமிருக்கலாம். அங்கு யாருக்கும் சம உரிமையுண்டு. ஜமீன்தார்கள் அதை கபளீ கரம் செய்து கொண்டு, தங்களது ஜமீன்தாரி உரிமையை நிலை நாட்டி, வரி வசூலிக்க விரும்புகிறார்கள். இதில் எனக்கு உடன்பாடு இல்லை. கங்கைத்தாய் என்றேனும் யாருடைய ஜமீன்தாரியிலாவது இருந்ததுண்டா கோபி?''

''இல்லை அண்ணே! இது முற்றிலும் பெருத்த அநியாயம். இப்படிச் செய்பவர்கள் ஒருநாள் கங்கைத்தாயின் தண்ணீர் கூட எங்களைச் சேர்ந்தது என உரிமை கொண்டாடத் துவங்கிவிடுவார்கள். அவள் நீரைக் குடிக்க, குளிக்கக் கூட கட்டணம் செலுத்த வேண்டும் என்பார்கள்.''

''ஆமாம்! படித்துறையைக்கூட அவர்கள் காண்டிராக்ட் டுக்கு விட விரும்புகிறார்கள் என்று காதில் விழுந்தது. படித்துறை அவர்களுடைய நிலத்தில் இருக்கிறது என் கின்றனர். அங்கிருந்து அக்கரைக்கும், இக்கரைக்கும் வர படகு வசதி இருக்கிறதே, அதிலும் கூட அவர்களுக்கு உரிமை இருக்கிறது என்கிறார்களாம். நானிருந்த வரை, இப்படியெல்லாம் கூறவும், செய்யவும் யாருக்கும் துணி விருந்ததில்லை. நான் வந்த பின் இன்னும் என்ன வெல்லாம் செய்திருக்கிறார்களோ? அதனால்தான் தம்பி! அங்கு எனக்கென்று ஒரு அணி வகுத்துக் கொண்டு இந்த அநியாயங்களை எதிர்த்துப் போராட வேண்டும். நீ எனக்கு ஒத்துழைத்தால், என் பலம் இரட்டிப்பாகிவிடும்.''

''அதையேதான் நானும் விரும்புகிறேன். குடும்பத்தில் நானொருவன்தான் எஞ்சியிருக்கிறேன் என்பது உங்களுக் குத் தெரியும். முடக்கு வாதம் அப்பாவை முடமாக்கி விட்டது. வயதான அம்மா, விதவை அண்ணி, இவ்விருவரின் பொறுப்பும் என் தலைமீதுள்ளது. இப்படிப்பட்ட நிலை யிலுள்ள குடும்பத்தை எப்படி விட முடியும்? உங்களுக்கு சமயா சமயங்களில் நூறு, ஐம்பது சிலம்பத் தடி தேவைப்பட்டால், நிச்சயம் உதவி செய்வேன். சொல்லி

அனுப்பினால் போதும். இடையிடையே, வருடத்திற்கு நான்கைந்து முறைகள் வருவேன். நாலைந்து நாட்கள் தங்கி, கங்கைத்தாயின் நீரைப் பருகிப் புனிதமடைவேன். நீங்களும் அவ்வப்போது வந்து கொண்டிருங்கள். பரஸ்பரம் சமா சாரங்கள் செய்திகள் கிடைத்துக் கொண்டிருக்கும்''.

மட்டுரூ, இதைக் கேட்டதும் வருத்தமடைந்து விடுவான். உண்மையிலேயே அவன் கோபியின் மீது உயிரையே வைத்திருந்தான். ஆனால் அவனது குடும்பத்தின் நிலை மையை, சூழ்நிலையை அறிந்தும் எப்படிக் கட்டாயப்படுத்த முடியும்? ''சரி! எப்படியானாலும் நமது நட்பு நிலைத்து நீடிக்க நாமிருவரும் முயற்சி செய்து கொண்டிருக்க வேண்டும்'' என்றான்.

* * *

கொஞ்ச நாட்களாகவே, மட்டுரூ, கோபியைச் சந்திக்க ஒருவரும் வரவில்லை. இதனால் இருவருமே கவலை யுற்றிருந்தனர். தொலைவில் இருந்த கிராமத்திலிருந்து, வேலை வெட்டி நிறைய இருந்த குடியானவர்கள் பனாரஸுக்கு வந்து போவதென்பது சாதாரண விஷயமல்ல. வருடக் கணக்காக, ஏற்பாடுகள் செய்து முயற்சித்தால், ஒருவன் தன் வாழ்க்கையில் ஒருமுறை காசிக்கும், பிரயாகைக்கும் தீர்த்த யாத்திரை செய்யக் கிளம்ப முடியும். அவர்களிடம் புதையலா இருக்கிறது? எப்பொழுது வேண்டுமோ எடுத்துக் கொண்டு, ஊர் சுற்றி வர? மேலும் அவர்களுக்கு அவகாசம் தான் ஏது? ஒருநாள் வேலை செய்யாவிட்டாலும், சாப்பிடுவது எப்படி? அப் படியே சாப்பாட்டுக்கு இருந்தாலும், நாலு காசு சேர்த்து, நிலம் வாங்கும் ஆசை யாரை விட்டது?

கோபியின் மாமனார் ஆரம்பத்தில் இரண்டு, மூன்று மாதங்களுக்கொருமுறை வந்து விடுவார். ஆனால் தன் ஒரு பெண் கைம்பெண்ணாகி, மற்றொருத்தியும் இறந்துவிடவே அவருடைய ஆர்வம் முற்றிலும் போய்விட்டது. அப்படியே

இஷ்டப்பட்டாலும் அப்படியொரு ஆர்வத்திற்கு அவர் பழக்கப்பட்டவரல்ல. அதை வளர்த்துக் கொள்ளும் தகுதியும் அவருக்கில்லை. வேறு யார் வருவார்கள்?

மட்டுரூவின் மாமனார் மிகச் சாதாரணமானவர். வெளியூருக்கு வர சந்தர்ப்பமே அவருக்குக் கிட்டியதில்லை. மைத்துனனிடம் கொஞ்சம் நம்பிக்கை இருந்தது. அவனும் எந்தச் சிக்கலில் மாட்டிக் கொண்டிருக்கிறானோ? ஒரு தடவை கூட விசாரித்துப் போக அவன் வரவில்லை.

அடுத்த மாதம் சந்திர கிரகணம் வருகிறது. இச்சமயம் வீட்டிலிருந்து நிச்சயம் யாரேனும் வருவார்கள் என இருவருக்கும் முழுமையான நம்பிக்கை இருந்தது. கிரகண புண்ணிய காலத்தில் காசியில், கங்கையில் நீராடுவது மகா புண்ணியம். ஒரே கல்லில் இரண்டு மாங்காய். கிரகணத்திற்கு ஒரு நாள் முந்தி ஞாயிற்றுக் கிழமையாக இருந்தது. காலையிலிருந்தே சந்திக்க வருபவர்களின் அமர்க்களம். யாரைச் சந்திக்க வந்திருந்தார்களோ, அவர்களின் பெயர்களை வார்டன் கூப்பிட்டுக் கொண்டிருந்தார். யாவரும் வாசலருகே இருந்த முற்றத்தில் அமர்ந்திருந்தனர். பெயர் கூப்பிடப்பட்டதும் அக்கைதியின் முகம் மலர்ந்து விடும். யாருடைய பெயர் கூப்பிடப்படவில்லையோ, அவன் முகம் வாடிவிடும். அம்முற்றம் முழுவதுமே ஒரு விதமான சந்தோஷம் இரைச்சலாக எழும்பிக் கொண்டிருந்தது.

மட்டுரூவும், கோபியும் சோகத்தையும், துயரத்தையும் விழிகளிலே தேக்கியவாறு கொட்டடிக்கு வெளியே நின்று கொண்டிருந்தனர். இன்று யாரேனும் தங்களைச் சந்திக்க வருவார்கள் என்று அவர்களுக்கு நம்பிக்கை இருந்தது. ஆனால் பெயர்களெல்லாம் கூப்பிட்டு முடிந்த பின், அவர்களின் பெயர் கூப்பிடப்படாமல் போனதும் விழிகளில் தேங்கி நின்ற துயரம் மௌனமான அழுகையாகிக் கரைந்தது.

சற்று நேரத்திற்குப் பின், அழுகை கலந்த குரலில் "பார்த்தீர்களா? இன்று கூட ஒருவரும் வரவில்லை"

என்றான் கோபி.

'ஆமாம்'– எனப் பெருமூச்செறிந்த மட்டுரூ "கங்கைத் தாயின் விருப்பம்" என்றான்.

அச்சமயம் ஓடி வந்த வார்டன் "எழுந்திரு, எழுந்திரு கங்கா பயில்வான்! உன்னைச் சந்திக்க வந்திருக்கிறார்கள். சீக்கிரம். பதினைந்து நிமிடம் இப்படியே கழிந்து விட்டது" என்றான்.

இதைக் கேட்டதும் மட்டுரூவின் முகம் மலர்ந்து விட்டது. "என்னைச் சந்திக்க யாரும் வரவில்லையா? வார்டர் சாகப்" என வினவினான் கோபி.

"இல்லையப்பா...... இல்லை. வந்திருந்தால் சொல்ல மாட்டேனா?" என்ற வார்டர் "கங்கா பயில்வானின் வீட்டில் வந்திருக்கிறார்கள். கங்கைத்தாயைத் தவிர இவருக்கு யாரும் இல்லையென்றுதான் நாங்கள் நினைத்திருந்தோம். ஆனால் இன்றுதான் தெரிந்தது— வந்து"

"என்னுடன் கோபியும் வருவான்' என்ற மட்டுரூ வருத்தத்துடன் "இவனும் என் உறவினன்தான்" என்றான்.

"ஜெயிலர் சாகப்பின் உத்தரவின்றி இது எப்படி முடியும்? வா! வா! நேரமாக்கிப் பொழுதை வீணாக்கி விடாதே"– என்ற வார்டர் தன் இயலாமையை வெளியிட்டான்.

"அரே! வார்டர் சாகப்! இத்தனை நாட்களுக்குப் பிறகு யாரோ சந்திக்க வந்திருக்கிறார்கள். மாதாமாதம் எங்களைப் பார்க்க யார் வரப் போகிறார்கள்? கொஞ்சம் தயவு செய்யப்பா! எங்களுக்கு நீதான் ஜெயிலர்" என்று வேண்டினான் மட்டுரூ.

"ரொம்ப கஷ்டம் பயில்வான்! இல்லாவிடில் நீ சொல்லுவதை செய்யாமல் விடமாட்டேன். சீக்கிரம் புறப்படு. அவர்கள் காத்துக் கொண்டிருக்கிறார்கள்" வார்டர் அவசரப் படுத்தினான்.

"போங்க அண்ணே! போய்ப் பார்த்துவிட்டு வாருங்கள். என் சார்பாகவும் எல்லா சமாசாரங்களையும் விசாரித்துக் கொள்ளுங்கள். எனக்காக வேண்டி நீங்கள்....."

"நீ வாயை மூடிக் கொண்டிரு!" என்று அதட்டிய மட்டுரூ

"வார்டர் சாகப் மனது வைத்தால் இது முடியும். இதுதான் எனக்குத் தெரியும்" என்றவாறே வார்டரைப் பரிதாபமாகப் பார்த்த வண்ணம் "வார்டர் சாகப்! இங்கு வந்து இத்தனை நாட்களாகி விட்டன. தங்களிடம் ஏதும் கேட்கவில்லை. இன்று என்னுடைய வேண்டுகோளை ஏற்றுக் கொள்ளுங் கள். கங்கைத்தாய் தங்களுக்குப் புத்திர பாக்கியத்தை அருளுவாள்" என்றான்.

வார்டருக்குக் குழந்தைகள் இல்லை. கைதிகள் அவனுக்கு புத்திரபாக்கியம் கிடைக்கும் என வாழ்த்தி, தங்களுடைய பல காரியங்களைச் சாதித்துக் கொள்வார்கள். இதுதான் அவனு டைய மாபெரும் பலவீனம். பகவான் யார் வாய் மூலம் பேசுகிறாரோ என்று எப்பொழுதும் நினைத்துக் கொள்வான். இப்பொழுதும் தர்மசங்கடத்தில் ஆழ்ந்த வனாய் "சரி! பார்க்கிறேன். நீ புறப்படுகிறாயா! அல்லது என் கஷ்டகாலத்தை அழைக்கிறாயா!" என்றான்.

"இல்லை, வார்டர் சாகப்! உறுதியாகச் சொல்லுங்கள். இல்லாவிடில் நானும் வரமாட்டேன். இத்தனை நாட்கள் என்னைப் பார்க்க எவருமே வரவில்லை. நானென்ன செத்தா போய்விட்டேன்? கங்கைத்தாய்—"

"சரி— சரி— நீ புறப்படு. சமயம் பார்த்து இவனையும் அனுப்பி வைக்கிறேன். ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் என் வேலையைப் பறித்துக் கொண்டுதான் நீங்கள் சும்மா இருக்கப் போகிறீர்கள்" என்றவாறே நடந்தான் வார்டர்.

மட்டுரூ மாமனாரின் கால்களைத் தொட்டு, வணங்கி னான். மைத்துனன் மட்டுரூவின் கால்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டவன் அவனைத் தழுவிக் கொண்டான். உட்கார்ந்து சமாசாரங்களைப் பேசத் துவங்கிய போது எங்கிருந்தோ மெல்ல வந்து கோபி அவனுடன் அமர்ந்து கொண்டான்.

"இவன்தான் ஹார்தியாவின் கோபி. அதுதான் அந்த கோபி-மாணிக். பெயரைக் கேள்விப் பட்டிருக்கிறீர்கள் அல்லவா?" என்றான் மட்டுரூ.

"ஆமாம், ஆமாம்—" என்றனர் இருவரும்.

"இவன்தான் இங்கு எனக்கு நண்பன். முதலில் இவனுடைய வீட்டுச் சமாசாரம்!" என்றான் மட்டுரூ.

'எல்லாம் சரியாகத்தானிருக்கும், ஏதாவது முக்கியமான விஷயமாக இருந்தால் காதில் விழுந்திருக்கும்"– என்றார் கிழவர். "நமது பக்கத்தைச் சேர்ந்த நீங்கள் இருவர் ஒன்றாக இருக்கிறீர்கள். அதுவும் நல்லதுதான். வீட்டை விட்டு வெளியே இருக்கையில் நம்ம ஊர், அக்கம்பக்கத்தைச் சேர்ந்த ஒருவருடன் இருப்பதை விடச் சிறந்தது வேறொன்றுமில்லை".

"நல்லது–பூஜன்!" மட்டுரூ தன் மைத்துனனின் பக்கம் திரும்பி, "நீ சொல்லு– நம் ஆற்றங்கரை விஷயம் எப்படி?" எனக் கேட்டான்.

"இந்த வருடம், நீரோட்டம் ரொம்பத் தூரம் விலகிப் போய்விட்டது. நம்முடைய குடிசையிலிருந்தே. அதிலிருந்து அரைக் கோச தூரம் இன்னும் அப்பால்...... இம்முறை மண் மிகமிக மிருதுவாக வழவழவென்றிருக்கிறது. நீங்கள் பார்த்தால் மிகச் சந்தோஷப்படுவீர்கள். இந்த வருடம் விதை விதைத்தால், ஒரு கட்டா (நில அளவு)விற்கு ஐந்து மணங்கு பயிர் தேறும். நான் பச்சாதாபப்பட்டுக் கொண்டிருக்கிறேன். என்ன செய்ய? ஜமீன்தார்கள் மேற்குப் புறமாக கொஞ்சம் உழுது பயிரிட்டிருக்கிறார்கள். அந்த விளைச்சலைப் பார்க்கும்போது பொறாமையாக இருக்கிறது."

"குடியானவர்கள்?......"

"இல்லை...... ஜமீன்தார்கள் எத்தனையோ முயற்சி செய்தார்கள். ஆனால் உங்களிடமுள்ள பயத்தினால் யாரும் இசையவில்லை. ஜமீன்தார்களின் இந்த விளைச்சலை நான் விட்டு வைப்பேனா? பாருங்கள்! என்ன நடக்கிறதென்று! கரையோரத்துக் குடியானவர்களெல்லாம் கறுவிக் கொண்டிருக்கிறார்கள். நீங்கள் சிறைக்குச் சென்றது எல்லோருக்கும் வருத்தம். போலீஸார் கூட வழக்கமான தொந்தரவுகள் தரவில்லை. நீங்கள் மட்டும் வெளியே வாருங்கள், பிறகு பார்க்கலாம் எந்த ஜமீன்தாரின்

அப்பனுக்கு அங்கே கால் வைக்கத் துணிச்சல் வருகிற தென்று! எல்லா ஏற்பாடுகளும் நடந்து கொண் டிருக்கின்றன......"

'சபாஷ்' என பூஜனின் முதுகைத் தட்டிக் கொடுத்தான் மட்டுரூ. "நீ ரொம்பக் கில்லாடியாகிவிட்டாய். பயந்தாங் கொள்ளி என்று நான் நினைத்துக் கொண்டிருந்தேன்"

"கங்கைத்தாயின் தண்ணீரைக் குடித்து, அந்த மண்ணிலே வளர்ந்த பின்னும் ஒருவன் கோழையாக இருக்க முடியுமா மாப்பிள்ளை? நீங்கள் வந்தபின்தான் பாருங்களேன். ஒருமணி தானியம் அந்த ஜமீன்தார்களின் வீட்டிற்குப் போனால் நான் கங்கையில் மூழ்கி உயிரை விட்டுவிடுவேன் ஆமாம்."

"நல்லது! நல்லது! இனி மற்ற விஷயங்களைச் சொல். இந்தக் குளிரிலும், பனியிலும் அப்பாவை ஏன் இழுத்துக் கொண்டு வந்தாய்" மட்டுரூ திருப்தியுடன் வினவினான்.

"அம்மா கேட்கமாட்டேன் என்று கூறிவிட்டாள். இந்தச் சாக்கில் கிரகண ஸ்னானமாகிவிடும். பாபா விசுவ நாதரையும் தரிசிக்க முடியும். வாழ்க்கையில் ஒரு தீர்த்த யாத்திரையும் முடிந்து விடும். இல்லையா! இனி நீங்கள் உங்களைப் பற்றிச் சொல்லுங்கள். உடம்பு தளர்ந்து விட்டதே!"

"அப்படியொன்றுமில்லை. கங்கைத்தாயின் அருளினால் எல்லாம் நல்லபடியாய்க் கழிகின்றது. நீ எல்லோரையும் கவனித்துக் கொள். ஜமீன்தார்களின் பிடிக்குள் குடியான வர்கள் சிக்கிக் கொள்ளாதவாறு உன் முயற்சிகளைத் தொடர்ந்து செய்! பிறகு நான் வந்து எல்லாம் கவனித்துக் கொள்கிறேன். உன்னுடைய விளைச்சல் எப்படி இருக் கிறது? கரும்பு எத்தனை போட்டிருக்கிறாய்?"

"இன்னமும் ஒரு மழை பெய்தால் விளைச்சல் நன்றாக இருக்கும். மிக நன்றாய் விளைந்திருந்தது. ஆனால் பகவான் நீர் பாய்ச்சாத வரையில், மனிதன் எத்தனை தண்ணீர் பாய்ச்சினால் என்ன? இரண்டு பீகா கரும்பு போட் டிருக்கிறேன். நன்றாய் விளைந்திருக்கிறது. எதைப் பற்றியும்

கவலையில்லை. களஞ்சியத்தில் இன்னமும் கொஞ்சம் தானியம் கிடக்கிறது".

"பாபூவெல்லாம் எப்படி இருக்கிறார்கள்?" மட்டுரூ தன் பிள்ளைகளைப் பற்றி விசாரித்தான்.

"பெரியவனைப் பள்ளிக் கூடத்திற்கு அனுப்பியிருக் கிறேன். அவனைக் கட்டாயம் படிக்க வைக்க வேண்டும் மாப்பிள்ளை! குறைந்தபட்சம் ஒரு வீட்டில் ஒருவனாவது படித்தவனாக இருக்க வேண்டியது அவசியம். ஜமீன்தாரும், கணக்குப் பிள்ளையும் வரி, சட்டம், கிட்டம் என்று அளக்கிறார்களே, அதைப் பற்றித் தெரிந்து கொள்ளாமல் அவர்களுக்குப் பதில் கூற முடியாது. படிக்காத முட்டாள் என நினைத்து அவர்கள் ஒவ்வொரு விஷயத்திலும் நம்மை முட்டாளாக்கி அபகரித்துக் கொள்கிறார்கள்".

"நாமும் கபோதிகள் மாதிரி ஒன்றும் புரியாது அவர்கள் வாயைப் பார்த்துக் கொண்டு நிற்கிறோம். ஆற்றங்கரை நிலம் பற்றிக் கூட அவர்கள் ஏதோ சட்டம் கண்டு பிடித்திருக்கிறார்களாம். நாணற்காட்டின் மீது யாருக்கு உரிமையுள்ளதோ அவர்களுக்கு நிலத்தின் மீதும் உரிமை யுண்டாம் மாப்பிள்ளை! பலவந்தமாகத்தானே கட்டாயப படுத்தி, காட்டை வெட்டி அவர்கள் விற்றுக் கொண் டிருந்தார்கள்! உண்மையிலேயே அதன் மீது அவர்களுக்கு ஏதும் உரிமை இருந்ததா என்ன? கேட்டால்,சட்டத்தைப் பற்றி உனக்கென்ன தெரியும் என்கிறார்கள். வந்து விட்டார்கள் பெரிதாய்! சட்டத்தைப் பற்றி அளக்க! அறுவடை செய்து எப்படி வீட்டிற்கு எடுத்துக் கொண்டு போகிறார்கள்..... பார்க்கலாம்! கலப்பை பிடித்தார்களா? உழைத்துப் பாடுபடவில்லையே! பின் எந்த உரிமையில் அவர்களுக்கு விளைச்சல் கிடைக்க வேண்டும்? எந்த விவசாயி உழுது பயிரிட்டுப் பாடுபட்டானோ அவனுக்குத் தான் அதில் உரிமையுண்டு. மாப்பிள்ளை? இந்த விளைச்சல் அந்த விவசாயிகளின் வீட்டிற்குத்தான் செல்ல வேண்டும் என்று நான் முடிவு விட்டேன்"

"சரி...சரி.... சாப்பிட ஏதாவது கொண்டு வந்திருக்

கிறீர்களா? சத்துமா சாப்பிட வேண்டுமென்று ரொம்ப நாளாய் ஆசையாக இருக்கிறது"– என்று சிரித்துக் கொண்டே கூறினான் மட்டுரு.

"கொண்டு வந்திருக்கிறேன் மாப்பிள்ளை. கொஞ்சம் சத்துமா இருக்கிறது. புதியவெல்லம், அவல் கூட இருக்கிறது. அங்கே கேட்டருகில் வைக்கச் சொல்லி விட்டான். அனுப்பப்படும் என்றான். உங்களுக்குக் கிடைத்துவிடும் அல்லவா?" பூஜன் தனது சந்தேகத்தை நிவர்த்தி செய்து கொள்ள விரும்பினான். "வாசலிலேயே கொடுத்துவிட்டு வர அவன் விரும்பவில்லை. நானே என் கையால் கொடுக்க வேண்டும் என்றான். அந்த அதிகாரி ரூல்ஸ், சட்டம் என்று பேசியதும் ஒன்றும் புரியாமல் அங்கேயே வைத்துவிட்டு வந்துவிட்டான்."

"ஊம், அரைப் பங்கு கால்பங்கு வந்து சேரும்".

"மீதி?" பூஜன் வியப்புடன் வினவினான்.

"மீதி! ரூல்ஸ், சட்டத்தின் வயிற்றுக்குள் போய்விடும்" என்ற மட்டுரு உரக்கச் சிரித்தான். கிழவரும், பூஜனும் அவன் முகத்தையே இமையாது பார்த்துக் கொண்டு நின்றனர்.

"இன்னொரு முறை வந்தால் கோபியின் வீட்டுச் சமாசாரங்களையும் விசாரித்துக் கொண்டு வாருங்கள்" என்றான் மட்டுரு. "மறந்து விட மாட்டோம். வந்தால் கட்டாயம் விசாரித்துக் கொண்டு வருகிறோம். ஆனால் மாப்பிள்ளை! இனி வருவது ரொம்பவும் கஷ்டம் என்று தோன்றுகிறது. அவகாசம் ஏது? நீங்களும் சௌக்கிய மாகத்தானே இருக்கிறீர்கள்?" பூஜன் தனது இயலாமையை வெளியிட்டான்.

"இருந்தாலும் முயற்சி செய்யேன். வீட்டு சமாசாரம் அவ்வப்போது கிடைத்துக் கொண்டிருந்தால் வேறு கவலை யில்லை".

சந்திப்புகளுக்கான நேரம் முடிந்து விட்டதைக் குறிக்கும் மணி அடித்தது. சிரித்துக் கொண்டு வந்த முகங்கள் இப்பொழுது துயரமுற்று, பாரமான உள்ளத்துடன் திரும்ப லாயின. ஒருத்தன் விம்மிக் கொண்டிருந்தான். ஒருத்தன்

கண்களைத் துடைத்துக் கொண்டிருந்தான். இன்னொருவன் மூக்கைச் சிந்தினான். யாருடைய வாயிலிருந்தும் ஒரு வார்த்தைகூட வெளிவரவில்லை. திரும்பித் திரும்பி வாசலையும், தங்களையும் பார்த்துக் கொண்டே செல்லும் தங்கள் உற்றார் உறவினர்களை துயரம் மிகுந்த விழிகளால் பார்த்தவாறே அவர்கள் நின்றனர்.

# 8

இரண்டு ஆண்டுகள் கழிவதற்கு முன்னரே, கோபியின் வீட்டிற்கு விருந்தாளிகள் வரப்போகத் துவங்கிவிட்டனர். கோபி இன்னமும் சிறையில்தான் இருக்கிறான். அவன் வெளியே வர இரண்டு வருடங்களுக்கு மேலாகும் என்று தெரிந்திருந்தும் கூட அவர்கள் விடவில்லை. சத்யாகிரகிகள் மாதிரி தர்ணா போட்டுக் கொண்டிருந்தனர். முடமாகி விட்டிருந்த கோபியின் தந்தையிடம் தங்களது சம்பந்தத்தை ஏற்றுக் கொள்ளுமாறு கேட்டுக் கொண்டனர். கோபி சிறையிலிருந்து வெளியே வந்த பின் திருமணம் செய்து கொள்ளலாம் என்றனர்.

கோபியின் அம்மாவிற்கு அவையெல்லாம் சந்தோஷ மான நாட்கள். அவள் விழிகளில் பிரகாசமும், முகத்தில் மகிழ்ச்சியின் ஒளியும் பரவிவிடும். அவள் ஓடியாடி விருந்தாளிகளை உபசரிக்க ஏற்பாடுகளைச் செய்வாள். இதைச் செய், அதைச் செய் என்று மருமகளுக்கு உத்தரவிடுவாள். ஆனால் அண்ணிக்கு அச்சமயங்களில் மனதே சரியாக இருக்காது. எரிச்சலுடன் வேலைகளைக் கவனிப்பாள்.

முகம் கோபத்தால் ஜிவுஜிவு என்றிருக்கும். விழிகளில் அனல் பறக்கும். மாமியாரிடம் முகம் கொடுத்துக் கூடப் பேச மாட்டாள். பாத்திரம் பண்டங்களை இங்குமங்கும் விசிறி அடிப்பாள். சில சமயம் அடங்கிய குரலில் "இப்பொழுதே

என்ன அவசரமாம்! முதலில் சிறையில் இருந்து வெளியே வரட்டும்'' என்பாள். உடனே மாமியார் ''அவன் வந்தா லென்ன, வராவிட்டால் என்ன? கல்யாணம் செய்ய வேண் டிய ஒன்றுதானே! நல்லதாக அமைந்தால், அமையட்டுமே. கிழவரைப் பற்றி என்ன நிச்சயம்? அவர் உயிரோடிருக்கும் போதே நிச்சயமாகட்டும்'' என்று பட்டென்று பதில் கூறுவாள்.

இதைக் கேட்டதுமே அண்ணியின் நெஞ்சிலும், தலை யிலும் பெரும் குழப்பமான கலவரமே மூண்டு விடும். இனமறியாக் கோபத்தில் உடம்பெல்லாம் எரியும். உலகத் தையே பொடிப்பொடியாக்கி விடுபவள் போல் தட் தட் என்று நிலமதிர நடப்பாள். மூக்கு விடைக்க, உதடுகள் கோண, பித்துப்பிடித்தவள் போல் என்ன என்னவோ முனகிக் கொண்டிருப்பாள்.

இதையெல்லாம் பார்க்க, மாமியாருக்கு எரிச்சல் மண்டிக் கொண்டு வரும். ''இந்தா! இதெல்லாம் நன்றாக இல்லை! என்னிடமே உன் புத்தியைக் காட்டுகிறாயா? பகவானிட மிருந்து என்ன வரம் வாங்கி வந்தாயோ, அதுதான் கிடைக்கிறது கண்முன்னே! நீ அதை அழுது கொண்டு அனுபவித்தால் என்ன, சிரித்துக் கொண்டு அனுபவித் தாலென்ன? இதைவிட்டால் வழியில்லை, நல்லபடியாக நீ இருந்தால், வயிற்றுக்கு இரண்டு கவளம் கிடைக்கும். இல்லாவிட்டால், அலைய வேண்டியதுதான். எல்லோரும் காரித் துப்புவார்கள்'' என்பாள்.

''துப்புவார்களா என்ன?'' அண்ணி சீற்றத்துடன் சீறு வாள். ''என்னுடைய அப்பா, அண்ணா செத்து விட்டார்களா என்ன? அவர்கள் கூப்பிட்டும் போகாம லிருந்ததன் பயனைத்தான் இப்பொழுது அனுபவித்துக் கொண்டிருக்கிறேன். எங்கே இருந்து கொண்டு உழைத் தாலும் அங்கே இரண்டு ரொட்டி கிடைக்கும். தேகத்தால் முடியாதவர்கள்தான் அழ வேண்டும்''.

தன்னையும், தன் கணவனையும் சுட்டிக்காட்டும் இந்தக் குத்தலைக் கேட்டதும் மாமியார் குமுறி எழும் கோபத் தீயில்

கருகிக் கத்துவாள் "அப்படியா! ஏதோ கொஞ்ச நாட்களாய் ஏதோ கொஞ்சம் செய்கிறாயே..... அதில் உனக்கு இத்தனை திமிர் ஏறிவிட்டதா? என்னை நீ என்னவென்று நினைத்துக் கொண்டிருக்கிறாய்? யார் கையில் வேண்டுமானாலும் தண்ணீர் குடிப்பவர்கள் வேறு யாராவது இருக்கலாம். நானில்லை! எதிர்த்து எதிர்த்துப் பேசுகிறாயே? பேசாதே! என் கைகள் இன்னமும் முறிந்து போகவில்லை. ஏதோ அப்பா, அண்ணா என்று பீத்திக் கொள்கிறாயே? அங்கே போய் இருந்து பார்! துரதிர்ஷ்டக் கட்டைகளுக்கு எங்கும் இடம் கிடைக்காது. உனக்கு இப்பொழுது எப்படித் தெரியும்? பட்டால்தான் தெரியும். சொன்னாளே என்று அப்பொழுது புரியும். இந்தக் கிழவர் படுத்து விட்டதால் வகை யற்றிருக்கிறேன். இல்லாவிட்டால் ஒரு வார்த்தை நீ எப்படி நாக்கை நீட்டிப் பேசுவாய் என்று பார்த்து விடுவேன்!"

இம்மாதிரியான ரகளைகளின் முடிவு -ஒன்று, அண்ணி தன் விதியை நொந்து கொண்டு புலம்பி அழுவாள், அல்லது அவள் மாமியார் கண்ணீர் சிந்துவாள். கிழவர் காதுகளில் வீழ்ந்தால் "கடவுளே! என்னைக் கொண்டு போய்விடப்பா? தினம் தினம் இந்தச் சண்டையைச் சகிக்க முடியவில்லை" என்று அரற்றுவார்.

தெருக்காரர்களுக்கு இப்பொழுது இந்த வீட்டைப் பற்றி எந்த அக்கறையும் இல்லை. இதுவே தினசரி வாடிக்கை யாகிப் போய்விட்டது. யார் என்னவென்று விசாரிப்பது? பெண்களைப் பொறுத்தவரையில் நிச்சயம் அவர்களுக்கு இதில் கொஞ்சம் ஆர்வமிருந்தது. அழுகைச் சத்தம் கேட்டால் யாரேனும் ஒருத்தி வருவாள். "இனி நீதான் துக்கத்தை விழுங்கிக் கொண்டு வாயை மூடிக் கொண்டிருக்க வேண்டும். மருமகளை நாலு வார்த்தை சொல்லாத மாமியார் ஏது? மாமியார், மாமனாருக்கு சேவை செய்துதான் உன் ஜன்மத்தைத் தொலைக்க வேண்டும். இவர்களோடு சண்டையிட்டுக் கொண்டு நீ எங்கே போயிருப்பாய்? அண்ணனோ, அப்பனோ பிறப்பால் தான் சொந்தம். கர்ம வினைக்குத் துணை வருபவர்கள்

அல்ல. தலை எழுத்துக் கெட்டுப் போனால் சொந்தம் கூட அன்னியமாகி விடும்'' என்று அண்ணிக்குப் புத்தி சொல்வாள்.

ஏதுமறியாதவள்போல் மாமியார் நொடிப்பாள் ''நீங்களே கேளுங்கள்! அப்படி நான் என்ன சொல்லி விட்டேனாம்? நான் ஏதாவது பேசுவேனா என்று உங்களுக்கெல்லாம் தெரியும். கட்டிளங்காளையாக இருந்த ஒரு பிள்ளை போய்விட்டான். இன்னொருத்தன் ஜெயிலில் இருக்கிறான். கட்டினவரோ கட்டிலோடு கிடக்கிறார். எனக்கு எதைப் பற்றி என்ன தெரியும்? பாவி உயிர் போகமாட்டேன் என்கிறது. இதையெல்லாம் சகித்துக் கொள்ள வேண்டுமென்று தலையில் எழுதி இருக்கிறபோது, சுகமாய் எப்படிக் கண்ணை மூட முடியும்?''

இதெல்லாம் அண்ணியின் காதில் விழ வேண்டும் என்றுதான் சொல்லப்பட்டது. மாமியார் ஏதேதோ சொல்லி விட்டாளே தவிர, உண்மையில் அண்ணி, அப்பா வீட்டிற்குப் போய்விட்டால் தன்பாடு ரொம்பவும் சிரமமாகி விடும் என்பது அவளுக்குத் தெரிந்ததுதான். குடும்பத்தை யார் நிர்வகிப்பது? அவளுக்கோ, கையைக் காலை அசைக்கக் கூடச் சிரமமாய் இருந்தது. இருந்தாலும் தன் பேச்சை விட்டுக் கொடுக்காமல், ''என்ன பெரிய வேலை? மூன்று பேருக்குச் சமைத்து, பரிமாறி, சாப்பிட வேண்டும். அவ்வளவுதானே! என்னால் என்ன முடிகிறதோ அதையும் செய்து கொண்டுதான் இருக்கிறேன். இவளிடமே கேளுங்கள்! இதுகூடச் செய்யாவிட்டால் என்னவாகும்? நாமென்ன ராஜா, மகாராஜாவா, உட்கார்ந்து சாப்பிட, சாப்பாடு போட! இப்படிச் செய்தால் நம்முடைய பிழைப்பு எப்படி நடக்கும்?''

''இல்லேம்மா! உன் மாமியார் சொல்வதெல்லாம் உன் நன்மைக்காகத்தான் சொல்லுகிறாள்! உடம்பு வணங்காமல் இருக்கிற பழக்கமெல்லாம் நீ பழக்கப்படுத்திக் கொள்ளக் கூடாது. கைம்பெண்ணின் கௌரவமே அவள் கையிலிருக்கும் காரியத்தில்தானிருக்கிறது. சும்மா இருப்பதில் இல்லை.'' என்பவள் ''எங்கேயாவது அரைத்து, கரைத்து, பாடுபட்டு

வயிறு வளர்க்காமலிருக்க பகவான் அருளட்டும்'' என்றும் கூறுவாள்.

அண்ணியின் காதில் இந்த வார்த்தைகள் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றுவதுபோல் உடம்பெல்லாம் பற்றி எரியும். ஆனாலும் அவள் வாயே திறக்கமாட்டாள். அன்னியர் களின் முன்னே வாயைத் திறக்கும் துணிச்சல் அவளுக்கில்லை. அவள் மௌனமாய் கண்ணீர் பெருக்கிய வண்ணம் பெருமூச்செறிவாள். ஏதோ, பேச்சுக்கு அப்பா வின் வீட்டுக்குப் போய்விடுவேன் என மிரட்டினாளே தவிர உண்மையில் அவள் எங்கும் போக விரும்பவில்லை. மைத்துனர் திரும்பி வந்ததும் ஏதாவது நடக்கும் என்று ஏனோ அவள் மனதில் ஒரு நம்பிக்கை ஒளிந்து கொண்டிருந்தது.

மாமியார், மருமகள் இருவருக்குமே அவரவர் சுயநலமிருந்ததால் சண்டை சச்சரவிட்டுக் கொண்டாலும் பிறகு ஒன்று சேர்ந்து கொண்டார்கள். சண்டை போட்ட அன்று மாமியார் கோபித்துக் கொண்டு சாப்பிட வராவிட்டால் மருமகள் சமாதானம் செய்வாள். மருமகள் கோபித்துக் கொண்டால் மாமியார் கவனித்துக் கொள் வாள்.

மாமனாருக்கும் தனக்குப் பணிவிடை செய்ய ஒருத்தி தேவையாக இருந்தது. அது அவருக்குக் கிடைத்துக் கொண்டிருந்தது. அண்ணியும் தனது பணிவிடையினால் அவரைச் சந்தோஷமாக வைத்திருக்கவே விரும்பினாள். கிழவரும் அவள்பால் சந்தோஷமாகத்தான் இருந்தார். ஏன் என்றால் அத்தகைய பணிவிடைகளை அவருடைய மனைவியினால் செய்ய இயலாது. அவர் எப்பொழுதாவது மருமகளின் கட்சியில் சேருவதும் உண்டு. கோபிக்காக வரும் வரன்களைப் பற்றி அவளிடம் பேசுவார். அவளுடைய அபிப்பிராயத்தைக் கேட்பார். அத்தகைய சந்தர்ப்பங்களில் அவள் ரொம்பவும் அமர்த்தலாகப் பேசு வாள் ''சம்பந்தம் மோசமில்லை. ஆனால் நமக்குச் சரிசமமானவர்கள் இல்லை. முதலில் கல்யாணத்தை நல்ல

இடத்தில் செய்தார்கள். இப்பொழுது இரண்டாம் முறை எங்கோ போய் விழுந்து விட்டார்கள் என்று நாலுபேர் சொல்லுவார்கள்".

கிழவருக்கு ரொம்பப் பெருமையாகப் போய்விடும். "மருமகளே! நீ சொல்லுவதும் சரிதான். நாலு இடத்தை வேண்டாம் என்று தள்ளியபின் அந்த சம்பந்தங்களை நான் முடித்தேன். என்ன செய்ய? எல்லாம் நாசமாகி விட்டது. குடும்பமே பாழாகிவிட்டது. ஒருவன் ஏமாற்றி விட்டுக் கண்ணை மூடிவிட்டான். இன்னொருவனோ சிறையில் கிடந்து தன் கருமத்தைத் தொலைத்துக் கொண்டிருக்கிறான். என்னுடைய இராம, லட்சுமண, சீதா, ஊர்மிளாவின் ஜோடி முறிந்து விட்டது. கைகால் இல்லாத முடமாகிவிட்டேன் நான்," என்று கூறும்போது கண்களில் நீர் நிறைந்து விடும். "என்னுடைய அந்த நாட்கள் இப்பொழுது இல்லை! வயல், வரப்பு, வீடு, வாசல் எல்லாம் சிதறிவிட்டது. மதிப்பும் மரியாதையும் உள்ள எந்தப் பெரிய மனிதன் என் வீட்டிற்குச் சம்பந்தம் பேச வருவான். யார் அந்த வரதட்சணை கொடுப்பான்?" என்றார்.

"மனத்தை வருத்திக் கொள்ளாதீர்கள் மாமா..... இன்னமும் ஒன்றும் மோசமாகி விடவில்லை. மைத்துனர் வந்ததுமே எல்லாவற்றையும் சமாளித்து விடுவார். எல்லாமே முன் போலவே சீராகிவிடும். அப்பொழுது பாருங்கள்! எத்தனை பேர் வந்து காலில் விழுகிறார்கள் என்று! கொஞ்சம் பொறுமையாக இருங்கள் மாமா! எதற்காக இவ்வளவு அவசரம்? முதலில் அவர் ஜெயிலிலிருந்து வெளியே வரட்டும்".

"ஆமாம், ஆமாம், இதையெல்லாம் நினைத்துத்தான் நான் யாருக்கும் பதில் சொல்லுவதில்லை. ஆனால் உன் மாமியார் உயிரை வாங்குகிறாள். பையனுக்கு இது இரண்டாம் கல்யாணம், ரொம்பவும் மீனமேஷம் பார்க்காதீர்கள். பார்த்தால் காரியம் நடக்காது என்கிறாள். அவளுக்கு ஏன் இத்தனை அவசரமோ தெரியில்லை. நாம் என்ன அத்தனை மோசமாகவா, கீழிறங்கிப்

போய்விட்டோம்? சம்பந்தம் பேச ஒருவனும் வரமாட்டானா என்ன? ஒன்றுமில்லாவிட்டாலும் குடும்பக் கௌரவம் என்று ஒன்று இருக்கிறதே இன்னும்! அவள் சொன்னால் சொல்லட்டும்! நான் அப்படிப்பட்ட இடத்திலெல்லாம் போய் விழ மாட்டேன்" என்றார் கோபியின் அப்பா பிடிவாதமாக.

* * *

ஒருநாள் மாலை முன்பின் தெரியாத அன்னியன் ஒருவன் கிராமத்தின் மேற்கெல்லையிலிருந்த குளத்தின் மண் கரையில் அமர்ந்து கொண்டிருந்தவர்களில் ஒருவனை நோக்கி– "கோபி சந்தின் வீடு எந்தப் பக்கம் உள்ளது?" என விசாரித்தான்.

கோடை நாட்களின் மாலைப் பொழுது, இருள் இறங்கி வந்து கொண்டிருந்த நேரம். சுற்றும் முற்றும் அடர்ந்த தோப்பும், துறவும் இருந்ததால் அங்கு இருள் பின்னும் கொஞ்சம் கனத்திருந்தது. களத்து மேட்டிலிருந்து வந்த குடியானவர்கள் இங்கு வந்து தோய்த்துக் குளித்து திண்ணையில் அமர்ந்து அன்றைய நிலவரத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர். பலரின் உடலில் ஈரத் துணி. ஒருசிலர் ஈரத் துணியைப் பிழிந்து தரையில் விரித்து உலர வைத்திருந்தனர். இன்னும் சிலர் குளத்தில் முங்கி எழுந்து கொண்டிருந்தனர். அவர்கள் இருமுவதும், தொண்டையைச் செறுமுவதும், ராம்ராம் என்று சொல்லுவதும், படிகளில் வந்து மோதி எழும் சிற்றலைகளின் ஓசையும் கலந்தொலித்துக் கொண்டிருந்தது. தோப்பிலிருந்த பறவை களின் இன்னொலி கேட்டது. காற்றில் அசைவே இல்லை. இருப்பினும் குளத்தின் கரையில் கொஞ்சம் ஈரமிருந்தது.

கேள்வி காதில் விழுந்ததும் எல்லோருடைய பார்வையும் மேலே உயர்ந்தது. குளத்தில் இருந்தவர்கள் கூட கழுத்தை நிமிர்த்தி அண்ணாந்து பார்க்க முயற்சித்தனர். "யார் நீ? யார் வீட்டைப் பற்றிக் கேட்கிறாய்?" என்று ஒருவன்

கேட்டான்.

அந்த அன்னியன் லுங்கி மட்டுமே அணிந்திருந்தான். வாட்டசாட்டமான உடல், மார்பில் கருத்தடர்ந்த ரோமங்கள் படர்ந்திருந்தது தெளிவாகத் தெரிந்தது. கழுத்தில் கறுப்பு வண்ண மூன்றுவட மாலை. முகத்தில் அடர்ந்த மீசை தாடி. கண்களில் கொஞ்சம் கர்வமும், அதிகார பாவமும் இருந்தது. கேசம் வாரப்படாது ஜடைபோல் கழுத்து வரை தொங்கியது.

கேள்வி கேட்டவன், கோபியின் வீட்டு விலாசத்தைக் கூறிவிட்டு "எங்கே இருந்து வருகிறீர்கள்?" என்று வினவினான்.

"காசியிலிருந்து வருகிறேன். அங்கே சிறையில் இருந்தேன்" எனக் கூறி விட்டு அவன் மேலே நடக்கத் துவங்கியதும் "அரே! அண்ணே! கோபி கூட பனாரஸ் சிறையில் இருப்பதாகத்தானே கேள்விப்பட்டோம். நீங்கள் அவனைச் சந்தித்திருக்கிறீர்களா?" என்று கேட்டான் அவன்.

அன்னியன் தடைபட்டாற்போல் நின்று விட்டான். "நாங்களிருவரும் ஒன்றாகத்தான் இருந்தோம். அதைப் பற்றிக் கூறத்தான் வந்திருக்கிறேன்" என்றான்.

இதைக் கேட்டதுமே சட்டென எழுந்து அவனைச் சூழ்ந்து கொண்டனர். குளத்துக்குள்ளே இருந்தவர்கள் கூட மிகுந்த ஒருமித்த குரலில் "சொல்லப்பா! சொல்லு! கோபி எப்படி இருக்கிறான்? நன்றாக இருக்கிறானா?" என்றனர்.

"ஓ! சௌக்கியமாய் இருக்கிறான். எதைப் பற்றியும் கவலையில்லை" என்றவாறே வந்திருந்தவன் மேலே நடக்க, மற்றவர்கள் அவனைப் பின் தொடர்ந்தனர். துணியைக் காயப் போட்டிருந்தவர்கள், அதைக் கையி லெடுத்துக் கொண்டனர். ஒருவன் சேதியைச் சொல்ல முன்னே ஓடினான்.

"கோபியின் மார்பிலே அடிபட்டிருந்ததே! அது சரியாகி விட்டதா?

"சரியாகி விட்டது"

"கிராமத்திலிருந்து இன்னும் சிலர் அவனோடு சிறை

சென்றிருந்தனர், அவர்களைப் பற்றி ஏதேனும் தெரியுமா?''

''அவர்களெல்லாம் அங்கே இல்லை. ஒருக்கால் சென்ட்ரல் ஜெயிலில் இருப்பார்கள்''.

''நீங்கள் இருவரும் ஒன்றாகவே இருந்தீர்களா?''

''ஆமாம்''

''அண்ணே! உங்களுக்கு ஏன் தண்டனை கிடைத்தது? நீங்கள் எந்த ஊர்?''

''ஆற்றங்கரை நிலம் சம்பந்தமாக, ஜமீன்தார்களுடன் தகராறு ஏற்பட்டது. உங்களுக்கெல்லாம் தெரியாதா என்ன? இரண்டரை, மூன்று வருடத்திற்கு முன் நடந்தது. மட்டுரூ பயில்வான் உங்களுக்குத் தெரியாதா?

''அரே ரே! மட்டுரூ பயில்வான்ஜீ!'' யாவரும் திடுக்கிட்டவர்களாய் வியப்புடன் கூவினர். ''ஜெய்! கங்காஜீ!

'' ஜெய் கங்காஜீ''

''எல்லா விஷயமும் தெரியும் அண்ணே. எத்தனையோ தூரத்திற்கும் அந்த விஷயம் எட்டி விட்டது. உங்களுக்கு தண்டனை எத்தனை வருடம் கிடைத்தது?''

''மூன்று வருடம்.''

''கோபிக்கு ஐந்து வருடத் தண்டனையல்லவா? எப்பொழுது வெளியே வருவான்! பாவம்! அவன் குடும்பம், வீடு, வாசல் எல்லாம் நாசமாகி விட்டது. பெண்டாட்டியும் இறந்து விட்டாள்.''

''என்னது?'' திடுக்கிட்டவனாய் வினவினான்.

''உங்களுக்குத் தெரியாதா! ஒரு வருடத்திற்குள்ளேயே அவள் காலமாகி விட்டாள். கோபியிடம் ஒருவரும் சொல்லவில்லையா?''

''சொல்லியிருந்தால் என்னிடம் கூறியிருக்க மாட்டானா? ரொம்பக் கெட்ட செய்தியைச் சொல்லுகிறீர்களே!''

''அண்ணே! இதெல்லாம் நம் கையிலிருக்கும் விஷயமா என்ன? அண்ணன் இறந்தான், பெண்டாட்டியும் காலமாகி விட்டாள். அவன் அப்பாவிற்கும் முடக்கு வாதம் வந்து முடங்கிவிட்டார். கடைசி மூச்சோடுதான் அதுவும் போகும் போலிருக்கிறது. கட்டிளம் பெண்ணான விதவை வேறு

அழுது புலம்பிக் கொண்டிருக்கிறாள்! எதைச் சொல்லுவது அண்ணே! அதிர்ஷ்டம் கெட்டால், அறிவு வேலை செய்யாது. ஒருகாலத்தில் அவன் 'ஒகோ'வென்றிருந்தான்! இன்றைய காலம் இப்படி! அதெல்லாம் நினைவு வந்தால் மனது கஷ்டப்படுகிறது— ஹூம்— இப்படி வாருங்கள்"

தூரத்திலிருந்து அழுகைச் சத்தம் கேட்டது. செய்தி கேட்டதுமே மாமியாரும், மருமகளும் அழுது புலம்பத் தொடங்கி விட்டனர். பழைய விஷயங்களை, கடந்து போனவைகளை நினைத்து நினைத்து அவர்கள் அழுது கொண்டிருந்தனர். சத்தம் கேட்டு வந்த அக்கம்பக்கத்துப் பெண்டுகள் அவர்களைச் சமாதானம் செய்து கொண்டிருந்தனர். கோபியின் அப்பா, எப்படியோ சமாளித்துக் கொண்டு, எழுந்து சுவரில் சாய்ந்து கொண்டு உட்கார்ந்து விட்டார். அவர் உள்ளமும் உள்ளூர அழுது கொண்டு தானிருந்தது.

யாரோ சிறியதொரு கட்டிலைக் கொணர்ந்து கிழவரின் கட்டிலருகே போட்டனர். இன்னொருவன் விளக்கைக் கொணர்ந்து மாடத்தில் வைத்தான்.

மட்டுரூ, கிழவரின் பாதங்களைப் பிடித்து வணங்கினான். கிழவர் உள்ளம் நெகிழ்ந்து ஆசீர்வதித்தார். பிறகு "என் கோபி எப்படியப்பா இருக்கிறான்?" எனக் கேட்டவர் விம்மி விம்மி அழலானார்.

தங்களது அன்பிற்குரிய கோபியைப் பற்றிய சமாசாரங் களைக் கேட்க நிறையப் பேர் வந்து கூடிவிட்டனர். பசுவதை செய்துவிட்டவன் போல் மட்டுரூ மௌனமாய் அமர்ந்திருந்தான். கூடி இருந்தவர்கள் தங்களுக்குள் ஏதேதோ பேசிய வண்ணம் பெருமூச் செறிந்தனர்.

"அழாதீர்கள் சித்தப்பா! உங்களுக்கு ஏற்கனவே உடல் நலம் இல்லை, இன்னமும் மோசமாகி விடும். நிறைய நாட்கள் கழிந்து விட்டன. இன்னமும் கொஞ்சம் காலம்தான். கழிந்து விடும் சீக்கிரம். கஷ்ட காலத்தைக் கொடுத்த கடவுள் நல்ல காலத்தையும் காட்டுவார்" என்று சிலர் கிழவருக்கு சமாதானம் கூறினர்.

"அண்ணே! தண்ணீர் ஏதாவது குடிக்கிறீரா?" என்று மெல்ல வினவினான் ஒருவன்.

"என்னடா கேட்கிறாய்? போய், ஒரு சொம்பும், டம்ளரும் கொண்டு வா! ரொம்பவும் களைத்துப் போயிருக்கிறார்" என்றார் வயதான ஒருவர். "கை கால் கழுவிக் கொண்டு கொஞ்சம் சிரமப் பரிகாரம் செய்து கொள்ளப்பா! இன்று ராத்திரி இங்கேயே தங்கலாம். பாவம் இவர்களுக்கு ஆறுத லாக இருக்கும்' என்றார்.

மட்டுருவின் வாயிலிருந்து வார்த்தைகளே வரவில்லை. அவன் ஏதோ நினைத்துக் கொண்டு வந்தான். உறங்கிக் கிடந்த வேதனையின் நரம்புகளைத் தூண்டிவிடப் போகிறோம் என்று அவனுக்கென்ன தெரியும்?

மெல்ல மெல்ல, நெடுநேரம் கழித்து பொங்கி எழுந்த துயரம் மெல்ல மெல்ல அடங்கியது. வந்திருந்தவர்கள் ஒவ் வொருவராச் செல்லத் துவங்கினர்.

"கைகால் கழுவிக் கொள்ளப்பா" என்றார் கிழவர். "உன்னை வரவேற்று உபசரிக்க இங்கு யாரும் இல்லை. அதைப் பற்றி நினைக்காதே. உன்னைப் பற்றிய புக ழெல்லாம் நிறையக் கேள்விப்பட்டிருக்கிறோம். நீ கோபி யைப் பற்றிய சேதி சொல்ல வந்திருப்பது, துக்கப்பட்ட எங்களுக்கு கொஞ்சம் சந்தோஷமாயிருக்கிறது. பகவான் உனக்கு நன்மை செய்யட்டும்."

மட்டுரு கை கால் முகம் கழுவிக் கொண்டு வந்ததும், கோபியின் அம்மா தயிரும், வெல்லமும் கலந்த சர்பத்தை நிறைத்து லோட்டாவைக் கொண்டு வந்து அவன் முன்னே வைத்தாள். மட்டுரு அவள் பாதங்களையும் தொட்டு வணங்கினான். தலைப்பினால் கண்களைத் துடைத்த வண்ணம் கிழவி அங்கேயே நின்றாள்.

சர்பத்தைக் குடித்த பின் தனக்குள் பேசிக் கொள்பவன் போல் "கவலைப்பட எதுவுமில்லை அம்மா! கோபி நன்றாக இருக்கிறான். நாங்கள் ஒன்றாகவே உண்டு, உறங்கி, பேசிக் கொண்டிருந்தோம். வீட்டுச் சமாசாரம் எதுவும் தெரியாமல் இருப்பது ஒன்றே ஒன்றுதான்

அவனுக்கு வருத்தம்'' என்றான் மட்டுரு.

''என்னப்பா செய்வது? வந்து போக இங்கு எவருமில்லை என்பதைத்தான் நீயே பார்க்கிறாயே! முதலில் அவன் மாமனார் வீட்டார் போய்க் கொண்டிருந்தனர். இப் பொழுது அவர்களும் மாறி விட்டார்கள். இனி எங்களால் அவர்களுக்கு ஆக வேண்டியதென்ன இருக்கிறது?'' விம்மல் களுக்கிடையே கிழவி கூறினாள்.

''கடிதமாவது எழுதியிருக்கலாம்!''

''கடிதமெல்லாம் அங்கு போகுமென்று எங்களுக் கென்னப்பா தெரியும்.''

''ஏன் வராது? மாதமொரு கடிதம் கிடைக்குமே''

''அப்படியென்றால் நாளைக்கே எழுதிப் போடுகிறேன்''.

''பரவாயில்லை, நான் எழுதிவிடுகிறேன். நீங்கள் கவலைப்பட வேண்டிய அவசியமேயில்லை. கோபியின் மனைவி இப்பொழுது உயிருடன் இல்லை எனக் கேள்விப் பட்டேன். இது பற்றி அவனுக்குத் தெரியவே தெரியாதே!''

''நான்தான் தெரிவிக்க வேண்டாம் என்று கூறி விட்டேனப்பா! தினமும் எத்தனை பேர் இங்கே தொந்தரவு செய்ய வருகிறார்கள் தெரியுமா? எப்பேர்ப்பட்ட மருமகளை இப்போ கொண்டு வருகிறேன் பார்—'' என்றார் கிழவர்.

''வேண்டாம் பெரியவரே! இனி அவன் திருமணத்தைப் பற்றி நான் கவனித்துக் கொள்கிறேன். நீங்களோ நோயாளி. ஓய்வாக இருங்கள். எல்லாம் நான் பார்த்துக் கொள்கிறேன். கோபி என் உடன் பிறந்த தம்பியை விட மேலானவனாக நினைப்பது பற்றி உங்களுக்குத் தெரியாது. பெரியப்பா! அவனும் என்னை அப்படித்தான் நினைக் கிறான். ஆமாம்! அண்ணி நலமாக இருக்கிறாரா? கோபி அண்ணியைப் பற்றி ரொம்பவும் நினைத்துக் கொள் கிறான்.'' என்றான் மட்டுரு.

கதவின் மறைவிலிருந்து அண்ணி இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருக்கிறாள் என்பது யாருக்கும் தெரியாது.

''இனி அவளுக்கு நல்லது கெட்டது என்னப்பா இருக் கிறது? தலையெழுத்து வஞ்சித்து விட்டது. இனி வாழ்க்கை

யில் அவளுக்கென்ன இருக்கிறது? உயிரோடு இருக்கும் வரை இங்கேயே கிடக்க வேண்டியது தான். அவள் அப்பா, அண்ணா கூட அவளைப் பற்றி எதுவும் விசாரிக்க வில்லை" என்றாள் கிழவி.

"கோபிக்கு அண்ணியைப் பற்றித்தான் ரொம்பவும் கவலையாக இருக்கிறது. இரவு பகல், அண்ணி, அண்ணி என்று புலம்பிக் கொண்டிருக்கிறான். இரண்டு பேருக் குள்ளேயும் ரொம்பவும் அன்பிருந்ததா என்ன?" என வினவினான் மட்டுரு.

"மகனே! என்ன சொல்ல! மருமகள் அப்படிப்பட்டவள் அப்பா! கட்டின பசு அவள்" என்றார் கிழவர், "அவள் செய்கிற பணிவிடைகளால்தான் என் உயிர் இன்னமும் இருக்கிறது. வெறிச்சோடும் அவளது வகிட்டைப் பார்க்கும் போதெல்லாம் என் நெஞ்சு வெடித்து விடும் போலிருக்கிறது. இந்த வயதில் பாவம் இவளுக்கு இத்தகைய கஷ்டம் வந்து விட்டது. மகனே, நானிருக்கும் வரையில் அவளுக்கு எந்தக் கஷ்டமும் நேரிடாது. அவள் என் மூத்த மருமகள். ஒருநாள் இந்த வீட்டின் எஜமானியாக இருப்பாள் அவள். அவள் தேவி அப்பா!" என்றார் கிழவர்.

இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த கிழவி மன திற்குள் பொருமினாள். அவளால் பொறுக்க முடியாமல் போகவே, இடைமறித்தாள். "சாப்பாடு தயாராக இருக்கிறது. இப்பொழுதே சாப்பிடுகிறாயா! அல்லது—"

## 9

ஆற்றங்கரைப் பாசனத்து விவசாயிகளுக்கு இயற்கை யாகவே துணிச்சலும், தன்னிச்சையான போக்கும் உண்டு. மைல்கணக்காக விரிந்து பரந்து கிடக்கும் திறந்தவெளி மைதானம். முட்செடிகளும், நாணல் புதர்களும் மண்டிக் கிடக்கும் காடுகள். பிறந்ததிலிருந்தே, ஆற்றுடன் பிணைந்

துள்ள உறவும், வாழ்வும் அவர்களுடையது.

அச்சமின்றி அடர்ந்த காடுகளில் மாடுகள், எருமைகளை மேய்ப்பது, புல்லும், விறகும் வெட்டுவது, ஆற்றிலே நீந்துவது, படகு விடுவது, குஸ்தி, சிலம்பம் பழகுவது, எருமைப் பாலை மிகுதியாகப் பருகுவது, என அவர்களின் வாழ்க்கை துவங்கி அப்படியே கழிந்தும் விடுகிறது. இயற்கையின் மடியிலே வளர்ந்து, விளையாடி, தூய்மை யான காற்றைச் சுவாசித்து, தூய்மையான நீரைப் பருகி, பாலும் தயிருமாய் உண்டு, தின்று, உடற் பயிற்சியிலும் ஈடுபட்டிருந்ததால் அவர்கள் யாவருமே பலமும், உறுதியான உடல்வாகும், தன்னிச்சையான போக்கும் உடையவர்கள். விரிந்து, பரந்து கிடக்கும், எல்லையற்ற காடுகளும், மைதானங்களும் எவருக்கும் அஞ்சாத, கட்டுப்படாத, சுதந்திரமான, சுயேட்சையான இயல்பை, குழந்தைப் பருவத்திலிருந்தே ஏற்படுத்தி விட்டிருந்தது.

மேலும் ஜமீன்தார்களின் ஊர்களும் அங்கிருந்து வெகு தூரத்திலிருந்தன. அங்கிருந்து கொண்டு, தங்களைச் சுற்றிலு மிருந்த விவசாயிகளைத் தங்கள் அதிகாரத்திற்கும், கொடுமைகளுக்கும் உட்படுத்தி, அடக்கி ஆள்வதுபோல், இவர்களைத் தங்கள் ஆதிக்கத்திற்கும், அதிகாரத்திற்கும் அவர்களால் உட்படுத்த இயலவில்லை. மாறாக இவர்களைக் கண்டு அவர்கள் மனதிற்குள் அஞ்சினர். இவர் களுடைய பலம், சூழ்நிலை, தன்னிச்சையான எவருக்கும் கட்டுப்படாத இயல்பு, சாகவும் துணிந்த துணிச்சலான போக்கின் முன்னால் தங்களால் எதுவும் செய்ய இயலாது என்பதை ஜமீன்தார்கள் அறிந்திருந்தனர். இதனால்தான் இயன்ற வரையில் அவர்களிடம் சமரசம் செய்து கொண்டு விடுகின்றனர். எங்கேயேனும் சற்றே அத்துமீறி நடந்தாலோ, குத்தகையோ, வரிப் பணமோ, சரியாகக் கட்டாமல் அரையும் குறையுமாய் கொடுத்தாலோகூட கண் டும் காணாதவர்கள் போலிருந்து விடுவதுண்டு. மோதிக் கொள்ளும் துணிவு அவர்களிடம் இல்லை. போலீஸ்கூட நேருக்கு நேர் அவர்களுடன் மோதுவதைப் பெரிதும்

தவிர்த்தது. அதுவும் கூட யாரேனும் ஒரு ஜமீன்தார், அவர்களுக்கு நிறைய லஞ்சம் கொடுத்தால். போலீஸ் நேரடியாகத் தாக்காது. மறைந்து, ஒளிந்து, ஏமாற்றி, சதி செய்து, இரண்டொருவரைப் பிடித்து, தங்களது அதிகாரத்தை வலிமையைக் கொஞ்சம் காட்டும். அவ்வளவுதான். அதற்கு மேல் எதுவுமில்லை.

இந்த விவசாயிகள் எத்தனை பலசாலிகளாக, சுதந்திரமானவர்களாக, எவருக்கும் அஞ்சாதவர்களாக இருந்தார்களோ, அத்தனைக்கத்தனை அடிமுட்டாள் களாகவும் இருந்தனர். அற்ப விஷயத்திற்குக் கையில் தடியை எடுத்துக் கொள்வது, கொலை, களவு செய்வது, தங்களுக்குள் சண்டை போட்டுக் கொள்வது, களஞ்சியத்திற்குத் தீ வைப்பது, பிற வயலில் புகுந்து பயிரை அறுவடை செய்வது, கொள்ளை அடிப்பது, தினசரி நடக்கும் விஷயங்கள். புத்தியை உபயோகப்படுத்தி, ஆழ்ந்து யோசித்து ஒரு விஷயத்தில் முடிவெடுப்பது, நிச்சயிப்பது என்பது அவர்களுக்குத் தெரியவே தெரியாது. எந்தப் பிரச்சினைக்கும் மருந்து குண்டாந்தடிதான், மிருக பலம் தான் என்று அவர்கள் நினைக்கிறார்கள். ஒருவன் முன்னால் ஓடினால் எல்லோரும் அவன் பின்னால் ஓடுவார்கள், ஒருவன் வாயிலிருந்து ஒரு விஷயம் முதன் முதலாக வெளியே வந்தால் எல்லோரும் அதையே சொல்லுவார்கள். தர்க்கம், விவாதம், பேச்சுவார்த்தை, பரஸ்பர உடன்பாடு, சமரசம், இவையெல்லாம் அவர்களுக்குத் தெரியாது. ஆனால் சொன்ன சொல்லில் உறுதியாக நிற்பதும், உயிரைக் கொடுத்தாவது அதைக் காப்பாற்றுவதும் அவர்களுக்குத் தெரியும். அவர்களிடத்தில், பார்வையில், ஏதேனும் ஒரு விஷயத்திற்கு மதிப்பும், மரியாதையும் உண்டென்றால், அது உடல் வலிமை, துணிச்சல், உயிரைக் கொடுக்கவும் தயாராக இருக்கும் எண்ணத்திற்குத்தான். அவர்களெல்லோரையும் விட பலசாலியானவன், குஸ்தியில் வல்லவனாக ஜெயித்தவன், களத்திலே நின்று தடியைச் சுழற்றுபவன், இருகரையையும் தொட்டோடும்

ஆற்றையும் நீந்திக் கடக்கவல்லவன், முதலைகளையும் முறி யடித்துவிடக் கூடியவன், பெரிய ஜமீன்தாரானாலும், அஞ்சாது எதிர்த்து நின்று, அவருக்கு நாலு அடி கொடுப்பவன், எல்லோர் முன்னிலையிலும் அவரைத் திட்டி, அவர் மானத்தை வாங்கியவன்தான் அவர்களின் தலைவனாக இருக்க முடியும்.

இவர்களின் மிகப் பெரிய பலவீனம் வயல், மாடு எருமைதான். வயலுக்கு உயிரையே கொடுத்து விடுவார்கள். அந்த மண்ணிற்காக, வயலுக்காக, எதையும் கொடுக்கத் தயாராக இருந்தனர். ஜமீன்தார்கள் இவர்களது இந்த பலவீனத்தைப் பயன்படுத்திக் கொள்கின்றனர். இவர்களை முட்டாள்களாக்குகின்றனர். ஒரு மாடோ, எருமையோ வாங்க வேண்டுமென்றால், கூட்டமாகச் சத்துமா, கட்டுச் சாதம் கட்டிக் கொண்டு கிளம்பி விடுகிறார்கள். விலை, பேரம் பேசுவது எல்லாமே அதே அடாவடித்தனம்தான். அவர்கள் எந்த விலை சரியானது, உசிதமானது என்று நினைக்கிறார்களோ, அதைத் தவிர, வேறு விலை எப்படி உசிதமானதாக இருக்க முடியும்? அவர்கள் பிடித்த பிடியில் நிற்பார்கள், அசையமாட்டார்கள்; மிரட்டுவார்கள்; தடிகள் சுழற்றப்படும். விற்பவன் ஒப்புக் கொண்டால் சரி, இல்லை யென்றால் இரவோடு இரவாக மாட்டைக் கட்டியிருக்கும் முனையிலிருந்து அவிழ்த்து ஓட்டிக் கொண்டு போய் விடுவார்கள். ஆற்றங்கரையின் அடர்ந்த காட்டில் எங்கோ அதை ஒளித்து, மறைத்து வைத்துவிட்டு, தங்கள் வீர தீர பராக்கிரமத்தைப் பற்றிப் பேசிக் கொள்வார்கள். பிறர் பேசக் கேட்பார்கள். அப்பகுதியில் இத்தகைய செயல்கள் முறை தவறியதாக நினைக்கப்படுவதில்லை.

மட்டூரு ஆற்றங்கரை நிலங்களைப் பற்றி அவர்களுக்கு விஷயத்தை எடுத்துக் கூறியபோது, அவனொரு பயில் வானாக, வீரதீர பராக்கிரமசாலியாக, அஞ்சா நெஞ்சுடைய வனாக, 'கங்கைத்தாயின்' பக்தனாகவும் இருந்ததால் அவர் கள் மௌனமாக அடங்கி நின்றனர். மட்டூருவை சிறைக்கு அனுப்பிய பின் ஜமீன்தார்கள் கூறியதெல்லாம் அவர்

களுக்கு எப்படிப் புரியும்? நீங்கள் எங்கே வேண்டு மானாலும் நிலத்தை உழுது கொள்ளுங்கள். எங்களுக்கு எதுவும் கொடுக்க வேண்டாம் என்று ஜமீன்தார்கள் ஆசைகாட்டினார்கள். ஆயினும் அவர்கள் மறுத்து விட்ட னர்.

"மட்டுரூ பயில்வான் திரும்பி வந்ததும், அவன் எப்படிச் சொல்லுகிறானோ அப்படி நடப்போம். அவன் வருவதற்கு முன்னர் எதுவுமில்லை" என்பதுதான் அவர்களது ஒரே பல்லவியாக இருந்தது.

மட்டுரூ எதைச் செய்தானோ அதைத் தொடர்ந்து செய்யத்தான் பூஜனும் விரும்பினான். ஆனால் மட்டுரூ வைப் போல் ஆற்றங்கரையில் தன்னந்தனியே குடிசை கட்டிக் கொண்டு, காட்டினிடையே பகைமையை எதிர்த்து, விவசாயம் செய்யும் துணிச்சலும், பலமும் அவனிட மில்லை. இதனால் தன்னோடு இன்னும் பத்து, பதினைந்து குடியானவர்கள், ஆற்றங்கரையிலே வசிப்ப தற்கும், விவசாயம் செய்வதற்கும் தயாராக வேண்டி அவனும் முயற்சிகள் செய்தான். ஆனால் மட்டுரூவின் பெயரில் இதைச் செய்யத் தயாராக இல்லை. ஒரு குள்ளநரி ஊளையிட்டால் தொடர்ந்து எல்லா நரிகளும் ஊளையிடத் துவங்கும். அதுபோலவே மட்டுரூ வருவதற்கு முன் இந்த விஷயத்தில் அடியெடுத்து வைக்க எவரும் தயாராக இருக்க வில்லை.

வேறு வழியின்றி, நிர்பந்தத்தின் பேரில், தங்களது செல்வாக்கை நிலைநாட்ட ஜமீன்தார்கள் தங்களுடைய விவசாயத்தைத் துவங்கினர். இது புலியின் வாய்க்குள் கை வைப்பது போன்றது. சாதாரணமாய் அவர்கள் அப்படிச் செய்ய மாட்டார்கள். ஆனால் இப்பொழுது நிலைமை அப்படி இருந்தது. அவர்கள் ஏதும் செய்யாவிட்டால் ஆற்றங்கரைப் பாசனம் சம்பந்தப்பட்ட விஷயத்தில் அவர்கள் அடங்கிப் போய் விட்டதாகப் பேச்சு எழும்; அவமானமாகிவிடும். பிறகு ஆட்டம் ஓய்ந்த மாதிரிதான். இதுவரை செய்ததெல்லாம் வீணாகிவிடும். எல்லாம்

நாசமாகிவிடும். இதனால்தான் அவர்கள் அங்கே குடிசை எழுப்பினார்கள். தங்கள் ஆளை அனுப்பி, நிலத்தை உழுது பயிரிடச் செய்தார்கள். சம்பளம் கொடுத்து, பலசாலிகளான சில ஆட்களை காவலுக்காக அங்கு வைத்தனர். ஆயினும் ஆற்றங்கரைப் படுகை பாசன விவசாயிகளுடன் தங்களது உறவு சரியாகாத வரையில் எதுவும் மிஞ்சுவதோ, தப்புவதோ கடினம் என்று அவர்களுக்குத் தெரியும். குறைந்தபட்சம் காவல் காக்கும் பொறுப்பை அங்குள்ளவர்கள் யாரேனும் ஏற்றுக் கொள்ளட்டும் என்று முதலிலேயே அவர்கள் முயற்சித்தனர். ஆனால் எவரும் இதற்குத் தயாராக இல்லை. இவ்வகையில் ஜமீன்தார்களுக்கு நிறைய செலவு செய்ய வேண்டி வந்தது. அறுவடையாகி தானியம் பத்திரமாய் வீடு வந்து சேர்ந்தாலும் அதற்காகும் செலவு, அதன் விலையை விடக் குறைவாக இருக்க வேண்டுமே! இருந்தாலும் கூட அவர்கள் தயங்கவில்லை. செலவு செய்தனர். ஏன் என்றால் அவர்களது செல்வாக்கை, அதிகார உரிமையை நிலைநாட்ட வேண்டியது மிக அவசியமாக இருந்தது. அந்த செல்வாக்கில்லாமல் ஜமீன்தாரின் அதிகாரம் எப்படி இருக்க முடியும்?

பயிர் விளைந்தது; வளர்ந்தது. விரைவிலேயே நெஞ்சுயரத்திற்கு உயர்ந்து அலை பாய்ந்தது. ஆற்றங்கரை பாசன விவசாயிகளின் உள்ளத்தில் இதைக் கண்டதும் பொறாமை தலை தூக்கியது. யாரோ தங்களுக்குச் சொந்தமான நிலங்களைப் பறித்துக் கொண்டு, பயிரிட்டு விட்டது போல், தங்களின் வீடுகளிலிருந்து - தானிய மூட்டைகளை எடுத்துக் கொண்டு போவதைத் த்தாங்கள், இயலாமையுடன் பார்த்துக் கொண்டு நிற்பது போல் அவர்களுக்குத் தோன்றியது.

இந்தச் சந்தர்ப்பத்தை பூஜன் பயன்படுத்திக் கொண்டான். மட்டுரூவின் உறவினனாக இருப்பதால் விவசாயிகளிடையே அவனுக்குக் கொஞ்சம் மதிப்பு ஏற்பட்டிருந்தது.

"வெளியார் வந்து, நம் கண் எதிரேயே, நம்முடைய கங்கைத்தாயின் நிலத்திலிருந்து பயிரை அறுவடை செய்து

எடுத்துக் கொண்டு போனால் மூழ்கிச் சாக இடமேது? ஒருமுறை அறுவடையான தானியம் ஜமீன்தார்களின் வீட்டிற்குப் போய்விட்டால், அவர்களுக்கு கர்வம் தலைக் கேறிவிடும் என்பதை நினைவு வைத்துக் கொள்ளுங்கள். மாப்பிள்ளை மட்டுரு வெளியே வர இரண்டு வருடங்களாகும். அதற்குள் இந்த நிலமெல்லாம் அவர்கள் கைக்குள் போய்விடும். ஒருமுறை மனித ரத்தத்தை ருசி பார்த்து விட்ட முதலை மாதிரிதான் ஜமீன்தார்களும். பிறகு விடவே மாட்டார்கள். நீங்கள் மட்டுரு, மட்டுரு என்று ஜபித்துக் கொண்டே இருந்தால் ஒன்றும் நடக்காது. அந்த நிலையில் வந்து மட்டுருவால் மட்டும் என்ன செய்து விட முடியும்? கொஞ்சம், நீங்களெல்லோரும் யோசித்துப் பாருங்கள். அறுவடையான தானியம் அந்த ஜமீன்தார்களின் வீட்டுக்குப் போகக் கூடாது. இதை உங்களால் செய்ய முடியுமே!" என்றான்.

இது விவசாயிகளின் மனதிலும் இருந்த விஷயம்தான். பூஜன் கூறியது அவர்கள் மனதில் பட்டுவிட்டது. இளைஞர்கள் சிலர் பூஜனுடன் ஒத்துழைப்பதாக வாக்குறுதி தந்தனர். ஏற்பாடுகள் தயாராகின. பயிர் விளைந்து, அறுவடைக்குத் தயாரானதும் ஒருநாள் இரவு அறுவடை செய்யப்பட்டு, படகுகளில் ஏற்றி அக்கரைக்கு அனுப்பப் பட்டு விட்டது. காவலுக்கிருந்தவர்கள், பயந்து போய் வாலைச் சுருட்டிக் கொண்டு ஓடிவிட்டனர். ஜமீன்தார் களுக்காக உயிரிழக்கும் முட்டாள்தனத்தை அவர்கள் ஏன் செய்யப் போகிறார்கள்?

மறுநாள் ஓரே கூச்சல், ஒன்றிரண்டு சிகப்புத் தொப்பிகள் கிராமத்து மணியக்காரரின் வீட்டில் தென் பட்டன. பிறகு எல்லாம் அமைதியாகி விட்டது. எங்கிருந்தா வது, துப்பு, தடயம் எப்படிக் கிடைக்கும்? குடியானவர்களின் நெஞ்சக் கனல் ஆறியது. அறுவடை செய்பவர்கள் அக்கரையிலிருந்து வந்திருப்பார்கள் என்று சொல்லப் பட்டது. நதிக் கரையோரம் பல இடங்களில் படகை வலிக்கும் துடுப்புகள் கிடந்தது காணப்பட்டது.

"இரவோடிரவாக படகுகளில் எடுத்துக் கொண்டு, மாய மாய் மறைந்து விட்டனர். எங்களுக்கு எதுவுமே தெரிய வில்லை. தெரிந்திருந்தால் இரண்டொரு தடிகளையாவது சுழற்றி அடித்திருப்போம்" என்றனர் அவர்கள்.

இளைஞர்களுக்குத் துணிச்சல் வந்துவிட்டது. இப் பொழுது இரவோடிரவாக, நாணல் புதர்கள் முட்செடி களின் மீதும் கை வைக்கத் துவங்கி விட்டனர். சிற்சில இடங்களில் நெஞ்சின் எரிச்சலைத் தணித்துக் கொள்ள, நாணற்புதர்களுக்கு தீ யும் வைத்தனர்.

ஜமீன்தார்கள் இதுபற்றிக் கேள்விப்பட்டதும் பொருமி னார்கள். இத்தகையதொரு செயலற்ற நிலை அவர்களுக்கு ஏற்பட்டதே இல்லை. ஒருமுறை போலீஸுக்கு லஞ்சம் கொடுத்ததில் ஏற்பட்ட பலனையும் அவர்கள் பார்த்தாகி விட்டது. அதையே இன்னொரு முறை திருப்பிச் செய்து என்ன அதிகப்படியாகப் பார்க்கப் போகிறார்கள்?

இப்பொழுது பூஜனின் மதிப்பு உயர்ந்து விட்டது. ஆனால் இதற்கு மேல் பூஜனால் எதுவும் செய்ய முடியாது. ஜமீன்தார்கள் வாயை மூடிக் கொண்டு விட்டார்கள். சீண்டுவதால் பயன் ஏதும் ஏற்படப் போவதில்லை என அவர்கள் நினைத்தனர். அவர்கள் சும்மா இருந்தால், குடியானவர்களும் வாளாவிருப்பார்கள். நிலைமையும் முன் பிருந்ததுபோல் சீரடைந்து விடலாம். அவர்கள் தரப்பி லிருந்து எதுவும் ஆரம்பிக்கப் படாதது கண்டு குடியான வர்களும் கொஞ்சம் மனத் தளர்ச்சி அடைந்தவர்களாய் மட்டுரூவின் வருகையை எதிர் நோக்கலாயினர். அவன் வந்தால்தான் மேற்கொண்டு ஏதாவது செய்யலாம். அந்த வருடத்திற்குப் பிறகு அங்கே குறிப்பிடத்தக்க சம்பவம் எதுவும் நிகழவில்லை.

* * *

கோபியின் வீட்டில் மட்டுரூ மனக் கலக்கத்துடன் தன் பொழுதைக் கழித்தான். மட்டுரூ வந்த ரயில் ஸ்டேஷனை

அடைந்த பொழுது மாலையாகிவிட்டது. அங்கிருந்து அவன் இருந்த இடம் பத்து கோச தூரம். வழியில் அவன் ஒருகணம் கூட நிற்கவில்லை. ஓய்வெடுத்துக் கொள்ளவுமில்லை. பிசாசு பிடித்தவன் போல் நடந்து கொண்டிருந்தான். கங்கைத்தாயின் நீரலைகள், வருடக் கணக்காகப் பிரிந் திருந்த காதலி, பிரதேசம் சென்றிருந்தவனைத் தன்பால் இழுப்பது போல் கவர்ந்திழுத்தன; அவன் விரைந்தோடி, ஓடி, சீக்கிரமாகவே கங்கைத்தாயை அடைய விரும்பினான். அவள் மடியிலே ஆறுதல் பெற்று எத்தனை வருடங்களாகி விட்டன? அந்தக் காற்று, அந்தத் தண்ணீர்! அந்த மண், அந்த கங்கைத்தாய்! ஓ— அவனுக்கு மட்டும் இறக்கைகள் இருந்திருந்தால்!

வழியில்தான் கோபியின் வீடு இருந்தது. ஐந்து நிமிடம் சமாசாரம் சொல்லி விட்டு, ஓடிவிடலாம். இரவு இரண் டொரு ஜாமம் கழியும் முன்னரே கங்கைத்தாயின் கரையோர நிலத்தை அடைந்து விடலாம். ஆனால் கோபியின் வீட்டிலிருந்த நிலைமையில் அவன் அங்கு தங்கும்படியாகி விட்டது. துன்பத்திலாழ்ந்திருக்கும் அவர் களை விட்டு விரைவில் ஓடிவிடுவது அவனுக்கு எளிதாய் இருக்கவில்லை.

ஒவ்வொரு கணமும் மனம் வருந்திக் கொண்டு தானிருந்தது. ஆனாலும் என்னால் தங்க முடியாது என்ற வார்த்தை அவன் வாயிலிருந்து வெளிவரவில்லை. அவர் களுடைய உபசரிப்பையும், மரியாதையையும் மறுதளித்து, அந்தத் துக்கப்பட்டிருப்பவர்களின் உள்ளத்தைக் காயப் படுத்தக் கூடிய மனம் அவனிடம் ஏது?

உணவருந்திய பின் கோபியின் தாய் தந்தையுடன் அவன் இரவு நெடுநேரம் வரை பேசிக் கொண்டிருந்தான். கடைசியில் அவர்களும் களைத்துப் போனார்கள். கிழவி படுத்துக் கொள்ளச் சென்றாள். கிழவர் குறட்டை விடலானார். இதன் பின்தான் மட்டூரு தூங்க முயற்சித்தான். ஆனால் உறக்கம் ஏது? உள்ளமும், எண்ணங்களும் ஆற்றங்கரையின் நினைவுகளிலே அலை

பாயத் துவங்கின. கங்கை ஆறும், அக்காற்றும், நீரும், அந்த மண்ணும் கரம் விரித்து அவனை அணைத்துக் கொள்ள, மடியிலிருத்திக் கொள்ளத் துடித்துக் கொண்டிருக்க, மட்டுரூ இத்தனை அருகாமையில் வந்த பின்னும் அவற்றை யெல்லாம் மறந்து இங்கு படுத்திருக்கிறானே!

"வா! வந்துவிடு! மகனே! ஓடிவா! உன்னை விட்டுப் பிரிந்து நாங்கள் எத்தனை நாட்களாகத் தவித்துக் கொண்டிருக்கிறோம். வா! விரைந்து வந்து எங்களைத் தழுவிக் கொள். வா! வா!" என்ற குரல் உயர்ந்து நீண்டு மட்டுரூவின் காதுகளில் ஒலித்ததும் அவனது உடலின் ஒவ்வொரு அணுவும் துடித்தெழுந்தது. வியாகூலமுற்ற அவன் எழுந்து உட்கார்ந்தான். இக்குரல் அருகில் எங்கிருந்தேனும் வருகிறதோ என்று கண்களை விரித்து சுற்றும் முற்றும் பார்த்தான். மட்டுரூ இங்கே வந்து படுத்திருக்கிறான் என்றறிந்து கங்கைத்தாய் தானே வந்து விட்டாளோ!

மட்டுரூ எழுந்து நின்றவன், யாரேனும் தன்னைப் பிடித்து உட்கார வைத்துவிடப் போகிறார்களோ என்று பயந்தவன் போல் ஓடத் துவங்கினான். நாற்புறமும் கனத்த இருளும் பேரமைதியும் சூழ்ந்திருந்தது. எங்கும் எதுவும் கண்களுக்குப் புலப்படவில்லை. எனினும், கங்கைத்தாயிடம் செல்லும் திசை எது என்பது அவனது கால்களுக்கு நன்றாகவே தெரிந்திருந்தது மட்டுமல்ல; உறுதியான அந்த இரும்புக் கால்களுக்குத் தனக்கெனத் தடம் பதித்துக் கொள்வதும் கடினமா என்ன?

அறுவடையாகியிருந்த வயல் வெளிகளினூடே மட்டுரூ அவசர வேகத்தில் ஓடிக் கொண்டிருந்தான். ஒரு கணம் தாமதிப்பது கூட அவனால் சகித்துக் கொள்ள இயலாமலிருந்தது. கால்களில் கரடுமுரடான கல்லும் முள்ளும் குத்திக் கொண்டிருந்தன. கண்களுக்கு எதுவுமே புலப்படவில்லை. சுய பிரக்ஞைகூட சரியாக இல்லை. இருப்பினும் அவன் ஓடிக் கொண்டிருந்தான். அவன் கண் எதிரே கங்கைத்தாயின் நீரோட்டம் மின்னலிட்டது. மனது–

"வந்து விட்டேன் அம்மா! வந்து விட்டேன்"– என்ற ஒரே வார்த்தையை அரற்றிக் கொண்டிருந்தது.

உறக்கம் கொண்டிருந்த நிலம் சூடான பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தது. இருளின் மெத்தையிலே காற்று உறங்கி விட்டது. வெப்பத்தினால் வியாகூலமுற்றிருந்த இரவு இடையிடையே கொட்டாவி விட்டுக் கொண்டிருந்தது. புழுக்கம் நிறைந்த மௌனம் கண்ணயர்ந்து கொண்டிருக்கிறது. நெஞ்சிலே விழைவுடன் மட்டுரூ ஓடிக் கொண்டிருக்கிறான். உடலிலிருந்து வியர்வை தாரையாகப் பெருகிக் கொண் டிருக்கிறது. ஈரமான விழிகளின் முன்னே, இருளினிடையே கங்கைத்தாய் சிற்றலைகளெனும் கரம் விரித்து அவனைத் தன் மடியில் இருத்திக் கொள்ள வந்து கொண்டிருக்கிறாள். வானத்து தாரகைகள் இமைகளைச் சிமிட்டிய வண்ணம் இதைப் பார்க்கின்றன. ஆனால் மட்டுரூ கங்கைத்தாயைத் தவிர வேறெதையும் பார்க்கவில்லை. அவன் காதுகளில் தாயின் குரல் ஒலித்துக் கொண்டிருக்கிறது. அவனது உயிர் அதிசீக்கிரமாய் தாயின் மடியை அடையத் தவித்துக் கொண்டிருக்கிறது. அவன் ஓடுகிறான். ஓடிக்கொண்டே இருக்கிறான்.

இது ஆற்றங்கரைக் காற்றின் மணம். இது இந்த மண்ணின் மணம், இது கங்கைத்தாயின் முந்தாணியின் நறுமணம். மட்டுரூவின் பிராணன் உன்மத்தம் கொண்டது. பரவசத்தால் உடலில் ஒவ்வொரு ரோமமும் குத்திட்டு நின்றது. அவன் கால்கள் மின்னல் வேகம் கொண்டன. புயல்போல்– அம்மா! தாயே! தாயே! எனக் கூவி அழைத்தவாறே ஓடினான். அலைகள்– "மகனே! மகனே!" என எதிரொலித்தன. திசைகளெல்லாம்– "மகனே! மகனே!" என்று எதிரொலித்தன.

நிலம் "மகனே! மகனே!" என்றழைத்தது- கோடிக் கணக்கான தாய்மார்கள், பிள்ளைகளின் அறை கூவலாய், விண்ணும், மண்ணும் எதிரொலிப்பது போல், பத்து திசைகளும் கூவி அழைத்தவாறு ஓடி வந்து மட்டுரூவைத் தழுவிக் கொண்டன. பசித்த குழந்தை போல் ஒரே

தாவலில் மட்டுரூ கங்கைத்தாயின் மடியில் போய் வீழ்ந்தான். தன் உடல், உயிர், உள்ளம் யாவற்றிலும் அவளை அப்படியே நிறைத்துக் கொண்டு விடுபவன்போல.

கங்கைத்தாய் மகனைத் தன் மடியிலே இறுக அணைத்துக் கொண்டாள். இது கலகலவென நீர் பெருகும் ஓசையல்ல. தாய் தன் மகனைக் கொஞ்சி, குலாவி, முத்தமிடும் ஒலி. திசைகளெல்லாம் களிநடனம் புரிகின்றது. காற்று மெல்ல இசைபாடுகிறது. நிலமோ– "என் மகன் வந்து விட்டான் வந்து விட்டான்– என்னருமை மகன் வந்து விட்டான்" என கலகலவென உரக்கச் சிரிக்கிறது.

## 10

இது நடக்க இயலாதது என்பது அண்ணிக்குத் தெரியும். இருந்தாலும் இந்த எண்ணத்தை மனதிற்குள் வைத்துக் கொண்டிருக்கிறாள். காற்றைப் போல, தண்ணீரைப் போல மனிதன் உயிர் வாழ்வதற்கு ஒரு துணையும் அவசிய மானது. உண்மையான துணை எவனிடம் இல்லையோ, அவன் உண்மையல்லாத ஒன்றின் துணையைத் தன் துணையாகக் கொள்கிறான். கற்பனைக் கனவைத் தன் முன்னே பிறப்பித்துக் கொள்கிறான். எல்லாக் கற்பனை களும், கனவுகளும், ஏதேனும் ஒரு உறுதியான ஆதாரத்தைச் சார்ந்துதான் இருக்க வேண்டும் என்பதில்லை. நிறையக் கற்பனைகள், கனவுகளின் ஆதாரங்கள் கூட க்றபித்துக் கொண்ட கற்பனைகளாக, கனவுகளாகவே இருக்கும். ஆனால் மனிதன் அவற்றிலிருந்து வாழ்விற்கான யதார்த்த சக்தியைப் பெற்று வாழ்ந்து கொண்டிருக்கிறான். இந்த விசித்திரமான உலகத்தில் ஆதாரமற்ற கற்பனைகளும், கனவுகளும் கூட ஒரு நாள் உண்மையாகக் கூடுமோ என்னவோ! யார் கண்டது?

ஆனால் இத்தகைய துணைகளை, ஆதாரங்களை தனக்கு வேறு வழியே இல்லாத நிலையில்தான் மனிதன் கற்பித்துக் கொள்கிறான் என்பதும் ஒரு வகையில் உணமைதான். வாழ வேண்டுமென்ற இயல்பான, அடக்க முடியாத ஆசைதான் அவ்வாறு செய்ய மனிதனைக் கட்டாயப்படுத்துகிறது. அண்ணியின் நிலைமையும் அப்படித்தானே இருந்தது? அந்நிலையில் அவள் அவ்வாறு செய்தது முரணானது எதுவுமில்லையே!

மட்டுரூவின் வாயால், கோபியைப் பற்றிய சில விஷயங்களைக் கேட்டதிலிருந்து வெகு நாட்களுக்கு முன்னரே, அவள் இதயத்தில் முளைவிட்டுத் துளிர்த்திருந்தவைகளுக்கு அந்த வார்த்தைகள் அமிருதமெனும் நீரைப் பாய்ச்சத் துவங்கிவிட்டன. அவன் கூறிய வார்த்தைகள், அவளது வாழ்க்கையில் சூனியமாகிவிட்டிருந்த நாடி நரம்புகளை ஒவ்வொரு கணமும் மீட்டிக் கொண்டிருந்தன.

''கோபிக்கு அவனது அண்ணியைப் பற்றி ரொம்பவும் கவலையாக இருக்கிறது. பாவம் இரவு பகல், அண்ணி, அண்ணி என அரற்றிய வண்ணமிருக்கிறான். இவ்விருவருக்குள் மிகுந்த அன்பிருந்ததா என்ன?' அவளுடைய உயிர் இந்த மதுரமான இசையின் அமிருதத்தில் திளைத்தது. அவளது ஆத்மா வியாகூலமுற்று– ''ஆம்! அன்பிருந்தது. மிகமிக அன்பிருந்தது! அன்னியனே! நீ அவனுக்குக் கடிதம் எழுது, எனக்கும் அவனைப் பற்றிய நினைவாகவே, கவலையாகவே இருக்கிறதென்று என் சார்பாக எழுதிவிடு. என் உயிரும் கூட இரவு பகல் அவனைப் பற்றியே அரற்றிக் கொண்டிருக்கிறது. ஆம்! எங்களிடையே மிகுந்த அன்பிருந்தது. நிறைய, நிறைய'' என்றது.

இந்த மந்திரத்தின் ஜபம் அண்ணியை வெகுவாக மாற்றி விட்டது எனலாம். அந்த சிடுசிடுப்பு, கசப்பு, ஆத்திரம், எரிச்சல், பாராமுகமான போக்கு, யாவுமே மறைந்து விட்டன. இப்பொழுது தனக்குள் லேசான உற்சாகமிருப்பதை அவள் உணர்ந்தாள். வேலைகளில் சற்றே ருசி உண்டாயிற்று. பூஜை, தியானத்தில் ஏதோ கொஞ்சம்

புரிந்தது. மாமியார், மாமனாருக்குச் செய்யும் பணி விடைகளில் ஏதோ கொஞ்சம் பலனிருப்பது தெரிந்தது. வியர்த்தமான வாழ்வில் ஏதோ அர்த்தமிருப்பதாக் தோன்றியது. அவளைப் பற்றி நினைக்க, மிக–மிக கவலைப்பட, ஒருவன் இருக்கிறான். இரவு பகல் அவளைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருக்கிறான். ஒருவன் இருக் கிறான். ஒருவன் இருக்கிறான் இல்லையா?

வீட்டில் இப்பொழுது கலகம், சண்டை சச்சரவு இல்லை. எல்லாம் ஒழுங்காக நியதியாக இயங்கத் துவங்கியது. மாமியாருக்கு முறையிட இப்பொழுது எதுவும் இல்லை. சுடச் சுடச் சமைத்தது இரண்டு வேளையும் கிடைத்தது. இனிமையான, மரியாதை மிகுந்த வார்த்தைகள், எந்த உத்தரவிற்கும் அடிபணிய ஒற்றைக் காலில் நிற்கும் மருமகள், இப்படி அப்படி அசையக் கூட விடுவதில்லை. இரவு நெடுநேரம் வரை மாலிஷ். அதிர்ஷ்டம் கெட்ட மருமகள் வீட்டின் லக்ஷ்மியாக ஆகாவிட்டாலும் என்ன? மாமனாரோ முதலிலேயே அவளது சேவைக்கும், சிச்சுருஷைக்கும் அடிமையாகி விட்டிருந்தார். மருமகள் என்று இதிலிருந்து ஒதுங்கிக் கொண்டாலும், நாளைக்குச் சாகப் போகிறவர், இன்றே செத்து விடுவார் என்பதை அவர் நன்றாகவே அறிந்திருந்தார். அவர் மனைவியால் என்ன செய்ய முடிகிறது? செய்யப் போகிறாள் அவள்! அவரது நீண்ட நோயினால் சலிப்புற்று சில சமயம் அவர் பாரமாகிவிட்டது போலல்லவா புலம்பத் துவங்குகிறாள்? மருமகளின் பணிவிடைகள், தாம் பிழைத்து விடுவோம் என்ற நம்பிக்கையைக் கூட அவர் உள்ளத்தில் ஏற்படுத்தி இருந்தன. அவர் வாயிலிருந்து ஒவ்வொரு நொடியும் ஆசீர் வாதங்கள்தான் வெளிப்பட்டன.

சில சமயம் அத்தகைய ஆசிர்வாதங்களினால் சஞ்சல முற்றவளாய் "மாமாஜி! அபாக்கியவாதியான எனக்கு இப் படிப்பட்ட ஆசீர்வாதங்களை ஏன் அளிக் கிறீர்கள்?" எனக் கேட்பாள் அவள்.

கிழவரின் கண்களிலே நீர் நிறைந்து விடும். "மருமகளே!

இது கட்டாந்தரைக்குத் தண்ணீர் பாய்ச்சுவது போல் என்று தெரியும் அம்மா! ஆனால் என் மனத்தை என்ன செய்ய? அது கட்டுப்பட மாட்டேன் என்கிறதே! நீ சுகமாய் இருக்க வேண்டுமென்று தான் எப்பொழுதும் பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறேன்'' என்பார் வியா கூலத்துடன்.

கருணை நிரம்பிய புன்னகை உதட்டிலே மலர ''என் சுக பாக்கியமெல்லாம் அவரோடு போய்விட்டது மாமாஜி'' எனக் கூறியவாறே பொலபொலவென்று கண்ணீர் வடிப்பாள் அண்ணி.

'நீ சொல்வது உண்மைதானம்மா!''– கிழவர் குரல் தழுதழுக்க ''ஒரு பெண்ணின் இகலோகம், பரலோகம் இரண்டுமே அவள் புருஷனைச் சார்ந்ததுதான்'' என்பார்.

அவரது கட்டிலின் விளிம்பில் தலை வைத்துக் கொண்டு, புலம்பியவாறே ''எனது இகலோகம், பரலோகம் இரண்டுமே நாசமாகிவிட்டது மாமாஜி! எத்தனை சீக்கிரம் முடியுமோ, இந்த உலகத்திலிருந்து எனக்கு விடுதலை கிடைக்க வேண்டும் என்று ஆசீர்வதியுங்கள்'' என்பாள் அண்ணி.

''வேண்டாம்மா... வேண்டாம். நீயும் இந்த முடமான கிழவனை விட்டு விட்டுப் போக விரும்புகிறாயா?'' என, நடுங்கும் குரலில் கேட்பார் அவர்.

தலை நிமிர்ந்து முந்தாணியினால் கண்களைத் துடைத்தவாறே ''மைத்துனருக்குப் புதுப் பெண்டாட்டி வருவாள். அவள் என்னைவிட அதிகமாய் தங்களைக் கவனித்துக் கொள்ள மாட்டாளா'' என்பாள் அண்ணி.

''யார் கண்டது? எப்படிப்பட்ட மருமகள் வருவாளோ! நீ போன ஜன்மத்தில் என் மகளாய் இருந்திருப்பாய். எத்தனை முறை கங்கையில் நீராடி, இந்த ஜன்மத்தில் உன்னை மருமகளாக அடைந்திருக்கிறேனோ தெரியாது. இல்லா விடில் இதற்குள் நான் எங்கே அழுகிக் கரைந்து போயிருப்பேனோ தெரியாது.''

''என்னுடைய துர்பாக்கியமும் அதுதான் மாமா, காலம் முழுவதும் கஷ்டத்தை அனுபவிக்கவே உயிர் வாழ்ந்து

கொண்டிருக்கிறேன். உயிர் போகவில்லையே! தினமும் இந்தப் பிராணன் எப்பொழுது போகும்? இந்த மூச்சிலிருந்து விடுதலை கிடைக்கும் என்று வேண்டிக் கொள்கிறேன். என் உடலில் உயிர் ஒட்டிக் கொண்டிருக்க, என் வாழ்வில் இன்னும் என்ன இருக்கிறது?'' என உள்ளம் சோர்ந்தவளாய் அழுவாள் அவள்.

''பைத்தியமே! யாரேனும் தன்னிச்சைப் படி சாகவோ, வாழவோ முடியுமா?'' கிழவர் அவளைச் சமாதானப் படுத்துவார். ''யாருடைய அதிர்ஷ்டத்தினாலோ நீ உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிறாய். என்னுடைய பாக்கியத்தினால்தான் நீ உயிருடன் இருக்கிறாய் என்று எனக்குத் தோன்றுகிறது. பகவான் இராமன் எனக்கு இப்படிப்பட்ட நோயையும் கொடுத்ததோடு, உன்னைப் போன்ற மருமகளையும் கொடுத்திருக்கிறார், எனக்கு இராப்பகல் சேவை செய்ய! மகளே! நாம் விரும்புவதிலும் விரும்பாமலிருப்பதிலும் என்ன இருக்கிறதம்மா! பகவான் என்ன விரும்புகிறானோ அதுதான் நடக்கிறது. பகவான் இராமனுக்கு இதிலென்ன விருப்பமோ யார் கண்டார்கள்? மருமகளே! எனக்குச் சேவை செய்யவே நீ பிறந்திருப்பதாக நான் நினைக்கிறேன். ஆமாம்மா! இப்படி நினைக்கும் போது உனக்கு கோபியின் நினைவும், பாசமும் நினைவு வரவில்லையா? உங்களிருவரிடையே எத்தகைய ஆழ்ந்த அன்பிருந்தது? அன்று மட்டுரூ கூட கோபி உன்னைப் பற்றியே சதா நினைத்துக் கொண்டிருப்பதாகக் கூறினானே! மருமகளே! உன் மீது அவனுக்கு ரொம்பவும் மதிப்புண்டு. அவன் உயிரோடிருக்கும் வரையில் உனக்கெந்தக் கஷ்டமும் வராமல் பார்த்துக் கொள்வான். நீ நம்பிக்கையோடு இரும்மா''– என்பார் கிழவர்.

''மாமா! என் பாக்கியத்தில் என்ன எழுதியிருக்கிறதோ? மைத்துனர்பால் எனக்கும் ரொம்பவும் அன்புண்டு. அவரை ஒரு முறை பார்த்து விட்டால், பிறகு உயிரை விட்டு விடுவேன். அவருக்கு வரப்போகும் புதுப் பெண்டாட்டி எப்படி இருப்பாளோ? என்னை எப்படி நடத்துவாளோ!

யார் கண்டது? என்னால் இனி எதையும் தாங்கிக் கொள்ள முடியாது மாமா! மைத்துனர் மனத்தில் கசப்பு வந்துவிட்டால் நான் என்ன ஆவேனோ எனக்கே தெரியாது'' அண்ணி விம்மி விம்மி அழுவாள்.

''இதென்னம்மா இப்படி எல்லாம் சொல்லுகிறாய்!'' எனச் செல்லமாய் அதட்டுவார் கிழவர். ''நீ என் மூத்த மருமகள்! நீதான் வீட்டு எஜமானியாக இருப்பாய். நானிருக்கும் வரை.....''

''உங்களால் என்ன செய்ய முடியும் மாமா! நீங்கள் திடமாக இருந்தால் எனக்கு எதைப் பற்றிய கவலையும் இல்லை. புதியவள் வந்து மைத்துனரை வசப்படுத்திக் கொண்டு விட்டால், அவரும் அவள் வசமாகி...... வேண்டாம் மாமா!...... நான் உயிர் துறப்பதுதான் ஏதாவது குளம் குட்டை.......''

''மருமகளே!'' எனத் திடுக்கிட்டவராய் கிழவர் கத்தினார். ''குளம் குட்டை என்ற வார்த்தையெல்லாம் மீண்டு மொருமுறை வாயால் சொல்லாதே! நீ எப்பேர்ப்பட்ட குடும்பத்தின் மருமகள் என்று உனக்குத் தெரியுமா? வீட்டிற்குள்ளே கிடந்து மருகிச் செத்தாலும், குடும்பத்தின் பெயருக்கு களங்கம் ஏற்படுத்தி விடாதே! இன்னாருடைய மருமகள், குளம், குட்டையிலே விழுந்து உயிரை விட்டாள் என்று யாரேனும் சொல்ல ஒரு சந்தர்ப்பம் கிடைத்து விட்டால் நான் என் மண்டையை உடைத்துக் கொண்டு விடுவேன்! மகளே! இந்தக் கிழவனின் மண்டையைப் பற்றிய கவனம் இருக்கட்டும். பிறகு என்ன வேண்டுமோ செய்து கொள்'' என்று அதட்டிய கிழவர் சோர்ந்து போய்விடவே அவரது உடல் நடுங்கியது.

முந்தாணியால் கண்களைத் துடைத்தவாறே அண்ணி அவ்விடம் விட்டகன்றாள். இந்தக் கிழவரிடம் எது பேசுவதும் வீண். இவருக்கு எதுவும் புரிவதில்லை. எதுவுமேதான். தனக்கு யார் பணிவிடை செய்வார்கள் என்ற கவலைதான். வேறொன்றும் இல்லை. கிழவிக்கும் வீட்டு வேலை செய்யவும், தன்னைக் கவனித்துக்

கொள்ளவும்தான் அவள் தேவை. அவளுக்கும் ஏதேதோ தேவைகள், ஆசைகளிருக்கும் என்று யாரும் நினைப் பதில்லை. யாருக்கு எதற்காக அந்த எண்ணமெல்லாம் இருக்கப் போகிறது? எப்படி இருக்கும்? ஒரு க்ஷத்திரிய குலத்துக் கைம்பெண்ணான இளம் பெண்.... வந்து.... சீ.... நடக்கவே முடியாது. அப்படி! கனவில் கூட யாரேனும் இப்படிக் கற்பனை செய்வது எப்படி இயலும்? ஊஹும்! அண்ணியின் மனம் வெறுப்பினால், இயலாமையினால் நிரம்பி வழியும்போது காதிலே யாரோ.... "எனக்கு உன்னைப் பற்றிய நினைவு, கவலை நிறைய இருக்கிறது அண்ணி. இரவு பகல் உன்னைப் பற்றியே புலம்பிக் கொண்டிருக்கிறேன். உன்னை நான் எவ்வளவு நேசித் தேன். நான் வந்து விடுவேன் அண்ணி– அதன் பின்" என மெல்லக் கூறுவது போலிருக்கும்.

இதன்பின்– அண்ணி மன ஊஞ்சலிலே ஆடத் துவங்கி விடுவாள். யார் கவனித்தாலென்ன, கவனிக்காவிட்டால் என்ன? அவன் மட்டும்.... அண்ணி தன் வேலைகளில் ஆழ்ந்து விடுவாள்.

முன்போலவே அவளது தினசரி வேலைகள் தொடர்ந் தன. அதே பூஜை, இராமாயணப் பாராயணம், மற்ற எல்லாம்.

"பகவானே! உனது சக்தி எல்லையற்றது. எனக்காக, சாத்தியமில்லாததைக் கூட உன்னருளினால் சாத்தியமாகச் செய்வது கடினமல்ல. பகவானே! அத்தகைய அருள் செய் நீ–" என வேண்டிக் கொள்வாள்.

ஒருநாள் பிலராவிடம் கொடுப்பதற்கு தீவனக் கூடையை எடுத்துத் தரச் சென்றவளுக்கு அவன் அன்று சொன்ன வார்த்தைகளை மீண்டும் சொல்ல மாட்டானா என்று தோன்றியது. ஆனால் பயந்து போய் இருந்த பிலரா தலையைக் குனிந்து கொண்டு நின்றான்.

"ஏண்டா! ஏதாவது கொலை கிலை செய்து விட்டாயா! இப்படி வாயைத் திறக்காமல் நிற்கிறாயே?" என்று சீண்டி னாள் அண்ணி.

குனிந்த தலை நிமிராமலேயே– "சின்ன எஜமானி யம்மா? அன்று தெரியாத்தனமாக என் வாயிலிருந்து அந்த வார்த்தைகள் வெளியே வந்து விட்டன—" என்றான் பிலரா.

"அட— என்னப்பா— அதையெல்லாம் நான் மறந்தே போய்விட்டேன்–வீணாக நீ—"

"சின்ன எஜமானியம்மா! மனதிலிருந்ததை அடக்க முடியவில்லை. சொல்லி விட்டேன். நான் சொன்னது உங்களுக்குக் கஷ்டமாகி விட்டது. என்னை மன்னித்து விடுங்கள். எங்கள் மனத்திலெல்லாம் எந்த ஒளிவுமறைவும் இல்லை. நீங்களெல்லோரும்தான் மனத்தில் ஒன்று வைத்துக் கொண்டு, வாயால் ஒன்று பேசுகிறீர்கள். பெரிய எஜமானரும், எஜமானியம்மாவும் உங்களுடைய இந்த நிலைமையைக் கண்ணால் பார்த்துக் கொண்டு எப்படி இருக்கிறார்கள் என்று எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. என் நெஞ்சு வெடித்து விடும் போலிருக்கிறது. இந்த வயதிலிருந்து நீங்கள் சன்யாசினி மாதிரி எப்படி இருக்க முடியும் அம்மா! இதனால்தான் தோன்றியது. சின்ன எஜமானருடன் உங்களுக்கு—"

அண்ணி பரவசமாகிப் போனாள். விழிகள் தாமாகவே மூடிக் கொண்டன. ஆனால் மறுகணமே யாரோ கன்னத்தில் ஓங்கி அறைந்தாற் போலிருந்தது அவளுக்கு. சட்டென்று "பிலரா! அப்படியெல்லாம் சொல்லாதே!" என்றவள் உள்ளே ஓடிவிட்டாள்.

பிலரா சில நிமிடங்கள் அங்கேயே நின்றான். பிறகு உதட்டில் இரக்கம் மிகுந்த புன்னகையுடன் தொழு வத்துக்குள் சென்றான். அன்று கொதிப்பேறியிருந்த இரும்பு சற்றே குளிர்ந்திருக்கிறது என்று நினைத்துக் கொண்டான். இன்று வசவு வாங்க நேரவில்லை. உண்மையில் 'அப்படி' நடந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும். பாவம், இவளது வாழ்க்கை இன்பமாய், சுகமாய் கழியும். சின்ன எஜமானால் திருமணம் செய்து கொள்ள முடியாவிட்டாலும் வைப்பாக வைத்துக் கொள்ள முடியுமே! அவர்களுடைய தாயாதி

களில் எத்தனையோ பேர்கள் அப்படிச் செய்கிறார்களே! இவர்களுடைய முப்பாட்டனார் கூட ஒரு சக்கிலியப் பெண்ணை வைப்பாக வைத்துக் கொண்டிருந்தார் என்று கேள்விப் பட்டிருக்கிறேன். இது சொந்த அண்ணி யாயிற்றே! கொஞ்ச நாட்களுக்கு அமர்க்களம் செய்வார் கள், பிறகு எல்லாம் தானே அடங்கிவிடும். கசாப்புக் கடைக்காரனின் கையில் சிக்கிய ஒரு பசுவின் உயிர் பிழைத்து விடுமே! எத்தனை புண்ணியம் இது!'' என நினைத்தான் அவன்.

* * *

இரண்டொரு மாதங்களுக்கொருமுறை மட்டுரூ அவர் களின் சுகத்தைப் பற்றி விசாரிக்கக் கட்டாயம் வந்து விடுவான். இப்பொழுது அவன் மிகுந்த முன் எச்சரிக்கையுடன் நடந்து கொண்டான். தன் எதிரிகளுக்கு மீண்டுமொரு சந்தர்ப்பத்தை அளித்து அவர்களின் கைகளில் சிக்கிக் கொள்ள அவன் தயாராக இல்லை. அவன் ஆற்றங்கரையை விட்டு நகரவில்லை. இயற்கையின் இந்த அரணுக்குள் எவரும் அவனைத் தாக்கத் துணிய மாட்டார்கள் என்பது அவனுக்குத் தெரியும். முன்போல் இப்பொழுது அவன் தனியாக இல்லை. அவனது குடிசையைச் சுற்றிலும் டஜன் கணக்கான குடிசைகள் தோன்றிவிட்டன. குடியான இளைஞர்கள் ஐம்பது பேர், கையில் கழிக்கம்புடன் அக்குடிசைகளிலிருந்தனர். சிலம்பக் கூடங்கள் கூட பல தோன்றி விட்டன. எல்லோருடைய உழவு மாடுகளும், எருமைகளும் கூட அங்கேயே இருந்தன.

மட்டுரூ சிறையிலிருந்து வெளியே வந்த போது ரபி பயிர் அறுவடையாகி விட்டிருந்தது. ஆற்றங்கரைப் படுகையில் ரபி பயிர் மட்டும்தான் விளைவிக்க முடியும் என எல்லோரும் நினைத்திருந்தனர். பிறகு மழைக்காலம் வந்து விடும். ஆனால் மட்டுரூ சும்மா உட்கார்ந்திருக்க விரும்பவில்லை. இச்சமயத்தில் கரும்பு பயிரிடலாம் என

அவன் நிச்சயித்தான். எல்லோரும் வேண்டாம்– வேண் டாம் என்றனர். ஆனால் மட்டுரூ கேட்கவில்லை. கங்கைத் தாயின் அருளிருந்தால் கரும்பும் விளையும் என்றான் அவன். உயரமான, இடத்தில் வளமான மண்ணுள்ள நிலத்தில் அவன் கரும்பைப் பயிரிட்டான். அவனைப் பார்த்து மற்றவர்களுக்கும் தைரியம் பிறந்தது. ஒருவனுக்கு என்ன நேருகிறதோ, அதுவே மற்றவர்களுக்கும் நேரட்டுமே. போனால் விதைத்தது போகும். வந்தாலோ வெல்லத்தை வைக்க இடமிராது.

ஆற்றங்கரைப் பிரதேசம் பசுமையான தோட்டம் போலாகிவிட்டது. குடிசைகள் ஏற்பட்டு விட்டன. அடுப்பு கள் எரிந்தன. எருமைகள் கனைத்தன. சிலம்பக் கூடம் கலகலப்பாகியது. அதிகமான உழைப்பின்றி, பாடுபடாமல் கரும்பு விளைந்ததும் பார்த்தவர்கள் வியந்தனர். வளமான, ஈரப்பசை மிகுந்த மிருதுவான மண்ணிற்கு முன்னால், ஆற்றங்கரையிலிருந்து தொலைவிலுள்ள நிலம் எம் மாத்திரம்? நாலு சாண் உயரத்திற்குக் கரும்பு விளைந்தாலே அதிகம். அதுவும் நிறைய உழைத்துப் பாடுபட்ட பின்தான். இங்கேயோ கரும்புப் பயிர் தலை தூக்கியதும் யானைகூட அதில் மறைந்து விடும் போலிருந்தது. அத்தனை உயரம். இப்பொழுது பயமெல்லாம் கங்கைத்தாயைப் பற்றியதுதான். மழைக்காலம் தலைக்குமேல் வந்து விட்டது. ஆற்றின் நீர் மட்டம் உயரத் துவங்கிவிட்டது. எல்லோருடைய நெஞ்சும் திக்திக்கென்று அடித்துக் கொண்டது. "கங்கைத்தாயே! அருள் புரிம்மா! கரும்பை அழித்து விடாதேயம்மா!" என்று தான் எல்லோரும் பிரார்த்தித்தனர். கங்கைத்தாய் நீரோட்டத்தின் போக்கை இம்முறை மாற்றிக் கொள்ளட்டும் என வேண்டினர்.

ஏதோ, அப்படியும் நேர்ந்தது. உண்மையிலேயே ஆற்றின் பிரதானமான நீரோட்டம் இம்முறை அக்கரையை நோக்கிச் சென்றுவிட்டது! இக்கரையிலும் நிறைய நீர் வெள்ளம் பெருகி வந்தது. ஆனால் பத்து, பதினைந்து நாட்களில் கரும்பின் வேரிலே தன் வண்டல் மண்ணை

விட்டுவிட்டு வடிந்து விட்டது. குடியானவர்களின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. எல்லோரும் மட்டுருவைப் பாராட்டினார்கள். "இதெல்லாம் கங்கைத்தாயின் கருணை" என்றான் அவன்.

ஜமீன்தார்கள் நேரடியாக எந்த நடவடிக்கையும் எடுக்க முயற்சிக்கவில்லை. இப்பொழுது மட்டுரு மட்டும் தனியாக இல்லை. குடியானவர்கள் தங்களது நிலத்தை கைவசப்படுத்தி, ஆக்கிரமித்துக் கொண்டிருப்பதாகவும், அரசு விசாரணை நடத்தி, கலகக்காரர்களுக்கு உரிய தண்டனை வழங்க வேண்டுமென்றும், இல்லையெனில் மீண்டும் கிளர்ச்சி ஏற்பட வாய்ப்பிருக்கிறது என்றும் ஜமீன்தார்கள் ஜில்லா அதிகாரியிடம் விண்ணப்பித்துக் கொண்டிருப்பதாக செய்தி கிட்டியது.

பிறகு என்ன நடந்தது என்று ஏதும் தெரியாது, தலைமை அலுவலகம் வெகு தூரத்தில் இருந்தது. மெதுவாகத்தான் விண்ணப்பம் போய்ச்சேரும், பிறகு வழக்கை விசாரிக்க வெகு நாட்களாகும். அதுவரை ஆற்றங்கரை நிலத்தில் அடையாளம் எஞ்சி இருக்குமா? அப்பொழுது என்ன நடக்கிறதோ, பார்த்துக் கொள்ளலாம். கணக்குப் பிள்ளை யின் பேரேட்டில் வரைபடத்தில் ஆற்றங்கரை நிலம் என்று மட்டுமே எழுதப்பட்டிருக்கிறது. தஸ்தாவேஜுகளில் ஆற்றங் கரை நிலம் என்பது எதனுடைய பெயரும் இல்லை. வரப்பு, விளிம்பு ஏதும் கட்டுவெதென்பதும் இங்கு சாத்தியமில்லை. அப்படியே நிலம் பிரித்து வரப்புக் கட்டினாலும் கங்கைத்தாய் விட்டு வைப்பாளா என்ன? சர்க்கார்– என்ன விசாரணை செய்ய முடியும்? மண்ணாங்கட்டி!

* * *

மழைக்காலத்தில் மட்டுருவும், அவன் கூட்டாளிகளும் மிகுந்த எச்சரிக்கையுடன் இருந்தனர். ஒரு விதத்தில் இப்பொழுது அவர்களுக்கு ஒரு கட்சி... அதாவது படையே அமைந்து விட்டது. அக்கம் பக்கத்து கிராமங்களிலிருந்த

குடியானவர்கள், அவர்களுடைய உறவினர்களாக இருந்த தால் ஒவ்வொரு விஷயத்தையும், தேடித் துருவி மட்டுரூவின் காதுகளுக்கு எட்டும்படிச் செய்தனர். இப்பொழுது மட்டுரூவிற்காக உயிரையும் கொடுக்க நூற்றுக் கணக்கானவர்கள் தயாராக இருந்தனர். மட்டுரூவைப் பிடித்துச் செல்வதென்பது எளிதான காரியமாக இருக்க வில்லை.

மட்டுரூ இரவு வேளைகளில்தான் தனது பத்துக் கூட்டாளிகளுடன் கோபியின் வீட்டிற்கு வருவான். யாவரும் மிகுந்த உற்சாகத்துடன் அவனை வரவேற்று உபசரிப்பார் கள். கிழவனும் கிழவியும்– "கோபியின் திருமணம் பற்றி எங்கேயாவது பார்த்திருக்கிறாயா?" என்று விசாரிப்பார் கள்.

"அரே! நாமாகத் தேடிப் போக வேண்டிய அவசிய மென்ன? வாயைத் திறந்து கொண்டு எத்தனையோ பேர்கள் காத்திருக்கிறார்கள். முதலில் அவன் வரட்டும் வெளியே. பிறகு ஒரு மாதத்திற்குள் முடித்து விடலாம். கிராமம் முழுவதும் வியந்து பார்க்கும்படியான பெண்ணை யல்லவா கொண்டுவருவேன்" என்றான் மட்டுரூ.

மட்டுரூ தவறாமல் ·கோபிக்குக் கடிதம் எழுதிக் கொண்டிருந்தான். ஆனால் அவனும் கோபியின் மனைவி காலமாகி விட்ட செய்தியை எழுதவில்லை. எதற்காக, வேண்டுமென்றே இத்துயரச் செய்தியை அவனுக்குத் தெரிவிக்க வேண்டும்? தான் வெளியே வந்து விட்ட பிறகு கோபி எப்படிப் பொழுதைக் கழிக்கிறானோ? போய்ப் பார்த்துவிட்டு வரலாம் என்று பலமுறை நினைத்தான். ஆனால் அவகாசம் ஏது? கங்கைத்தாயை...... தனது குடியான நண்பர்களை எப்படி விட்டு விட்டுச் செல்வது? அவனது மூச்சில்தான் எல்லோருடைய மூச்சும் இருக்கிறது. அவன் இல்லாத நேரம் பார்த்து ஜமீன்தார் ஏதாவது செய்து விட்டால்?

உணவருந்த வீட்டிற்குள் சென்றால் அண்ணியின் சமையலை, அவள் கை மணத்தை புகழாமல் இருக்க

மாட்டான் மட்டுரூ.

"இதனால்தான் கோபி இவ்வளவு பிரியமாய் இருக்கிறானா? நான் சொல்லட்டுமா! என்ன விஷயம் என்று? இத்தனை அருமையான சாப்பாட்டை யார் ஒருமுறை சாப்பிடுகிறானோ, அவனால் கோபியின் அண்ணியை மறக்க முடியுமா என்ன?" என்பான்.

"அக்கா, தங்கை இரண்டுபேருமே நல்ல குணமுள்ளவர்கள், கெட்டிக்காரிகள் மகனே! தலை விதியை என்ன சொல்ல?" என்பாள் கிழவி.

இதைக் கேட்கும் அண்ணி மனதிற்குள் என்ன நினைப்பாளோ? ஒருமுறை சமயம் பார்த்து அவள் மட்டுரூவிற்குத் தன்னைக் காண்பித்துக் கொண்டும் விட்டாள். மட்டுரூவிற்கும் அவளைப் பார்க்க உள்ளூர ஆவலாகத்தான் இருந்தது. அவளைப் பார்த்த பின் நெஞ்சிலே யாரோ ஓங்கி அடித்தது போலிருந்தது அவனுக்கு. கோபியின் அண்ணி இத்தனை இளமையானவளாக இருப்பாள் என அவன் நினைத்தே பார்க்கவில்லை. கண்களைப் பறிக்கும் மின்னல்போல் இதென்ன அழகு? அன்றிலிருந்தே அண்ணியின்பால் அவனிதயத்தில் அனுதாபம் நிறைந்து விட்டது. சில சமயம் தனது அனுதாபத்தை வெளிப்படுத்துவதற்காகவே அவளைப் பற்றிக் கிழவியிடம் பேசுவான்.

மட்டுரூ கவலையிலாழ்ந்தான். கோபியின் அண்ணியைப் போன்ற பேரழகியான மனைவியை கோபிக்கு எங்கிருந்து தேடிக் கொணர முடியும்? இப்படிப்பட்ட பெண்ணொருத்தியை அவன் இன்று வரை பார்த்ததேயில்லை. கோபி அவள் மீது உயிராயிருக்கிறான் என்றால் அதில் வியப்படைவதற்கு எதுவுமில்லை. இத்தகைய ரூபவதி, குணவதியானவளுக்காக யார்தான் உயிரைவிட மாட்டார்கள்? அண்ணியின் தங்கை கூட அவளைப் போல்தானிருப்பாள். இனி வேறொருத்தியிடம் அவனது மனம் எப்படி நாட்டம் கொள்ளும்?

மட்டுரூவின் உள்ளத்தில் பிலரா நினைத்தது போன்ற

எண்ணமே உண்டாயிற்று. எப்பொழுதும் ஆற்றங் கரைகளிலே தன்னிச்சையாக வாழ்ந்து வந்ததால் மட்டுரு வின் மனத்தில் உற்றார் உறவினர், பங்காளிகளின் பழக்க வழக்கங்கள், சம்பிரதாயங்களைப் பற்றிய உறுதியான எண்ணமோ, பிடிப்போ ஏற்படவில்லை. அவன் தன்னிச்சையாக வாழ்ந்து கொண்டிருந்தான். மனதிற்கு எது சரியெனத் தோன்றியதோ, அதைச் செய்தான். எப் பொழுதும் எந்த பந்தத்தையும், கட்டுப்பாடுகளையும் அவன் ஏற்றுக் கொண்டதில்லை. மனிதனிடம் வலிமையும், வீரமும் இருக்க வேண்டும் என்பது மட்டும் அவன் அறிந்திருந்தான். அவை இருந்துவிட்டால் பின் யாரால் அவனைத் தடுக்க முடியும்? கோபி மட்டும் இதற்குத் தயாராக இருந்தால், இக்காரியத்தை தானே முன்னின்று முடித்து விட்டுத்தான் மறுகாரியம் பார்க்க வேண்டுமென்றும் அவன் தனக்குள் நிச்சயித்துக் கொண்டான். அப்படித்தான் என்ன பிரமாதமாய் நேர்ந்து விடப் போகிறது? கோபி தன் வீட்டாரைத் துறக்க நேரிடலாம். அதனாலென்ன? ஆற்றங்கரையில் இன்னொரு குடிசை ஏற்படும். அவ்வளவு தான். அவனைப் போலவே அவர்களும் வாழ்வார்கள். இன்ப துன்பங்களைச் சகித்துக் கொள்வார்கள் என்று நினைத்தான்.

## 11

கோபி சிறையிலிருந்து வெளியே வரும்போது, பொது வாக கைதிகளுக்குச் சிறைச்சாலையிலிருந்து வெளியே வரும் நேரத்தில் ஏற்படும் மகிழ்ச்சி ஏற்படவில்லை. அவன் தன் வீட்டை நோக்கிச் சென்று கொண்டிருந்தான். இன்று அவன் விதவையாகிவிட்டிருந்த தன் அண்ணியின் முன்னே போய் நிற்கப் போகிறான். நான்கு ஆண்டுகளாகிய பின்னும் அவளை, அந்த நிலையில் தன்

கண்களால் பார்க்க வேண்டிய நிலைக்கு அவனால் தன்னுள்ளே போதிய தைரியத்தைத் திரட்டிக் கொள்ள முடியவில்லை.

கிராமத்திற்குள் அவன் நுழைந்தபோது, மாலை நேரத்தின் லேசான இருளின் நிழல் பூமியின் மீது கவிந்து கொண்டிருந்தது. குளிர்காலம். நாற்புறமும் மௌனம் விரவி நின்றது. குளத்திலிருந்து இரண்டொருவர் இருமுவதும், தொண்டையைச் செறுமுவதும் காதில் வீழ்ந்தது. படித்துறை காலியாக இருந்தது. கிராமத்திற்கு மேலே வானத்தில் பரவியிருந்த புகை மண்டலம் மெல்ல மெல்ல நகர்ந்து கொண்டிருந்தது.

மேலே நடந்த கோபி யாரிடமாவது தன் வீட்டைப் பற்றிய சமாசாரங்களைக் கேட்கலாமா என நினைத்தான். ஆனால் நின்று விட்டான். அருகிலேயே அந்தச் சின்னக் கோவில் தென்பட்டது. பூஜாரியிடம் செல்லலாமே என நினைத்தான். பகவானைத் தரிசித்த மாதிரியும் இருக்கும். பூஜாரியிடமிருந்து சமாசாரங்களையும் கேட்டுக் கொள்ளலாம். அவன் மனதில் உள்ளூர ஏதோ ஒரு பயம். வருடக் கணக்காக வெளியூரில் இருந்ததால் இதனிடையே என்னென்ன நடந்திருக்குமோ என்று மனதில் தோன்றிக் கொண்டிருந்தது. ஏதேனும் கெட்ட செய்தி காதில் விழாமலிருக்க வேண்டுமே என்று பயமாகவும் இருந்தது.

ஆலயம் கூட வெறிச்சோடிக் கிடப்பதாக அவனுக்குத் தோன்றியது. ஏனிப்படி என்று வியப்பாகவும் இருந்தது. சாமிக்கு ஆரத்தி நடக்கும் வேளை இது. இருப்பினும் ஏன் இத்தனை அமைதி விரவி நிற்கிறது. திண்ணையின் மீது வயதான பிச்சைக்காரனொருவன், ரொட்டி வாட்டுவதற்காக, சுள்ளிகளுக்குத் தீ மூட்டிக் கொண்டிருந்தான். கோபி நிற்பதைக் கண்டதும் "என்னப்பா! என்ன வேண்டும்?" என விசாரித்தான்.

"கோயில் ஏன் மூடிக் கிடக்கிறது? பூஜாரி இல்லையா?" என அவனருகில் வந்து நின்றவாறு கேட்டான் கோபி.

பிச்சைக்காரன் உரக்கச் சிரித்தான். பல் இல்லாததால்

நிறைய எச்சில் அவன் உதடுகளில் வழிந்தது. "நீ இந்த ஊர்க்காரன் இல்லையா? அரே! பூஜாரி ஓடிப்போய் கிட்டத்தட்ட மூன்று வருடங்கள் ஆகப் போகிறது. ஊரில் ஒரு விதவையுடன் பிடிபட்டுவிட்டான். அவளையும் கூட்டிக் கொண்டு எங்கே போனானோ யார் கண்டது?" என்றவன் மீண்டும் உரக்கச் சிரிக்க ஆரம்பித்தான்.

கோபியின் நடுங்கும் கரங்கள் காதுவரை உயர்ந்தன. அவனிதயம் வேகமாய் அடித்துக் கொண்டது. அவனால் மேலும் ஒருகணம் கூட அங்கே நிற்க முடியவில்லை. எல்லையற்ற கவலையை நெஞ்சில் சுமந்தவனாய் அவன் நேராய் தன் வீட்டை நோக்கி நடந்தான். அவன் மனத்தில் ஒரு சந்தேகம் அலைபாய்ந்தது... ஒருவேளை—

தெருக்களில் தங்கள் வீட்டின் முன் அமர்ந்திருந்தவர்கள், துயரமும், கவலையுமே உருவானவன் போல் சென்று கொண்டிருந்த கோபியைக் கண்டதும் மௌனமாக அவனுடன் சென்றனர். மௌனமான பார்வையினால் அவர்களது வணக்கத்திற்குப் பதிலளித்துக் கொண் டிருந்தான் கோபி. யாரிடமும், எதையும் விசாரிக்கும் மன நிலையில் அவனோ, அவர்களோ இல்லை. யாவரும் தங்கள் அன்பிற்குரியவனைச் சிதையில் எரித்து விட்டு சோகமாய், வாய்திறவாமல் வந்து கொண்டிருப்பது போலிருந்தது அக்காட்சி.

அதற்குள் யாரோ கோபி வந்து கொண்டிருக்கும் சேதியை வீட்டில் சொல்லி விட்டார்கள். கோபி தன் வீட்டை அடைய சிறிது தூரம் இருக்கும் போதே, அத்திசையிலிருந்து உரக்க, பலமாக, கதறி அழும் சத்தம் கேட்கத் துவங்கியது. கோபி மனமொடிந்து போனான். இனமறியாத துக்கத்தினால் உடல் நடுங்கியது. கால்கள் வெடவெடத்தன; கண்முன்னே இருள் படர்ந்தது; தலை சுற்றியது. அவன் கூட நடந்து வந்தவர்கள் இதைக் கவனியாமல் இல்லை. சிலர் சட்டென அவனைத் தாங்கிக் கொண்டனர். "பாவம்! சுய நினைவு தவறிவிட்டது. பீமனைப் போன்ற அண்ணனை இழந்த துயரம் போதாதா,

கடவுள் இவன் மனைவியையும் பிடுங்கிக் கொண்டு விட்டாரே'' என்றனர் ஒருசிலர்.

கோபியின் காதில் இது விழுந்ததும், கண்களைத் திறந்து– ''என்னது?'' என்று வினவினான்.

''இனிமேல் வருத்தப்படுவதால் என்னவாகப் போகிறது தம்பி! உனக்கும் அவளுக்கும் உறவு அவ்வளவுதான் எழுதி இருந்தது. இனி இருப்பவர்களைக் கவனித்துக் கொள். நீ ஒருத்தன்தான் இனி அவர்களுக்குத் துணை''– என பலரும் ஒருமித்த குரலில் கூறினர்.

இடியைப்போல் எரிந்து கொண்டிருந்த சூலாயுதமொன்று நெஞ்சிலே பாய்ந்து, தன் உடலையும், உள்ளத்தையும் சுட்டெரித்துவிட்டு, விர்ரென வெளியேறிவிட்டது போல் கோபிக்குத் தோன்றியது. தன்னைத் தாங்கிக் கொண்டிருந்தவர்களின் கரங்களில் அவன் அப்படியே மூர்ச்சித்து வீழ்ந்தான். அவனை எடுத்துக் கொண்டு வந்து கட்டிலில் கிடத்தினார்கள். முகத்தில் தண்ணீர் தெளிக்கப்பட்டதும் மெதுவாக சுய நினைவு திரும்ப லாயிற்று. பெண்கள் அழுது கொண்டே கோபியின் அம்மாவையும், அண்ணியையும் சமாதானப் படுத்தலாயினர். வயதில் பெரியவர்கள், படுக்கையில் புலம்பிக் கொண்டிருக்கும் தந்தையிடம், ''வயதில் பெரியவரான நீரே இப்படி அழுது அழுது உயிரை விட்டால் கோபியின் நிலை என்னவாகும்'' எனக் கூறி அமைதியுறச் செய்தனர்.

* * *

அந்த வீட்டில் துயர மேகங்கள் பல மாதங்கள் வரை கவிந்திருந்தன. வேதனைக் கண்ணீர் எல்லோருடைய கண்களிலிருந்தும் வடிந்து கொண்டே இருந்தது.

துயரமும், துக்கமும் எத்தனை சக்திவாய்ந்ததாக இருந்தாலும், இயற்கை அதைவிட அதிகமாகவே அதைத் தாங்கிக் கொள்ளும் சக்தியையும் அளித்துள்ளது.

துக்கத்திற்கு வரையறுக்கப்பட்ட எல்லை என்பது எப்படி இல்லையோ, அப்படியேதான் அதைத் தாங்கும் சக்தியும் எல்லையற்றது. எந்தத் துக்கத்தைப் பற்றிய கற்பனை கூட ஒருவனுடைய ஆன்மாவின் அஸ்திவாரத்தையே கலகலக்கச் செய்து நடுங்க வைக்கிறதோ, அதே துக்கம் சற்றும் எதிர்பாராது, திடீரெனத் தலையில் வந்து விழும்போது, அதைச் சகித்துக் கொள்ளும் சக்தியும் எங்கிருந்தோ அவனுக்கு வந்துவிடுகிறது. அதை அவன் சிரித்துக் கொண்டோ, அல்லது அழுது கொண்டோ தாங்கிக் கொள்கிறான். துக்கமெனும் கருமேகத்தினடியிலே அமர்ந்து அவன் துடிக்கிறான். அழுகிறான். அழுது அழுது அவன் அத்துக்கத்தை மறக்கிறான்; மேகம் விலகுகிறது; மகிழ்ச்சியின் பிரகாசம் மின்னலிடுகிறது. மனிதனும் சிரிக்கிறான், தன் மீது துயர மேகங்கள் படிந்திருந்தன, தான் அழுதோம், துடித்து, தவித்தோம் என்பதைக் கூட அவன் மறந்து விடுகிறான். இது ஒருசில அசாதாரணமான மனிதர்களுக்குப் பொருந்தாமலிருக்கலாம். ஆனால் சாதாரண மனிதர்களைப் பொறுத்த வரையில் முற்றிலும் உண்மையானது இது.

கோபி, அவன், அப்பா, அம்மா, அண்ணி யாவருமே சாதாரணமான மனிதர்கள். கடல்போல் பொங்கி ஆர்ப்பரித்த துயரக் கடலில் வருடக்கணக்காக, மோதி, மொத்துண்டு அலமலந்து போனபின், துயரத்தின் ஆர்ப்பரிக்கும் அலைகள், கொஞ்சம் கருணையும், இனிமையும் கூடிய நினைவுகளின் மென்மையான சிற்றலைகளாய் மாறி, புண்பட்டிருந்த அந்த உள்ளங்களை தனது மென்மையான கரங்களினால் தடவிக் கொடுத்தது, லேசான நம்பிக்கையையும், சுகமும் கூடியதொரு மெலிதான வலையைப் பின்னத் துவங்கியிருப்பதை அவர்கள் உணர்ந்தனர்.

அண்ணியும், மைத்துனனும் ஒரே மாதிரியான இழப்பிற்கும், துர்பாக்கியத்திற்கும் பலியானவர்கள். ஒருவர், மற்றொருவருக்கு என்ன தேறுதல் கூறுவதென்பது

இருவருக்குமே புரியாமலிருந்தது. அண்ணி, முன்போலவே பூஜை பாராயணத்திலும், வீட்டு வேலைகளிலும் தன்னை ஈடுபடுத்திக் கொண்டு விட்டாள். ஒரு யந்திரப் பாவைபோல் அவள் எல்லாம் செய்தாள். இதையெல்லாம் செய்வதற்கே அந்த யந்திரம் உருவாக்கப்பட்டிருப்பது போலவும், ஒரே கதியில், ஒரே மாதிரி இது இயங்கிக் கொண்டிருக்கும், வேலை செய்து கொண்டிருக்கும், இதன் நியமத்தில், இயக்கத்தில் எந்த மாறுதலும் இராது என்பது போல் அவள் இயங்கிக் கொண்டிருந்தாள். ஆம். மெல்லமெல்ல காலப் போக்கில் இதன் பாகங்கள் தேய்ந்து போகும். இதன் வேகம் தளர்வடையும், ஒருநாள், இதன் பாகங்கள் சிதறிவிடும், இந்த யந்திரமும் உடைந்து போகும்.

அண்ணி முன்பிருந்ததை விட பின்னும் கம்பீரமாய், மௌனமாய், சோகமாய் மாறிவிட்டிருந்தாள். தனது பூசை, பாராயாணம், வீட்டு வேலைகளைத் தவிர தன் வாழ்வில் எதுவுமே இல்லாதது போல் அவளிருந்தாள்.

கோபி தன் அண்ணியைக் கவனித்தான். எல்லையற்ற சோகத்திலும், துக்கத்திலும் மூழ்கி எதிலுமே பிடிப் பற்றவளாய், நோயுற்ற ஒரு பதுமைபோல் வளைய வரும் அண்ணியைக் கண்டு, இவள் இப்படியே தன் வாழ்வைக் கழித்து விடுவாளா என நினைத்தான் அவன். உண்மையிலேயே அவள் இப்படியொரு வாழ்க்கையைக் கழிக்க அவன் விட்டு விடுவானா? உலகமெனும் தோட்டத்தில் இலையுதிர் காலம் வருகிறது. மீண்டும் வசந்தமும் வருகிறது. அண்ணியின் வாழ்வில் ஒருமுறை வந்து விட்ட இலையுதிர்காலம் என்றென்றும் நீடிக்குமா? மீண்டும் வசந்தம் வரவே வராதா? மீண்டும் அவள் வாழ்வில் வசந்தத்தைத் தோற்றுவிக்க முடியாதா? இலையுதிர் காலத்தில் மௌனமாகிவிடும் புல்புல் என்றென்றும் மௌனமாகி விடுமா என்ன? மகிழ்ச்சி துள்ளும் அதன் இனிய குரலோசையை அவனால் மீண்டும் கேட்க முடியாதா?

தனது சமூகத்தின் பழக்க வழக்கங்கள், நெறிமுறைகளைக்

கோபி அறிவான். தனது சமுதாயத்தில் விதவையாகிவிட்டவள் ஒரு கொள்ளிக் கட்டை. ஒருமுறை கணவனின் சிதைக்குத் தீயிட்ட பின், அது எரிந்து கொண்டே இருக்கும். அது முற்றிலும் எரிந்து சாம்பலாகும் வரை எரிந்து கொண்டேதானிருக்கும். அவள் முற்றும் எரிந்து சாம்பலாகும் முன், அத்தீயை அணைப்பதிருக்கட்டும், தீண்டும் துணிவுகூட யாருக்கும் இருப்பதில்லை. தனது அண்ணியும் இப்படியே எரிந்து, சாம்பலாகிக் கருக வேண்டியவள்தானா என நினைத்தான் கோபி. அவனால் கனன்று கொண்டிருக்கும் அந்நெருப்பை அணைக்க முடியாதா? கோபியின் மனக்கண் முன்னே இக்கேள்வி ஒவ்வொரு கணமும் சுழன்று கொண்டே இருந்தது. அவன் எப்பொழுதும் இக்கேள்விகளுக்குரிய விடைகளைத் தேடுவதில் மூழ்கிக் கிடந்தான். அண்ணியின் சுக துக்கங்களுக்கு அவன் வாழ்வில் இடமில்லை என்பதில்லை. ஆனால் அண்ணியின் வாழ்வில் முடிவற்ற வெறுமை நிறைந்து விட்டபின், அண்ணியின் சுக துக்கங்களைப் பற்றிய எண்ணம், அவன் இதயத்தில் பின்னும் ஆழமானதாகிவிட்டது. அவன் தன்னைப் பற்றி நினைக்காமல் எப்பொழுதும் அண்ணியின் வாழ்வைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்தான். தன் அன்பிற்குரிய அண்ணி மீண்டும், முன்போல் சிரித்துக் களித்திருப்பதைப் பார்ப்பது எப்படி?

* * *

உலகம் எந்த நிலையிலிருந்தாலும் பெண்ணைப் பெற்ற தந்தைமார்களுக்கு நிம்மதி ஏது? கோபி சிறையிலிருந்து வெளிவந்து விட்ட செய்தி கேட்டதுமே அவர்கள் ஓடியாடத் துவங்கி விட்டனர். அவன் சிறையிலிருந்து வருவதைத்தான் எதிர் பார்த்துக் கொண்டிருந்தனர். இனித் திருமணத்தை நிச்சயிப்பதற்கு எந்த ஆட்சேபணையும் இருக்க முடியாது. கோபியின் அப்பா, அவனிடமே நேரிடையாகப் பேசிக்

கொள்ளுமாறு கூறிவிட்டார். நோயாளியானவர் ஆயிற்றே! இனி எல்லாமே கோபிதான் கவனித்துச் செய்ய வேண்டும். அவன் எது உசிதமென நினைக்கிறானோ அதன் படி செய்யட்டும், எனக் கூறி விட்டார் அவர்.

திருமண விஷயமாக வந்தவர்களைக் கண்டால் கோபிக்கு எரிச்சலாக வந்தது. அண்ணியின் கண் முன்னால் தான் மீண்டும் எப்படித் திருமணம் செய்வது என்பது அவனுக்குப் புரியவில்லை. மகிழ்ச்சிகரமான இந்த வைபவத்தை அவள் எந்தக் கண்களால் பார்ப்பாள்? திருமணப் பாடல்களை எந்தக் காதுகளால் கேட்பாள்? இதையெல்லாம் அவளால் எப்படிச் சகித்துக் கொள்ள முடியும்? முடியாது, முடியவே முடியாது. கோபி எரிந்த புண்ணில் உப்பை அள்ளிப் போடவே மாட்டான். அவனால் இது இயலாது; அப்படிச் செய்தால் அவள் இதயமே சல்லடைக் கண்ணாகிவிடும்; நொறுங்கி விடும்.

வந்திருக்கும் விருந்தாளிகளைப் பார்த்து "என்னிடம் இந்தப் பேச்சை எடுக்க உங்களுக்கு வெட்கமாக இல்லையா? வேறொன்றுமில்லா விட்டாலும் குறைந்தபட்சம் ஒரு மனிதன் என்ற நோக்கிலாவது எனது இதயத்தைப் புரிந்து கொள்ள முயற்சியுங்கள். திருமணப் பேச்சை எடுத்து எனது ஆறாத புண்ணில் கோலிடாதீர்கள்" என்று கத்த வேண்டும் போலிருந்தது. ஆனால் உலக மரியாதையை முன்னிட்டு, தான் திருமணம் செய்து கொள்வதாக இல்லையெனக் கூறி தட்டிக் கழித்தான்.

"ஏனப்பா! அப்படிச் சொல்லுகிறாய்?" என மேலும் அவனைக் குழப்பவே அவர்கள் முயற்சித்தனர்.

"இந்த வயதில் உன்னால் இப்படி எப்படி இருக்க முடியும்" என்று இன்னொரு கேள்வி வீசப்பட்டது.

"அண்ணிக்கும் என் வயதுதான். அவளால் மட்டும் எப்படி, அப்படி இருக்க முடியும்?" எனக் கேட்க வேண்டும் போலிருந்தது, என்றாலும் கோபி மௌனமாகவே இருந்தான்.

மூன்றாவது அம்பு வீசப்பட்டது "இன்றில்லை என்றாலும், என்றாவது ஒருநாள் நீ குடும்பம் ஏற்படுத்திக் கொள்ளத் தானப்பா நேரிடும்."

"இதே வார்த்தை அண்ணியிடம் சொல்லப்படுமா?" எனக் கேட்க நினைத்தான் கோபி. ஆனால் வாயிலிருந்து வார்த்தையே வெளி வரவில்லை. உள்ளுக்குள்ளே கோபம் தான் குமுறிக் கொண்டிருந்தது.

"குழந்தை குட்டிகள் இருந்தாலும், அது ஒரு விஷயம் எனலாம்—" நான்காம் முறையாகவும் சிக்க வைக்கக் கணை வீசப்பட்டது. பையன் வாயை மூடிக் கொண்டு மௌனம் சாதிக்கிறான் என்றால், தாங்கள் கூறுவதன் பிரபாவம் ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றது என்று அர்த்தம். ஒருக்கால் இணங்கி வரலாம் என அவர்கள் நினைத்தனர்.

அண்ணிக்குக் கூடத்தான் குழந்தை குட்டிகள் இல்லை. அவளுக்கு மட்டும் இது அவசியமில்லையா? கோபியின் உள்ளத்திலிருந்து மௌனமான கேள்வி எழுகின்றது என்றாலும் அவனது உதடுகள் அசைவதில்லை. கோபம் தான் பொங்கி வருகிறது; நாசி விரிகின்றது.

"குடும்பத்தின் பெயரைச் சொல்ல அடையாளமாக........"

இனியும் எதையும் கேட்கப் பொறுமையற்றவனாய் கோபி குமலும் மேகம் போல் கர்ஜித்தான்– "என் குடும்பத்தைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டிய அவசியம் ஏதுமில்லை...... நீங்கள் போகலாம்".

"விசித்திரமான மனிதன். நாம் எப்படிப் பேசுகிறோம். இவன் எப்படிப் பேசுகிறான் பார்?"

அவமதிப்பின் கசப்பையும் விழுங்கிக் கொண்டு, வந்திருப்பவன்– "வரதட்சிணை– சீர் பற்றி ஏதுமிருந்தால் கூட........"

"ஒன்றுமில்லை. ஒன்றுமேயில்லை. நான் திருமணம் செய்து கொள்ள மாட்டேன். மாட்டவேமாட்டேன்!" கோபி தானே அங்கிருந்து எழுந்து போய்விட்டான்.

ஆனால் இந்தச் சங்கிலித் தொடர் நின்றுவிடவில்லை. வந்து கொண்டிருந்தது. யாரேனும் வந்திருக்கிறார்கள் என்று

கேள்விப்பட்டாலே கோபி கடும் கோபம் கொண்டான். வெறிபிடித்தவன் போலாகிவிடுவான். அவன் உள்ளத்தின் போராட்டம் பின்னும் தீவிரமடைந்துவிடும். மௌனமான குரலிலே தனது உள்ளத்திடமே கேட்பான்.

"அதெப்படி? அதெப்படி சாத்தியம்? என் விதவை அண்ணியின் கண்முன்னே, திருமணக் களியாட்டம் நடத்தட்டுமா? அவள் இதயத்தின் துடிப்பை, உள்ளத்தின் குரலுக்கு செவிசாய்க்காமல், ஏதுமறியாத அப்பாவி இளம் பெண்ணொருத்தியை அழைத்து வந்து, என்னுடைய இன்பமான உலகத்தை சிருஷ்டித்துக் கொள்ளட்டுமா? முடியாது! இது முடியவே முடியாது." கோபி விம்மி விம்மி அழத்துவங்கினான்.

## 12

ஆற்றங்கரைப்படுகையில் இம்முறை ரபி விளைச்சல் அமோகமாய் இருந்தது. மைல்கணக்காக, கதிர் முற்றிய கோதுமை வயல்களால் வானமே சிவப்பேறிவிட்டது போலிருந்தது. அறுவடை துவங்கப் போகிறதென்ற செய்தி கிடைத்ததுமே வெகு தூரத்திலிருந்தெல்லாம் விவசாய கூலிகள் ஆண்களும், பெண்களுமாய் வந்து அங்கேயே தங்கி விட்டனர். குறைந்தபட்சம் பத்து, பதினைந்து நாட்கள் அறுவடை நடைபெறும். மட்டுரூ பயில்வான் கூலியாக தானியம் தாராளமாய்த் தருவான். ஏனைய விவசாயிகளிடமும் கூலிகளுக்குக் கொடுக்கும் தானி யத்தைக் குறைக்க வேண்டாம் என்று கூறியிருந்தான். கூலிகள் தானியத்தை மூட்டையாகக் கட்டிக் கட்டித்தான் எடுத்துக் கொண்டு போகப் போகிறார்கள்.

கங்கைத்தாயின் ஆற்றங்கரைப் பிரதேசமே திருவிழாக் கோலம் பூண்டுவிட்டது. வியாபாரிகள் பலரும், கிழங்கு மாவு, சத்து மாவு, பீடி, புகையிலை போன்ற பலவற்றையும்

பரப்பி சின்னச்சின்னக் கடைகள் போட்டு விட்டனர். தானியத்திற்குப் பதிலாக சாமான் தருகின்றனர். இங்கு காசு யாரிடமிருக்கிறது? கூலிக்காரர்களுக்குத் தினமும் மாலை, கூலியாகத் தானியம் அளக்கப்படுகிறது. அதிலிருந்துதான் அவர்கள் செலவுக்கு கொஞ்சம் எடுத்துக் கொள்கின்றனர். தங்களுக்குத் தேவையான பொருட்களுக்கு வியாபாரி களிடம் பண்ட மாற்றுச் செய்து கொண்டனர். பகலில் கூட எல்லாக் கூலிகளுக்கும் சத்துமாவுதான் ஆகாரம். ஆனால் இரவில் ரொட்டி சுட்டுக் கொள்ள, கங்கைத்தாயின் கரையில் நூற்றுக்கணக்கான, வரட்டி, சுள்ளி அடுப்புகள் கணகணவென எரியும்போது வானத்தில் புகை மண்டலம் கவிந்து கொண்டுவிட்டது போல் தோன்றும்.

இதையெல்லாம் பார்க்கும்போது மட்டுரூ அடையும் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. எல்லோரும் அவனைப் புகழ்ந்து பாராட்டும்போது அவன் வெ ்கத்தால் தலை குனிந்து கொள்வான்.

"இது மட்டுரூபயில்வான் குடி அமர்த்திய இலாக்கா. வேறு யாருக்கு இத்தனை, முன்னோக்கும், துணிவும், அறிவும் இருந்தது? காட்டையே பசுந்தோட்டமாக்கி விட்டானே! காலம் காலமாக இந்த ஆற்றங்கரைப் படுகைப் பிரதேசம் பரந்து கிடக்கிறது? எங்கும் யாருமே கண்ணிலே தட்டுப் படமாட்டார்கள். வெறிச்சோடிக் கிடக்கும் இந்த இடத்தில் இன்று திருவிழா கோலமாகி விட்டதே!" என்றனர் மக்கள்.

நூற்றுக்கணக்கான குடியானவர்களுக்கும், கூலிகளுக்கும் பிழைப்பிற்கு ஒரு வழியுண்டாகி விட்டது. எல்லோரும் மட்டுரூவை ஆசீர்வதித்தனர். தலைமுறை தலைமுறையாக இந்த ஜமீன்தார்கள், காட்டை அழித்து விற்று, ஆயிரக் கணக்கில் கொள்ளையடித்துக் கொண்டிருந்தனர். மட்டுரூ பயில்வானுக்கு முன்பு, அவர்கள் கையைப் பிடிக்க யாரேனும் துணிந்தார்களா?

"தம்பி, ஆண்பிள்ளை என்றால் மட்டுரூ பயில்வான் மாதிரி இருக்க வேண்டும். சிங்கம், அவன் சிங்கம். ஆயிரக்கணக்கானவர்கள் அவன் மீது சும்மாவா உயிரைக்

கொடுக்கின்றனர்? இப்படிப்பட்ட மனிதன்தானப்பா உள்ளங்களில் ஆட்சி செய்பவன்; இந்தப் பக்கம் கண் ணெடுத்துப் பார்க்கும் தைரியம் இனி அந்த ஜமீன் தார்களுக்கு வருமா?'' என்று மக்கள் பேசிக் கொண்டனர்.

மட்டுரூ இதையெல்லாம் கேட்கும்போது, இரு கரத்தையும் உயர்த்தி ஆற்றை நோக்கி– ''இதெல்லாம் கங்கைத்தாயின் அருளப்பா! அருள்? அவளுடைய களஞ்சியத்தில் எந்தப் பொருளுக்கும் குறைவேயில்லை. எடுத்துக் கொள்பவர்தான் தேவை. தாயின் மடியில் தன் குழந்தைகளுக்காக என்றேனும் இல்லை என்பதுண்டா? அதிலும் உலகத்தில், என் கங்கைத்தாயின் மடியில்!'' என்பான்.

* * *

கிருஷ்ணபட்சத்து சந்திரன் வானத்தில் தோன்றியதுமே மட்டுரூவும், பூஜனும், கூலிகளை அழைக்கத் துவங்கி விட்டார்கள். பகலில் வெயிலும், உஷ்ணக் காற்றும் வீசுவதால் கூலிகள் சிரமப்பட்டுப்போய் விடுகிறார்கள். குளுமையான இளம் காலைப் பொழுதில் இரண்டு, மூன்று மணி நேரத்திற்குள் எத்தனை வேலை நடக்குமோ, அத்தனை வேலை பகலில் ஏழு, எட்டு மணி நேரத்தில்கூட நடப்பதில்லை.

கூலிகள் ஆற்றங்கரையின் சில்லென்ற மணற்பரப்பில் வரிசையாகப் படுத்து உறங்குவார்கள். இன்பமான, சுகமான வடக்கத்திய காற்று வீசியது. நிலவு இனிமையான குளிர்ச்சியைப் பொழிந்தது. சலசலத்தோடும் ஆறு மதுரமான பாடலை முணுமுணுத்துக் கொண்டிருந்தது. அழைப்புக் குரல் காதில் வீழ்ந்ததுமே ஆண்களும் பெண்களும் எழுந்து விட்டார்கள். சோம்பல் என்பதே இல்லை. களைத்துப் போயிருக்கும் உடலுக்கு, ஆற்றிலிருந்து சில்லென்று வீசும் காற்றின் ஸ்பரிசம் பட்டதுமே, மீண்டும், புத்துணர்ச்சியும், சுறுசுறுப்பும் வந்து விடும். இங்கு இரண்டொரு மணி நேரம் கண்ணயர்ந்தாலே போதும்,

ஊரில் இரவு முழுவதும் உறங்குவதைவிட அதிகமான ஓய்வும், சுகமும் ஒருவனுக்குக் கிடைத்து விடும்.

வரப்பில் கணப்பு எரிந்து கொண்டிருந்தது. அருகிலேயே புகையிலையும், கத்தைக் காம்பும் வைக்கப்பட்டிருக்கிறது. புகைபிடிப்பவன், "சிலம்"மை நிரப்பிக் கொண்டிக்கிறான். புகையிலையைப் போட்டுக் கொள்கிறவன் அதை எடுத்து உள்ளங்கையில் வைத்துத் தேய்த்துக் கொண்டிருக்கிறான். சற்று நேரம் வரை வயதான கிழவன், கிழவிகளின் இருமல், செறுமல், ஊம், ஹாம்மென்ற சத்தம் சுற்றுமுற்றும் நிறைகின்றது. பிறகு மீண்டும் அறுப்பு வேலை துவங்குகிறது.

வயலின் குறுக்கு வாட்டில் கூலிக்கார ஆண்களும், பெண்களுமாய் வரிசையாக நின்று, குனிந்து பயிரை அறுத்துக் கொண்டிருந்தனர். ஆண்கள் ஒருபுறமும், பெண்கள் ஒருபுறமுமாய் நின்றனர். ஒரு கோடியின் மூலையில் மட்டுரூ நின்று கொண்டிருந்தான். இன்னொரு கோடியில் பூஜன். பூஜன் தன்னருகிலிருந்த கிழவியை முழங்கையால் இடித்து, சிரித்தவாறே– "பாடு— ஒரு நல்ல பாட்டு" என்றான்.

கிழவி சிரித்துக் கொண்டே தன் பக்கத்திலிருந்தவனின் விலாவில் இடித்தாள். பின்னென்ன? அந்த வரிசை முழுவதுமே கலகலத்தது. இளம் பெண்கள், தொண்டையைக் கனைத்துக் கொண்டனர். இரண்டொரு வினாடி, நீ பாடு, நீ பாடு என்று கூறிக் கொண்டது கேட்டது. பின்னர் மண்ணின் மகளிரின் தொண்டையிலிருந்து காட்டுத் தேன் போன்ற இனிமையான குரலில் பாடல் ஒலிக்கத் துவங்கியது. முகங்கள் பிரகாசமடைந்தன; கண்கள் மின்னின; கரங்களுக்கு வேகம் பிறந்து விட்டது. வேலைக்கும் , இசைக்கும் லயமான இசைவு ஏற்பட்டு விட, அந்தச் சூழலே உற்சாகத்தில் உல்லாசம் கொண்டது. நிலவும், விண்மீன்களும் கூட நர்த்தனமாடின. கங்கைத் தாயின் நீரலைகள் உன்மத்தம் கொண்டனவாய் கரைகளிலே வந்து மோதின.

*ஏய், காதலனே? நீ பரதேசம் செல்லாதே!*
*உனக்கங்கே என்ன கிடைக்கும்*
*என்ன கிடைக்கும்?*
*வயலெல்லாம் இங்கே விளைந்துவிட்டது*
*முற்றிய பொன்கதிர்கள் அசைந்தாடுகின்றன*
*விடியலிலேயே நான் கிளம்பி விடுவேன்*
*அரிவாளுடன்*
*ஆடிப்பாடி, பயிர்களின் தேவதைகளை மகிழ்விப்பேன்*
*அகமகிழ்ந்து அவர் புத்தரிசியை அள்ளித் தருவார்*
*நிரம்ப நிரம்ப கொண்டு வருவேன் நான் அதை,*
*குத்துவேன், புடைப்பேன் மாவரைப்பேன்*
*"பூ ஆ" சமைப்பேன். நான் அதை*
*மணையிலே உன்னை உட்கார்த்தி வைப்பேன்*
*என் கையாலேயே சமைத்து உனக்கு*
*உணவளிப்பேன் நான்.*
*சென்ற அறுவடையில் நடந்ததெல்லாம்*
*நினைவிருக்கிறதா அன்பரே!*
*பரதேசம் போகவேண்டாம்! அன்பரே!*
*உனக்கங்கே என்ன கிடைக்கும்?*
*என்ன கிடைக்கும்?*

காலையிளம் சூரியனின் செந்தூர வண்ண ஒளி வெள்ளம் வயல்களிலெல்லாம் பரவி செவ்வண்ண நீர்த்தடாகம் போல் புன்முறுவல் பூத்தது. களத்திலிருந்த ஆண், பெண்களின் முகங்கள் பொற்சிலைகள் போல் தகதகத்தன. ஆற்று நீர் பொன் கரையிட்ட சேலையைப் போல் அலைபாய்ந்தது, பளபளத்தது. தொலைவிலிருந்து நீர்ப்பறவைகளின் குரலோசை இனிமையான அச்சூழலில் எதிரொலிக்கத் துவங்கியது. இயற்கை சோம்பல் முறித்த வண்ணம், தூக்கக் கலக்கம் நிறைந்திருந்த இமைகளை மெல்ல உயர்த்தியது. கதிரவனின் முதற்கிரணங்கள் அதன் செவ்விதழ்களை முத்தமிட்டதும், அசைவன, அசைவற்றன யாவுமே, உல்லாசத்துடன் வாழ்வின், காதலின் கீதத்தை இசைக்கத் துவங்கின.

அச்சமயம் மட்டுரூவின் காதுகளில் ஒரு குரல் ஒலித்தது– "மட்டுரூ அண்ணே!"

திடுக்கிட்டுத் திரும்பிய மட்டுரூ, பாய்ந்து வந்து கோபியை ஆரத் தழுவிக் கொண்டான். "கோபி! அடே! கோபி! எப்பொழுது வந்தாய் நீ!"

"நன்றாகக் கேட்கிறாய் அண்ணே! நான் வெளியே வந்து நான்கைந்து மாதங்களாகின்றன. செய்தியே தெரியாதா?" முறையிடும் குரலில் வினவினான் கோபி.

"இத்தனை சீக்கிரம் எப்படி வெளியே வந்தாய்? இந்த மாதம் தான் வெளியே வருவாய் என்று நினைத்தேன்" கோபியின் இரு தோள்களையும் தன் கரத்தால் பற்றி அழுத்தியவாறே கூறினான் மட்டுரூ.

"ஆறு மாதம் ரெமிஷன் கிடைத்தது. நீங்கள் அடிக்கடி வீட்டிற்கு வந்து போனதாய்க் கேள்விப்பட்டேன். ஆனால் இப்பொழுது ஏன் வரவில்லை? நான் உங்களை எதிர் பார்த்துக் கொண்டே இருந்தேன். ரொம்ப மஜாவாய் இருப்பது போலிருக்கிறதே" என்றான் கோபி.

"ஆமாம்! கோபி! எல்லாம் கங்கைத்தாயின் அருள்! நீ உன்னைப் பற்றிச் சொல்லு. இங்கு வேலைகளிலே மூழ்கியே போய்விட்டேன். இங்கிருந்து நகரக் கூட முடியவில்லை. அறுவடை முடிந்ததுமே ஒரு நாள் இரவு உன் வீட்டிற்கு வந்துவிட்டு வர வேண்டும் என நினைத் திருந்தேன். நீ வந்தது நல்லதாயிற்று. இங்கே நான் சிக்கிக் கொண்டு விட்டேன்." தன் குடிசைக்குக் கோபியை அழைத்துச் சென்றவாறே கூறினான் மட்டுரூ.

"நீங்கள் மட்டும் தனியாக இருப்பதாய் சொன்னீர். இங்கு பார்த்தால் ஒரு சின்ன கிராமமே குடியேறிவிட்டதாகத் தெரிகிறது"– எனச் சுற்றும்முற்றும் பார்த்தவாறே கூறி னான் கோபி.

மட்டுரூ சிரித்தான். "எல்லாம் கங்கைத்தாயின் அருள் இப்பொழுது நூற்றுக்கு மேலான குடியானவர்கள் என்னு டன் இங்கு குடியேறிவிட்டனர். இப்பொழுது மட்டுரூ தனியன் அல்ல. அவனது குடும்பம் மிகமிகப் பெரியதாகி

விட்டது'' மட்டுரூ மீண்டும் உரக்கச் சிரித்தான்.

குடிசைக்கு முன்னே லக்னா இடது கையின் தோள்வரை நீரும் தவிடுமாய், அவர்களைப் பார்த்துக் கொண்டு நின்றான். ''ஏய்! உன் சிற்றப்பாடா! என்ன பார்த்துக் கொண்டு நிற்கிறாய்? வாடா— வந்து காலில் விழு'' என்றான் மட்டுரூ.

காலில் விழவிருந்த லக்னாவை கைகளால் பிடித்துத் தூக்கி– ''உன் மகனா?'' என்றான்.

''ஆமாம்!'' என்ற மட்டுரூ– ''என்னடா? எருமையைக் கறந்து விட்டாயா?'' எனக் கேட்டான்.

தலை குனிந்தவாறே– 'ஆயிற்று' என்றான் பையன்.

''சரி! போ! சிற்றப்பாவிற்கு ஒரு லோட்டா பால் கொண்டு வா! இதோ பார்! வயலுக்கு ஓடிப்போ! வரிசையை விட்டுவிட்டு வந்திருக்கிறேன்'' பாயில் கோபியை அமரச் செய்த மட்டுரூ பையனிடம் கூறினான்.

''அரே! ரே! இன்னமும் நான் கை முகம் கூடக் கழுவவில்லை அதற்குள் என்ன அவசரம்?''

''சிங்கம் எங்கேனும் முகம் கழுவுமா? — அதிலும் பால் குடிக்க– முகம் கழுவுவதென்ன?'' எனக் கூறிச் சிரித்தான் மட்டுரூ.

* * *

சிறைச்சாலையைப் பற்றிய எல்லா விஷயங்களையும் கூறிய பின், ''பிராண சங்கடமாகிவிட்டது. உங்களிடம் ஆலோசனை கேட்கலாம் என்று வந்தேன் அண்ணே! நீங்கள் கைகொடுத்தால்தான் உயிர் பிழைக்கும். தினம் தினம் பெண்ணைப் பெற்றவர்கள் வந்து உயிரெடுக்கிறார்கள். என்ன செய்வதென்று புரியவில்லை. அண்ணியின் நிலைமையைக் காணச் சகிக்கவில்லை. ரொம்பவும் துக்கமாய் இருக்கிறது. அவள் நெஞ்சை மிதித்துக் கொண்டு நான் சந்தோஷம் கொண்டாடுவது என்னால் இயலாது!''

"உண்மையைக் கேட்டால் நானும் இதே குழப்பத்தில் இருக்கிறேன் கோபி. அங்கே போனால் உன் அம்மாவும் அப்பாவும் உனக்கு வரன் தேடி திருமணம் நிச்சயம் செய்யும்படிச் சொல்லுவார்கள். நான் தட்டிக் கழித்து விடுவேன். உன் அண்ணியைப் பார்த்தபின் உலகத்தி லிருக்கிற பெண்களெல்லாம் மதிப்பில்லாமல் போய் விட்டார்கள். நீ வந்த பின் இதுபற்றி ஏதேனும் யோசிக்கலாம் என நினைத்தேன் தம்பி! உண்மையைச் சொல். உன் மனது அண்ணியைக் கல்யாணம் கட்டிக் கொள்ள நினைக்கிறதா? நீ அவளை மிகவும் விரும்புவதாய் எனக்குத் தோன்றுகிறது."

"நான் விரும்புவதால் மட்டும் என்ன நடக்கும்?" கோபி துயரத்துடன் கூறினான்.

"ஏன் நடக்காது? நீ ஆண்பிள்ளையா! சும்மாவா! உலகமே எதிர்த்தாலும் உன்னுடைய மட்டுரு தனியாகவே உன் பக்கம் நிற்பான். என்னை என்னவென்று நினைக்கிறாய்? உன் அம்மா, அப்பா உன்னை வீட்டை விட்டுத் துரத்திவிட்டாலும் இங்கே என் குடிசைக்கருகே, உனக் கொரு குடிசை போட்டு விட நான் நினைத் திருக்கிறேன். இதோ! பார்க்கிறாய் அல்லவா! புதிய வயல்கள்! நாமிருவருமாய் சேர்ந்து பாடுபடலாம். எவன் நம்மை என்ன செய்து விட முடியும்? உண்மையாகச் சொல்லுகிறேன் கோபி. உன் அண்ணியைப் பற்றி நினைத்தால் என் நெஞ்சமே வெடித்து விடும் போலிருக்கிறது. நீ அவளை உன்னுடையவளாய் ஆக்கிக் கொள், ரொம்ப புண்ணியமாக இருக்கும். கசாப்புக் கடைக்காரன் கையி லிருந்து ஒரு பசுவையும், வேடனின் கையிலிருந்து ஒரு பறவையையும் காப்பாற்றினால் என்ன புண்ணியம் கிடைக்குமோ அது உனக்குக் கிடைக்கும். துணிவுள்ள வீரன் இத்தகைய சந்தர்ப்பத்திற்குப் புறமுதுகு காட்டமாட்டான்." கோபியின் முதுகைத் தட்டிக் கொடுத்தவாறே கூறினான் மட்டுரு.

"ஆனால் அவள் மனத்திலிருப்பதும் தெரிய

வேண்டுமல்லவா? என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாளோ! அவள் சம்மதிப்பாளா அண்ணே!" கோபி மெல்லக் கேட்டான்.

"அரே! நீ வந்து ஐந்து மாதங்களாகிவிட்டன. உனக்கு இன்னமும் இதுகூடத் தெரியவில்லையா?" மட்டுரு தன் வியப்பை வெளிப்படுத்தினான்.

"எப்படித் தெரிய முடியும்? அவள் முற்றிலும் பேசா மடந்தையாகி விட்டாள். கத்தியின் கீழே தவிக்கும் புறாவைப் போல் எப்பொழுதும் நீர் மல்கும் விழிகளுடன் என்னைப் பார்க்கிறாள். எனக்கெப்படித் தெரியும்——"

"அரே! ஒருநாள் கேட்டுப் பாரேன்"

"ஆனால்– அம்மா, அப்பா——"

"ஒரு விஷயத்தை நீ புரிந்து கொள் கோபி. அம்மா, அப்பா என்று பார்த்தால் இது நடக்கவே நடக்காது. குலவழக்கம், மரபுகளைப் பெரியவர்கள் உயிருக் குயிராய் மதிப்பவர்கள். தங்கள் வாழ்நாள் முழுவதும் சம்பாதித்த மதிப்பையும், மரியாதையையும், குரங்கு தன் குட்டியை நெஞ்சோடு அணைத்துக் கொள்வதுபோல், உயிருக் குயிராய் பற்றிக் கொண்டிருப்பார்கள். புரிந்ததா! நீ இந்த சுழலிலெல்லாம் சிக்கிக் கொள்ளாதே. நீ இளைஞன். கட்டிளம்காளை. எதற்காக, யாரிடமும் பயம்? நானிருக்கிறேன் உனக்குப் பின்னால், உனக்கு எதிராக யார் என்ன செய்கிறார்கள்? பார்க்கலாம். துணிவு வேண்டும். தைரியம் வேண்டும். அவ்வளவுதான். துணிவின் முன்னே உலகம் தலைகுனிந்து விடும்."

"சரி! நீங்கள் எப்பொழுது வருவீர்கள்? நீங்கள் வந்து அப்பா, அம்மாவிற்குக் கொஞ்சம் எடுத்துச் சொல்லுங்கள். அவர்கள் அவசரப்படுத்துகிறார்கள்."

"இன்னமும் நாலைந்து நாளில் வருகிறேன். அறுவடை முடிய வேண்டும். நான் எல்லாம் பார்த்துக் கொள்கிறேன். நீ உன் அண்ணிக்கு எடுத்துச் சொல்லிவை. வா! உனக்கு வயலைக் காட்டுகிறேன். அங்கேயே கங்கையில் மூழ்கிக் குளித்துவிட்டு வரலாம்."

# 13

எத்தனையோ பேர் வந்து கேட்டுவிட்டு நிராசையுடன் திரும்பிச் சென்றனர். ஒருநாள் அண்ணி பூசை அறையில் வழிபாட்டில் தன்னை மறந்திருந்த சமயம். கோபியை அவன் அம்மா கூப்பிட்டு அவன் அப்பாவின் முன்னே கொண்டு போய் நிறுத்தினாள். அப்பாவின் முகம் மிகத் தீவிரமானதாகக் கடுமையுடனிருந்தது. கோபிக்கு என்ன விஷயம் என்பது தெரியவில்லை.

அப்பா அவனைத் தன்னருகில் அழைத்து– "கோபி! உன்னுடைய, அம்மாவினுடைய நிலைமையைப் பார்த்துக் கொண்டிருக்கிறாய் அல்லவா?" என்று கேட்டார்.

மனதில் ஏதோவொரு ஐயத்துடன் கோபி தலையை ஆட்டினான்.

"கோபி! இனி எங்களைப் பற்றி நிச்சயம் இல்லை. இன்று எப்படியோ கழிந்து விட்டது. நாளை எப்படியோ என்று நினைத்துக் கொள். எங்கள் மனத்தில் எத்தனை எத்தனையோ ஆசைகள் இருந்தன. அதையெல்லாம் இன்று நினைத்தால் இதயம் வெடித்து விடும் போலிருக்கிறது. ஹூம்! கடவுளின் விருப்பம் அது. அப்படி நடந்து விட்டது. ஆனால் இப்பொழுது நீ என்ன நினைக்கிறாய்? வீடு வாசல் யாவற்றையும் இப்படிப் பாழ்பட்டுப் போன நிலையிலேயே விட்டுவிட்டு நாங்கள்—"– பேசப் பேச, பொங்கி வந்த வேதனையின் ஆவேசத்தில் அவருக்குத் தொண்டை அடைத்துக் கொண்டது.

அம்மா விம்மியவாறே முந்தாணியினால் முகத்தை மூடிக் கொண்டு வேறு புறம் திரும்பிக் கொண்டாள்.

துன்புற்றிருந்த கோபியின் உள்ளத்துக் காயங்களின் தையல்களை யாரோ சற்றும் இரக்கமின்றி படபடவென அறுத்தெறிந்து விட்டது போலிருந்தது. தாள முடியாத வலியினால் அவனது ஆன்மா ஓலமிட்டது. தன்னை மேலும் கட்டுப்படுத்திக் கொள்ள இயலாதவனாய் அவ்

விடம் விட்டகன்றான்.

அவனது அப்பா தொண்டை அடைக்க, குரல் உடைய "நாங்கள் உயிருடன் இருக்கும்பொழுதே, நீ குடியும் குடித்தனமுமாய் ஆகிவிட்டால், நாங்கள் நிம்மதியாகவா வது—" என்றார்.

கோபியினால் மேலே கேட்டுக் கொண்டிருக்க இயல வில்லை. ஐயோ! அவனை ஏன் ஒருவரும் புரிந்து கொள்ள மாட்டேன் என்கிறீர்கள்? ஒருவருக்குத் தன் பெண்ணின் கல்யாணத்தைப் பற்றிய கவலையென்றால், இன்னொரு வருக்கு தங்கள் குலத்தின் பெயர் விளங்க வேண்டுமென்ற கவலை. பாழாகிவிட்ட குடும்ப வாழ்க்கை மீண்டும் நல்லபடியாக அமைய வேண்டுமென்று அம்மா, அப்பா விற்குக் கவலை. ஆனால் காயம்பட்டு ரணமாகிவிட்ட அவனது இதயத்தைப் பற்றி ஏன் யாருக்குமே கவலை யில்லை?

இதையெல்லாம் நினைத்து நினைத்து அவன் பொருமி னான்; ஆத்திரப்பட்டான்; ஆத்திரப்பட்டு, பொருமியவாறே மீண்டும் மீண்டும் யோசித்தான். கடைசியில் அவன் ஒரு முடிவுக்கு வந்தான். மிகுந்த உறுதியுடன் உலகத்தின்பால், சமுதாயத்தின்பால் கண்களை மூடிக் கொண்டு, உணர்ச்சி வசப்பட்ட நிலையில், ஒரு முடிவிற்கு வந்தான். அதாவது அவன் குடியும் குடித்தனமுமாய் இருப்பான். இது நிச்சயம். ஆனால் இதன் மூலம் அவனது இதயத்தில் பட்டிருக்கும் காயங்களுக்கு இதமான மருந்தும் தடவப்படும். அவனது விதவை அண்ணியின் வெந்து தணிந்து கொண்டிருக்கும் வாழ்க்கையின் மீதும் குளிர்ந்த நீர் தெளிக்கப்படும்.

மறுநாள் மாலை அவன் அம்மா கட்டிலின் கால்மாட்டில் அமர்ந்து கணவனின் கால்களைப் பிடித்து விட்டுக் கொண்டிருக்கும் போது, கோபி பூசை அறையை நோக்கி, திக், திக்கென்று நெஞ்சு அடித்துக் கொள்ள மெதுவாகச் சென்று அண்ணியின் பின்னால் நின்றான். அண்ணி பூசையிலிருந்தாள். இராமாயணப் பாராயணம் நடந்து கொண்டிருந்தது. 'சதியானவள் தன் உடலை அக்கினிக்கு

அர்ப்பணித்தாள்'' அண்ணி இந்த வரியை மீண்டும் மீண்டும் தழுதழுக்கும் குரலில் கூறிக் கொண்டே இருந்தாள். விழிகளிலிருந்து மள, மளவென்று கண்ணீர்த் துளிகள் உதிர்ந்து கொண்டிருந்தன.

கோபியின் இதயமும் கருணையினால் நிரம்பியது. அவன் விழிகளிலிருந்தும் கண்ணீர் தாரையாகப் பெருகியது.

கடைசியில் தலைப்பினால் கண்களைத் துடைத்துக் கொண்டு, அண்ணி பூசையை முடித்து பகவானின் சரணங்களில் நமஸ்கரித்தாள். பகவானின் சரணாமிருதத்தைப் பருகிவிட்டு எழுந்தவள் தன் எதிரே- கோபி விசித்திரமான ஒரு பாவத்தில் நிற்பதைக் கண்டாள். வியப்பால் விரிந்த அவள் விழிகள் மறுகணம் தாழ்ந்து விட்டன. சிறையிலிருந்து வீடு திரும்பிய பின் கோபி தன் அண்ணியைத் தனிமையில் சந்திப்பது இருக்கட்டும், ஒருமுறை அவளது பார்வையைக் கூடத் சந்திக்க இயலவில்லை. மிரண்ட மான் போல் அவனை ஒருமுறை ஏறெடுத்துப் பார்த்தவள், அங்கிருந்து செல்ல முயன்றதும், தனது துணிவையெல்லாம் திரட்டிக் கொண்ட கோபி நடுங்கும் கரத்தினால் அவளது மணிக்கட்டைப் பிடித்துக் கொண்டான். அண்ணியின் வாயிலிருந்து சிறு கூச்சல் போல் 'மாமா' என்ற குரல் எழும்பியது.

கோபியின் முகம் சிவந்தது. ஆவேசத்தினால் தகிப்புற்றவனாய் நடுங்கும் குரலில் ''அண்ணி! இனியும் என்னால் இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருக்க முடியாது'' என்றான்.

அண்ணிக்குத் தன் மைத்துனனைப் பற்றி நன்கு தெரியும். அவனது அந்த ஒரு சொல், ஒரு செயல் மூலம் அவன் உள்ளத்திலிருப்பதையெல்லாம் அவள் உணர்ந்து கொண்டாள். வெறிச்சோடியிருந்த விழிகளின் இயலாமையின் மீது, மகிழ்ச்சியின் ஒரு லேசான கீற்று கணநேரம் பளிச்சிட்டு மறைந்து விட்டது. அழுகை நிறைந்த குரலில் ''எனது பாக்கியத்தில் இதுதான் எழுதியிருந்தது பாபூ'

என்றாள். பொங்கி எழுந்த அழுகையை அடக்க முயற்சித்தவளாய், உதடுகளை இறுகக் கடித்துக் கொண்டாள்.

"பாக்கியம், கீக்கியம் பற்றியெல்லாம் எனக்குத் தெரியாது அண்ணி, என்னுடைய துக்கம், உன்னுடைய துயரம் இரண்டு மட்டும்தான் தெரியும். நாமிருவருமாக இணைந்து இந்தத் துயரமிகுந்த வாழ்க்கையை ஒன்றாகக் கழிக்க முடியாதா? பாழாகிவிட்ட இரு உள்ளங்கள் இணைவதால் புதியதொரு வாழ்க்கையை அமைத்துக் கொள்ள இயலாதா?" என்ற கோபி நீர் மல்கும் விழிகளுடன் விண்ணப்பித்தவாறே அண்ணியை நோக்கினான்.

அண்ணி நீண்டதொரு பெருமூச்செறிந்தாள். மறுகணம் அவள் முகத்தில், நம்பிக்கைக்கும், நிராசைக்கும் இடையே நடந்த போராட்டம், கருணை நிரம்பிய புன்னகையாக மலர்ந்து விசித்திரமாகக் காணப்பட்டது. "ஒருபொழுதும் இப்படி நடந்ததில்லை, பாபூ! அப்படியும் கூட......"

கோபி இடைமறித்தான்– "இப்படி நடந்ததேயில்லை. அதனால் இனியும் நடக்காது, இதை எல்லாம் நான் ஏற்கத் தயாராக இல்லை. அண்ணி! நான் தீர ஆலோசித்தாகி விட்டது. இதைத் தவிர எனக்கும், உனக்கும் வேறு வழியில்லை என்பதை மட்டும் நான் அறிவேன். உன்னை இந்த நிலையில் நிறுத்தி விட்டு, என் வாழ்க்கையில் நான் ஒருகணம் கூட நிம்மதியாக இருக்க முடியாது." என்றவன் பார்வையைத் தாழ்த்திக் கொண்டான்.

அவன் இதயத்தில் துடித்துக் கொண்டிருந்த சத்தியத்தின் குரலை அண்ணி புரிந்து கொள்ள இயலவில்லை என்பதில்லை. தன் மைத்துனனின் உள்ளார்ந்த அன்பிற்கு அவள் என்றுமே அடிமைப்பட்டவள். அவனை ஆதாரமாகப் பற்றிக் கொண்டுதான் இன்று கூட நடக்க இயலாதவொன்றைப் பற்றிய எண்ணத்தை, தேள் தன் வயிற்றில் குட்டிகளை வளர்ப்பது போல், நெஞ்சோடு அணைத்துக் கொண்டிருக்கிறாள். தேளின் குட்டிகள் அதன்

உயிரைப் பறித்து விடுகின்றன என்பதால் தேள் அதனைத் தன் நெஞ்சிலிருந்து உதறிவிடுவதில்லை.

தன்னுயிரும் இவ்வாறே பிரிந்து விடும் என்பது அண்ணிக்குத் தெரியும். இருந்தாலும் எது நடக்க முடியாது என்று நினைத்தாளோ அந்த எண்ணத்தைத் தன் மனத்திலிருந்து ஒரு கணம் கூட அவளால் அகற்றிவிட முடியவில்லையே? எங்கே முடிந்தது? இன்றைய இந்தச் சந்தர்ப்பம் அவள் எவ்வளவோ காலமாக எதிர்பார்த்துக் கொண்டிருந்ததுதான். அத்தகையதொரு சந்தர்ப்பத்தில் தானென்ன சொல்ல வேண்டும் என்பதைப் பற்றிக் கூட யோசித்து வைத்திருந்தாள். ஆனால் அந்த சந்தர்ப்பம் உண்மையிலேயே அவள் முன் வந்து நின்றபொழுது, சொல்ல நினைத்தது, மனதிலிருந்தது உதடுகள் வரை வரவேயில்லை. மாறாக தான் நினைத்திருப்பதை வெளியிட்டால் தன் மைத்துனனின் முன் தான் சிறுமைப்பட்டு சிறுத்து விடுவோமோ என்றும் கூடத் தோன்றியது. இந்நிலையில் தன் மனத்திலுள்ளதை அப்படியே அடக்கி விட வேண்டும் என்றும் தோன்றியது. அவளது இக்கட்டான செயலற்ற நிலைமை அவளது மைத்துனனுக்குத் தெரிந்ததுதான். அண்ணி தன்னுடைய அன்பான மைத்துனரின் இதயப்பூர்வமான அன்பு, உண்மையான அனுதாபத்தின் பாரத்தைத் தாங்குவதற்கு இன்று எத்தனை இயலாதவளாய் இருக்கிறாள் என்பதும் அவளுக்குத் தெரியும். அவனாக முன் வந்து ஏதாவது செய்தால்தான் இனி முடியும் என்பதும் அவள் அறிந்ததுதான். தன் மைத்துனனின் வேண்டுகோளை நிராகரிக்கத் தனக்கும் அவனுக்குமிடையே இத்தனை காலமாக இருந்து வந்த அன்புப் பிணைப்பை முறித்துவிடுவதென்பது அண்ணியால் எப்படி முடியும்? இதையெல்லாம் அறிந்திருந்தும் கூட அவள் வாயால் ஏதும் கூறும்படிச் செய்து அவன் ஏன் அவளைச் சிறுமைப்படுத்த விரும்புகிறான்?

குழப்பத்திலாழ்ந்திருந்த அண்ணி முடிவில் "நம்முடைய

சமூகம், நம் உறவினர், தாயாதிகள், நம் அப்பா, அம்மா, இதை ஒருக்காலும் நடக்கவிடமாட்டார்கள்" என்றாள்.

"அண்ணி! இதையெல்லாம் என்னிடம் விட்டு விடு. எனக்குத் தெரிய வேண்டியதெல்லாம் இந்த ஒன்றே ஒன்றுதான். எந்த வழியில் செல்வதென்று நான் முடிவெடுத்திருக்கிறேனோ, அவ்வழியில் நீயும் என்னோடு வர இயலுமல்லவா?" என்ற கோபி அவளது மணிக்கட்டைத் தன் கரத்தினால் அழுத்தியவாறு, தன் இதயத்தையே விழிகளில் தாங்கியவனாய், அவளது பதிலில்தான் தனது வாழ்வோ, சாவோ சார்ந்திருக்கிறது என்பது போல் அவளை நோக்கினான்.

அண்ணியின் உதடுகள் நடுங்கின. மனத்திலிருந்தது உதடு வரை வந்து பொங்கியது. ஆனாலும் கூட, எத்தனையோ சிரமப்பட்டு துணிவையெல்லாம் திரட்டினாலும் அவள் வாயிலிருந்து எதுவும் வெளிவர மறுத்தது. அவள் உள்ளத்தில் நிகழ்ந்த பெரும் போராட்டம் நாக்கு நுனி வரை வந்து விட்ட வார்த்தைகளைக் கடகடவென்று விழுங்கி விட்டது. புயல் வேகத்துடன் துடித்த இதயத்தைக் கட்டுப்படுத்த முயன்றவளாய் அவள் தனது சிவந்த முகத்தைத் தாழ்த்திக் கொண்டாள்.

கோபிக்குத் தனக்குத் தேவையான பதில் கிடைத்து விட்டது போலிருந்தது. அவளை அப்படியே இழுத்து மார்புறத் தழுவிக் கொள்ள வேண்டும் போலிருந்தது. அவன் கரங்கள் துடித்தன. ஆயினும், மறுகணம் தன்னைக் கட்டுப் படுத்திக் கொள்ள வேண்டி, அவளது மணிக்கட்டின் மீதிருந்த தனது பிடியைத் தளர்த்தி விட்டு அவன் சடாரென வெளியேறினான்.

அவன் உள்ளத்திலிருந்து பீறிட்ட ஆவேசத்தை வெளிப் படுத்த கடவுளின் திருவடிகளிலே வீழ்ந்து அழலானான்– "கடவுளே! உண்மையாகவே– இப்படி—– கடவுளே!"

* * *

கோபி தன் அம்மா, அப்பாவின் முன்னே போய் நின்றான்.

"கதிர் அடிப்பது இன்னமும் எத்தனை பாக்கி இருக்கிறது கோபி" என அவனை நோக்கி வினவினார் அவன் அப்பா.

"இன்றோடு முடிந்து விட்டது அப்பா"

"நல்லது! போய், கை கால் கழுவிக் கொள். அண்ணி, ரொட்டி செய்திருப்பாள், சூடாகச் சாப்பிடு. நாள் முழுவதும் ஓடியாடிக் களைத்துப் போயிருப்பாய்" என்றவர் மனை வியை நோக்கி, "ஊம்— அறுவடையாகிவிட்ட தானியம் வீட்டிற்கு வந்தால்தான் விவசாயி, வருடம் முழுவதும் பாடுபட்டதற்குப் பலன் கிடைக்கிறது. அன்றுதான் அவன் நிம்மதியாக மூச்சு விடுகிறான்" என்றார்.

"அப்பா" என்றான் கோபி.

அவர் திரும்பிப் பார்த்தார், "என்ன விஷயம்? ஏதாவது சொல்ல விரும்புகிறாயா?" என்றார்.

'ஆமாம்'

"சொல்லு"

"அப்பா— இனி நான் குடும்பஸ்தனாக விரும்புகிறேன்"

"இது சந்தோஷமான செய்தியப்பா! நீ வந்ததிலிருந்து, நீ கூறப்போகும் இச் செய்திக்காகத்தான் காத்திருந்தோம். நாளைக்கே முடித்து விடலாம். நிச்சயம் செய்வதற்கு எத்தனை நேரமாகப் போகிறது. எத்தனை பேர் வந்து போனார்கள்! அடடே! மட்டூரு இங்கு வந்து மாதக் கணக்காகிவிட்டதே! வரவேயில்லை. கோபியின் திரு மணத்தை நான் முடித்து வைக்கிறேன் என்று கூறிவிட்டுப் போனவன்தான். மறந்துவிட்டான் போலிருக்கிறது. அறுவடை காலத்தில் எந்த விவசாயிக்கு வேறெதைப் பற்றிய கவலை இருக்கும்? இனி எல்லாம் சரியாகி விடும், கோபி! நீ கவலைப்பட வேண்டிய அவசியமேயில்லை." என்றவர், மனைவியை நோக்கித் திரும்பியவர், மகிழ்ச்சி யில் தன்னையே மறந்தவராய்— "வயலில் அறுவடையாகி தானியமெல்லாம் வீட்டிற்கு வந்து விட்டால் விவசாயியின்

கவனம் வயலிலிருந்து விலகி வீட்டிற்கு வந்து விடுகிறது— இல்லையா?'' என்றார்.

அம்மா சந்தோஷத்தில் பூரித்தவளாய் தன் முந்தாணியினால் மகனின் முகத்தில் படிந்திருந்த தூசியைத் துடைத்தவாறே– ''அப்படித்தான் வைத்துக் கொள்ளுங்களேன். வீடு நிறைந்தால், வயிறு நிறைகிறது. வயிறு நிறைந்தால்—'' என்றவள் மேலே கூறாமல் கெக்கெக்கென்று சிரிக்க ஆரம்பித்தாள்.

''நீ கவலைப்படாதேயப்பா! எல்லாம் சரியாகிவிடும். என் குடும்பத்தில் சம்பந்தம் செய்ய வேண்டுமென்று ஆசைப் படாதவர் யார்? இன்னமும் ஒன்றும் கெட்டு விடவில்லை. நீ சரியாக இருந்துவிட்டால் நடந்துபோன விஷயமெல்லாம் சரியாகிவிடும். அதைப் பார்க்கத்தான் நான் இன்னமும் உயிரோடிருக்கிறேன்.''

''வேறென்ன? என் கண்மணி, சௌக்கியமாய் சந்தோஷமாய் இருக்க வேண்டும். பிறகென்ன வீடு மள, மளவென்று நிறைந்து விடாதா? கடவுளே!'' கிழவி இரண்டு கரங்களாலும் நெற்றியைத் தொட்டுக் கொண்டாள்.

''ஆனால் அப்பா—'' தொண்டைவரை, எச்சிலைக் கூட்டி முழுங்கியவாறே ''நான்– நான்– எனக்கு திருமணம் செய்து கொள்ள வேறு பெண்ணைத் தேட வேண்டியதில்லை. நான் நிச்சயம் செய்து கொண்டு விட்டேன். அண்ணியையே—''

''என்னது?'' கோபத்தால் வெடவெடக்க அப்பா கத்தினார். அவர் கண்களே வெளியே வந்து விழும் போலிருந்தது. அம்மா அப்படியே கல்லாக உறைந்து போனாள். அவள் முகமும், கண்களும் அளவிற்கு மீறி விரிந்து போயின.

''நான் உயிருடன் இருக்கும் வரை நீ மீண்டும் இந்த வார்த்தைகளைக் கூறினால்— கூறினால்— இந்தா— கேட்டுக் கொள்— அவள் என் வீட்டில் தேவியாக இருக்க முடியும். ஆனால் மருமகளாக, மாணிக்கின் மனைவியாகத்தான் இருப்பாள். நீ வந்து— ஐயோ!'' கோபத்தினால்

இடுப்பிற்கு மேற்பட்ட உடல் உயர எழும்பி நடுங்கியவாறே வெட்டுண்ட மரம்போல் தடாலென்று விழுந்ததும் இரு முழந்தாள்களையும் கைகளினால் பிடித்தவாறு அவர் உரக்கவே முனகலானார். கனல் பறக்கும் விழிகளால் கோபியை நோக்கியவாறு கோபத்தால் உடல் பதற அவரது முழந்தாள்களைத் தடவிக் கொடுக்க வீணான முயற்சி செய்யலானாள்.

கிழவரின் கூச்சலைக் கேட்டு பலர் ஓடி வந்தனர். அண்ணி கதவருகில் வந்து நின்றவள் உதட்டைக் கடித்துக் கொண்டாள்.

கோபி தலையைக் கையால் பிடித்துக் கொண்டு அப்படியே உட்கார்ந்து விட்டான்.

* * *

மகனும், விதவையாகிவிட்ட மருமகளும் தாய், தந்தை இருவரின் கண்ணின் கருமணிகளாக விளங்குகின்றனர் என்று உலகம் நினைத்தது. கிழவர் ஊராரிடம் ''என் மருமகள் இந்த வீட்டின் லட்சுமி. விதவையாகி விட்டதாலென்ன? என் மீது உயிராய் இருக்கிறாள். அவள் செய்யும் பணிவிடைகளுக்கு இந்த ஜன்மத்தில் கைமாறு என்ன செய்ய முடியும் என்னால்? போன ஜன்மத்தில் அவள் எனக்கு மகளாக இருந்திருக்கிறாள். அடுத்த ஜன்மத்தில் நான் இவளுக்கு மகளாகப் பிறந்து, சேவை செய்தால்தான் நன்றிக் கடனிலிருந்து மீட்சி பெறுவேன்'' என்பார்.

அம்மாவோ ''என் கண்ணின் கருமணிபோல் வைத்துக் கொள்வேன். எனக்கு இவள் என் மாணிக்தான். என் மூத்த மருமகள் ஒருநாள் இந்த வீட்டின் எஜமானியாகி விடுவாள். அவளைத் துளசி பத்திரம் போல் எல்லோரும் சிரத்தில் வைத்துக் கொள்வார்கள்.''

யாரேனும், கோபியிடம் உன் பெற்றோருக்கு நீ எப்படி? என்று கேட்டால், அவன் சொல்லுவான்– ''அவர்களின்

கண்களின் ஜ்வாலை அவனை அங்கேயே ஏன் சுட்டெரித்து பஸ்மாக்கி விடவில்லை? இன்னும் மேலே சென்று அண்ணியை ஏன் எரித்து விடவில்லை? ஏன் மேலும் பரவி அந்த வீட்டையே சுட்டெரிக்கவில்லை? என்று கேட்பான். "எல்லாத் தொல்லைகளும் ஒரு வழியாய் தீர்ந்து போயிருக்குமே? அதன் பின் கிழவனும், கிழவியுமாய் உட்கார்ந்து மயான பூமியைக் காத்துக் கொண்டிருக்கலாம்."

கோபியின் உடல், உள்ளம் எல்லாம் எரிந்து கொண்டிருந்தது. அவர்களை அப்படியே கசக்கி, மடக்கிப் போட்டு விட்டு அண்ணியின் கையைப் பிடித்துக் கொண்டு வீட்டிலிருந்து வெளியேறி விடலாமா என்றிருந்தது. உட்காரும் அறையிலிருந்து வீட்டிற்குள் செல்ல பலமுறை காலெடுத்து வைத்தவன் பின்வாங்கிக் கொண்டான். பற்களைக் கடித்தவாறு பலமுறை, பலவாறு யோசித்தான். ஆனால் பெற்றவர்களின் நெஞ்சை மிதித்துக் கொண்டு போய் விடும் துணிவு அவனிடம் எங்கே இருந்தது? தான் அப்படிச் செய்ய நேரிடும் என அவன் எப்பொழுதாவது நினைத்ததுண்டா? பெற்றவர்களின் ஒரே ஒரு அருமை மகன் என்ற முறையில்தான் வாயைத் திறப்போம் என்றல்லவா நினைத்திருந்தான்.

கையாலாகாத கோபத்துடன் வெறிபிடித்தவன் போல் அவன் வெளியேறினான். இல்லாவிடில் உண்மை யிலேயே தான் ஏதாவது செய்துவிடுவோமோ என்று அவனுக்குப் பயமாக இருந்தது.

இதுவரை அவன் கொண்டிருந்த நம்பிக்கை சிதறி விட்டது. இத்தனை நாட்களாகத் தன் மனத்துடன் போராடி, அவன் செய்து கொண்டிருந்த சமரசம் வீணாகிவிட்டது. அவன் அப்பா கூறிய அந்தச் சொல் அவன் இதுவரை கட்டியிருந்த மாளிகையை எட்டி உதைத்து வீழ்த்தி விட்டது. புதியதொரு பாதையில் சென்ற அவன் தனது லட்சியத் தைக் கிட்டத்தட்ட நெருங்கிவிட்ட நேரத்தில் அவன் கால் கள் முறிக்கப்பட்டுவிட்டன. இன்று அவன் துயரமுற்றதை

விட பெற்றோரின் மீது கடுங்கோபம் அடைந்திருந்தான். உளுத்துப்போன சம்பிரதாயம், சமுதாயத்தின் அர்த்தமற்ற வழக்கம், அழுகிப் போன நியமங்கள், பொய்மையான தொரு குலப்பெருமை, மரியாதையைப் போற்றும் அகம் பாவம் கொண்ட பெற்றவர்கள், தங்களது ரத்த வெறி கொண்ட தாடைகளினிடையே, மென்மலர் போன்ற வளை, பசுவைப் போல் சாதுவான, நோயாளிபோல் துர்பலமான, தன்னைத் தற்காத்துக் கொள்ள இயலாத நிராயுதபாணியை, கைதியைப் போன்ற, ஒற்றை நட்சத்திரம் போன்ற இளம் பெண்ணை அழுத்தி, மென்று தின்றுவிட விரும்புகின்றனர். ஓ— இந்தக் கண்களால் இதயமற்ற, இரக்கமற்ற இக்கொடிய, குரூரமான காட்சியை எவ்வாறு அவனால் பார்த்துக் கொண்டிருக்க முடியும்?

வெறிகொண்டவன் போல் ஆத்திரமுற்றிருந்த கோபி வயல்களிடையேயும், வரப்புகளிடையேயும் கனத்த மனத் துடன், கொதிப்பேறிய சிந்தனையுடன் இரவு நெடுநேரம் வரை சுற்றிக் கொண்டிருந்தான். இந்தச் சமயத்தில் அவனுக்கு ஆறுதலாக, மடியில் தலை வைத்து அவன் சற்றே சாந்தியை உணரும் படியாக, அவன் முன்னே தோன்றியவன் மட்டுரூ ஒரே ஒருவன்தான். அவனால் மட்டும்தான் ஏதாவது செய்ய முடியலாம். அண்ணி யிடமிருந்து அவனுக்கு மனத்தளவில் ஆறுதல் கிட்டி யிருந்தது. இக்கணமே மட்டுரூவிடம் ஓடிப்போய் விடலாமா என்று தோன்றியது. ஆனால் வீட்டில், அண்ணியின் நிலை என்னவாகியிருக்குமோ, என்ற நினைப்பு வந்ததும் அவன் வீடு திரும்பினான்.

வயல்களிலிருந்து அவன் வீட்டை நோக்கி நடந்தான். நாற்புறமும் அமைதி நிலவியது. இருண்ட இரவு, யாவற்றின் மீதும், கவிந்து கொண்டிருந்தது.

திருடனைப் போல் அவன் மெல்ல நுழைந்துமுற்றத்தில் கிடந்த கட்டிலை எடுக்க நினைத்தபோது, அம்மாவின் கடுமையான குரலைக் கேட்டுத் திடுக்கிட்டு வாசற் படியி லேயே நின்று விட்டான்.

அம்மா அடிபட்ட புலியைப் போல் கர்ஜித்துக் கொண்டிருந்தாள் "அடியே! அதிர்ஷ்டக்கட்டையே! மைத்துனனை மயக்க உனக்கு வெட்கமாக இல்லை. மருமகள் சதி சாவித்திரி என்றல்லவா நினைத்துக் கொண்டிருந்தேன். என்னவெல்லாம் வேஷம் போட்டாயடி நீ! பூசை, புனஸ்காரம்! தியானம்! பக்தி! சேவை, சிச்சுருஷை! இந்த ஆஷாடபூதித் தனத்தின் மறைவில், என் முகத்தில் கரியைப் பூச ஏற்பாடு நடக்கிறதென்று எனக்கென்ன தெரியும்? கேடு கெட்டவளே! இந்தப் பாவமெல்லாம் செய்ய உனக்கு வெட்கமாக இல்லை? இதையெல்லாம் செய்ய வேண்டுமென்றிருந்தால் எந்தப் பாவியோடாவது ஓடி விடுவது தானே! நீதான் முகத்தில் கரியைப் பூசிக்கொண்டு மானம் கெட்டுப் போவாய்! என் பிள்ளையாவது உனது மாய வலையிலிருந்து தப்பி இருப்பானே! சம்பந்தம் பேச எத்தனை பேர்கள் வந்தார்கள் வீடு தேடி! அவன் யார் கூறுவதற்கும் காது கொடுத்தே கேட்கவில்லையே.... என்ன விஷயம் என்றே எங்களுக்குத் தெரியவில்லை. உள்ளூர நீ நாடகம் ஆடிக் கொண்டிருக்கிறாய் என்று எங்களுக்கு என்ன தெரியும்? கிழவர் முடமாகிக் கிடக்கிறதாலே நீ பிழைத்தாய்! இல்லாவிட்டால் இந்நேரம் உன்னைக் கண்ட துண்டமாய் வெட்டி எறிந்திருப்பார்! நீ செய்ததன் பலனை நீ அனுபவித்திருப்பாய்!..... குலத்தைக் கெடுக்க வந்த கோடாரிக் காம்பே! எங்கேயாவது சென்று மூழ்கிச் சாவது தானே!"

கோபியினால் இதற்கு மேல் கேட்டுக் கொண்டிருக்க இயலவில்லை. மண்டையே வெடித்து விடும் போலிருந்தது. இனியும் ஒருகணம் அங்கு நின்றால் பயங்கரமான செயலைச் செய்து விடுவோம், அதன் பலன் பின்னும் பயங்கரமானதாக இருக்கும் என அவனுக்குத் தோன்றியது. தட்டுத் தடுமாறிய வண்ணம் வெளியே ஓடி, வீட்டினருகே இருந்த கிணற்று மேடையில் இரு கரங்களாலும் தலையை அழுத்திப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்து விட்டான்.

அவன் இதயம் ஓவென்று அலறியது.

*    *    *

அண்ணி இன்று வரை இத்தகைய கடும் சொற்களைக் கேட்டதில்லை. வாழ்க்கையின் கடந்த காலம், அந்த நாட்கள் இப்பொழுது, இறந்தவனின் சடலத்தின் முன் ஆடுவது போல் நர்த்தனமாடின. தன் அம்மா, அப்பா, அண்ணன், தங்கையின் அன்பும், பரிவும், மாணிக்கின் காதலும், மாமியார், மாமனாரின், மைத்துனனின் அன்பும் நினைவில் எழுந்தன. விதவையான பிறகு சற்றே சிடுசிடுப்புள்ளவளாக மாறி அவள் தன் மாமியாருடன் மனத்தாங்கல் கொண்டதுண்டு. ஆனால் இம்மாதிரியான கடும் சொற்களை யாரும் கூறும் சந்தர்ப்பத்தை அவள் யாருக்கும் எப்பொழுதும் அளித்ததில்லை. இன்று கூட இதில் அவளது தவறு எதுவுமில்லையே! இருந்தாலும் அவள் மாமியார், சற்றும் முன்பின் யோசியாது, உண்மை யாதெனத் தெரியாது, வசைமாரி பொழிந்ததும் அவளது மன நிலை எவ்வாறிருந்தது என்பதை எளிதாகவே புரிந்து கொள்ள முடியும். அப்படியிருந்ந அவளது உள்ளம் பெரும் ஓலமிட்டது. அலறியது. திடீரென, காரணமில்லாமல் வலுவாகத் தாக்கப்பட்டதில் அவள் அப்படியே செயலற்றுப் போய்விட்டாள். அவளால் எதுவும் பேசவும் முடியவில்லை. அழவோ, ஏன், பெருமூச்செறியவோ கூட இயலவில்லை. மண்டைக்குள் என்னவோ செய்தது. அவளது சுயநினைவின் மீது தாங்க முடியாத வேதனை மௌனமான போதைபோல் விரவி நின்றது. உடலின் ஒவ்வொரு அங்கமும் உயிரற்று குமுறிக் கொண்டிருப்பதாய் தோன்றியது. சுய நினைவும், நினைவற்ற மூர்ச்சை நிலையும் இரண்டறக் கலந்துவிட்ட நிலையில் அவள் சிலைபோல் அசைவற்று தன் உணர்வற்று, செயலற்று அமர்ந்திருந்தாள். மாமியார் படபடவெனப் பொரிந்து கொண்டேயிருந்தாள். ஓயவில்லை அவள். இப்பொழுது

அண்ணியின் காதுகளில் எதுவுமே விழவில்லை. அவளுடைய மண்டையிலும், நெஞ்சிலும் அடி ஆழத்திலும் "போய் எங்கேயாவது, மூழ்கிச் சாவதுதானே!" என்ற வார்த்தைகள் மட்டும்தான் எதிரொலித்துக் கொண்டிருந்தன.

இதற்கு முன்கூட உயிர் துறந்துவிட வேண்டும் என்ற எண்ணம் அவள் மனத்தில் எழுந்ததுண்டு. ஆனால் ஒரு நம்பிக்கை, ஒரு ஆதாரம் அவளது கரத்தைப் பற்றித் தடுத்துவிட்டது. அந்நம்பிக்கை நடக்க இயலாத ஒன்றுதான் என்றபோதும் நம்பிக்கை என்பது நம்பிக்கைதானே! ஆனால் இன்று? அந்நம்பிக்கையும் அறுந்து விட்டது. எந்த ஒற்றை நட்சத்திரத்தின் மீது பார்வையைப் பதித்த வண்ணம் அவள் இன்று வரை உயிரோடிருந்தாளோ, அது உடைந்து வீழ்ந்துவிட்டது. இப்பொழுது வெறும் அந்தகாரம் தான். கனத்த இருள், பயங்கரமான, முடிவற்ற இருள் மட்டும்தான்.

படபடத்தவாறே மாமியார் கட்டிலில் படுத்தவள், ஏதேதோ முனகியவளாய், களைத்துச் சோர்ந்து போய் உறங்கி விட்டாள். சாப்பிடவோ, கிழவருக்கு மருந்து கொடுக்கவோ, மகன் எங்கே போனான் என்று தேடவோ, ஏன், வீட்டின் வாசற்கதவை மூடவோ கூட தனது ஆத்திரத்திலும், கோபத்திலும் அவளுக்கு மறந்து போயிருந்தது.

இருள் சூழ்ந்த இரவு கணத்திற்குக் கணம் கனத்துக் கொண்டிருந்தது. வீட்டில் ஆழ்ந்த நிசப்தம் நிலவியது. அந்த நிசப்தமான சூழல் அச்சுறுத்தியது. சந்தடியற்ற சூழலுக்கும் உறக்கம் வந்து விட்டதுபோலும். மூச்சே கூட நின்றுவிட்டது போலிருந்தது.

அந்தகாரத்தின் அதல பாதாளத்தில் மூழ்கிக் கிடந்த அண்ணியின் உணர்வில் லேசாக பொறிதட்டினாற் போலிருந்தது; கிறக்கத்தில் அவள் பொம்மைபோல் எழுந்து நின்றாள். எந்த வார்த்தையும், எந்த எண்ணமும் நினைவிலில்லை. நினைவிழந்திருந்த கால்கள் இயங்கின. இதோ,

இதுதான் இந்த வீட்டின் முன் வாசல்படி, இந்த வீட்டிற்குள் காலடி எடுத்து வைத்தபின் அண்ணி இதற்கு வெளியே கால் வைக்கவில்லை. இதைத் தாண்டியதில்லை. ஆனால் இன்று அவள் 'அந்த அவள்' இல்லை. இன்று அவள் ஒரு செத்த பிணம். அது படிதாண்டி வெளியே போய்க் கொண்டிருக்கிறது. தான் என்ன செய்து கொணடிருக் கிறோம் என்பது கூட இக்கணத்தில் அவளுக்குத் தெரியாது. உணர்வற்ற ஜடமாகிவிட்டிருந்த நிலையில் ஒரு உணர்வு அவ்வளை இட்டுச் செல்கிறது.

இது கிணற்று மேடையின் படிகள், இரண்டடிகள்தான் இன்னும். பிறகு.... பிறகு?

"யாரது?" விழிகள் விரிய இன்னும் விழித்துக் கொண்டு கிடந்த கோபி குரலெழுப்பினான்.

அந்நிலையிலும் உணர்வு சட்டென விழித்துக் கொண் டது. கிணற்றை நோக்கி ஓடியவளைக் கோபி சட்டென்று பிடித்துக் கொண்டான்.

"யாரது? அண்ணி! நீயா?"

அவள் அப்படியே உணர்விழந்தவளாய் அவன் கரங் களில் சரிந்தாள்.

இதுதான் நடக்கவிருந்தது. இதுதான் நடக்கும்.... கோபி யின் கோழைத்தனத்தின் முடிவு இதுவாகத்தானே இருக்க முடியும்?

இனி???

"யோசிக்க அவகாசமில்லை. சீக்கிரம், சீக்கிரம்! முட் டாளே! யோசித்துக் கொண்டு நிற்காதே!"

கோபி அவளை வாரி எடுத்துக் கொண்டு ஓடத் துவங்கினான். காரிருள். வழியே புலப்படவில்லை. ஆயினும் கோபி, ஓடிக் கொண்டிருந்தான். பாதையைப் பார்க்க, புரிந்து கொள்ள இது சமயம் அல்ல. இச்சமயத்தில் அண்ணியை அந்தச் சண்டாளர்களிடமிருந்து தூரத்தில், வெகு தூரத்திற்குக் கொண்டு போய் விட வேண்டும். இது ஒன்று மட்டும் அவனுக்குத் தெரியும். இது ஒன்று மட்டும்தான்.

# 14

பொழுது விடிவதற்கு முன்னரே கோபி திரும்பி வந்து கிணற்றடி மேடையில் படுத்துக் கொண்டு விட்டான். அவன் தன்னை ஒருவ்ாறு உறுதிப் படுத்திக் கொள்ள முயற்சித்துக் கொண்டிருந்த சமயம் அம்மாவின் கூக்குரல் காதில் வந்து மோதியது. "ஐயோ! கடவுளே! மருமகளைக் காணோமே!—"

கோபி கண்களை மூடிக் கொண்டு, ஆழ்ந்த நித்திரையில் இருப்பதுபோல் கிடந்தான்.

மெல்ல மெல்ல அவ்வட்டாரத்திலிருந்த ஆண்களும், பெண்களும் அவன் வீட்டு வாசலில் வந்து கூடிவிட்டனர். கோபி எழுப்பப்பட்டான். கொலை செய்து விட்டவன் போல் அவன் மௌனம் சாதித்தான். எல்லோரும் மிகவும் யோசித்துப் பார்த்தபின் கூட்டத்தினரைக் கலைந்து போகும்படிச் சொன்னார்கள். "எல்லோரும் வாயை மூடிக் கொண்டிருங்கள், வேறு யாருக்கும் செய்தி எட்டவேண்டாம். கெட்டபெயர் ஏற்படுவது எப்படியும் ஏற்படத்தான் போகிறது. அதைத் தவிர வேறு வம்புவழக்கு வேறு வந்து விடப் போகிறது."

ஆனால் இத்தகைய சம்பவங்களை மறைப்பதால், அவை மறைந்துவிடுகிறதா என்ன? நிறையப் பேருக்கு இம் மாதிரியான செய்திகளைப் பரப்பிவிடுவதில் அலாதியான மகிழ்ச்சி ஏற்படுவதுண்டு. அரை மணிக்குள் போலீஸ் இன்ஸ்பெக்டர் வாசலுக்கு வந்துவிட்டார். அதுதான் விஷயம்.

இன்ஸ்பெக்டர் போயாகிவிட்டது. கோபி மட்டும் முன்னறையில் தனியே அமர்ந்தவனாய் யோசனையில் ஆழ்ந்திருந்தான். அம்மாவின் அழுகைக் குரலைக் கேட்டு அவன் கோபம் தலைக்கேறிக் கொண்டிருந்தது. அவள் ஏன்

அழுகிறாள் என்பது அவனுக்குப் புரியவில்லை. அவள் தானே அண்ணியை "எங்கேயாவது போய் மூழ்கிச் செத்துப் போ"– என்று கூறியவள். இப்பொழுது எதற்காக இந்த பாசாங்கு காட்டுகிறாள்? விருவிருவென்று உள்ளே போய் நறுக்கென்று நாலு வார்த்தை கேட்க வேண்டும், "உன் குடும்பக் கௌரவம் காப்பாற்றப்பட்டுவிட்டதல்லவா? சந்தோஷப்படு! உன் குல மரியாதையைப் பற்றித் தம்பட்டம் அடித்துக் கொள்" என்று சொல்ல வேண்டும் போலிருந்தது. அவன் தன் தந்தையிடம் கூட சண்டை போடத்தான் நினைத்தான். "இப்பொழுது மரியாதை அதிகமாகி விட்டதா? உங்கள் மனது குளிர்ந்து விட்டதா? கொலை காரர்களே! ஒரு பாவமும் அறியாத அந்த அப்பாவிப் பெண்ணைக் கொலை செய்த பாவம் வாழ்வு முழுவதும் உங்கள் தலையில்தான் விழும். உங்கள் உறவினர்களையும், தாயாதிகளையும் மாலையாக்கிக் கழுத்தில் அணிந்து கொள்ளுங்கள், பழக்கவழக்கம், ரீதி, நியதி என்று குறிப்பிட்டுக் கொண்டிருங்கள்" என்று கத்த வேண்டும் போலிருந்தது.

ஆனால் இரவு நடந்த சம்பவம் அவன் மூளையிலும் உள்ளத்திலும் பெரும் பாதிப்பை ஏற்படுத்தி இருந்ததால், அவனால் எழுந்திருக்க முடியவில்லை. யோசித்துப் பார்த்ததில் தன் அம்மா, அப்பாவை விடத் தான் எந்த விதத்திலும் குறைந்தவன் அல்ல. தானும் குற்றவாளிதான என்று தோன்றியது. இதில் அவர்களுடைய பங்கு எத்தனை இருந்ததோ, அத்தனை அவனுடையதும் இருந்ததே! அவனால் துணிச்சலுடன் அம்மா, அப்பாவை எதிர்க்க முடிந்திருந்தால், நாலுபேருக்கு முன், அண்ணியின் கரத்தைப் பற்றியிருந்தால் இவ்விதம் செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் அண்ணிக்கு ஏன் ஏற்பட்டிருக்கும்? இந்த எண்ணமே அவனை முற்றிலும் அழுத்திக் கொண் டிருந்ததால், அவன் வாய் மூடிக் கொண்டது; திறக்கவில்லை.

இன்றும் அதே எண்ணம்தான் மீண்டும் மீண்டும் அவன் உள்ளத்திலே எழுந்து கொண்டிருந்தது. அவர்களது சமு

தாயத்தில் விதவையாகிவிட்ட பெண் ஒரு கொள்ளிக் கட்டை. அக்கொள்ளிக் கட்டையால் கணவனுடைய சிதைக்கு ஒரு முறை தீயிட்ட பின் அவள் எரிந்து கொண்டே இருக்கிறாள். எரிந்து சாம்பலாகும் வரை அவள் எரிந்து கொண்டேதானிருக்கிறாள். அவள் சாம்பலாகிப் போகும் முன் அந்நெருப்பை அணைக்கும் அதிகாரம் எவருக்குமில்லை. அண்ணி எரிந்து சாம்பலாகும் முன் அவளைக் காப்பாற்றிவிட அவன் முயன்றது அவனது அத்துமீறிய செயலா? அவனது உண்மையான அனுதாபம் மிகுந்த முயற்சிக்கு இந்த முடிவுதான் ஏற்பட வேண்டுமா? இதில் என்ன பாக்கி இருந்து விட்டது? அண்ணி எரிந்து சாம்பலாக எத்தனை நேரம் பாக்கி இருந்தது. அவள் இறந்து விட்டிருப்பாள். சந்தர்ப்பவசமாக, எதிர்பாராது அவள் பிழைத்து விட்டாள். இல்லாவிடில், இல்லாவிடில்! கோபி விம்மி விம்மி அழலானான்! ஐயோ! என்ன நடக்க விருந்தது? கடவுளே...... உனக்குக் கோடி கோடி நன்றி.....

ஏன் இப்படி நேர்ந்தது? ஏன்? ஏன்? என்ற கேள்வி அவன் இதயத்தில் எழுந்து கொண்டே இருந்தது.

அவன் உள்ளத்திலிருந்தே ஒரு குரல் இதற்குப் பதிலும் கூறியது. "ஆம்! நீ உண்மையானவன். உன் இதயம் உண்மையானது. நீ முயற்சித்தாய் அதுவும் சரிதான்! ஆனால் அந்த முயற்சி, வெற்றி பெறுவதற்குத் தேவையான துணிவும், தைரியமும் உன்னிடம் முழுமையாக இல்லை. இந்தத் துணிவில்லாததுதான் அண்ணியை எரிந்து சாம்பலாக நிர்பந்தப்படுத்தியது. போதிய துணிவற்ற இத்தகைய முயற்சிகளின் முடிவு இத்தகையதாகத்தான் இருக்க முடியும். இது நெருப்பைப் பின்னும் தூண்டிவிடுகிறது. அக்கணமே எரித்து சாம்பலாக்கி விடுகிறது. முட்டாளே! இப்பொழுதாவது புரிந்து கொள். உன்னைத் திடப்படுத்திக் கொள். இது குழந்தைகளின் விளையாட்டல்ல. இது உணர்ச்சியின் வீணான உத்வேகத்திற்கு வசப்படும் நோயல்ல. நெருப்பில் குதித்து நெருப்பை அணைக்க வேண்டும். உயிரைக் காப்பாற்ற வேண்டிய செயல் இது. யுகயுகமாய் லட்சக்

கணக்கான விதவைகளின் ரத்தத்தைக் குடித்துக் குடித்துக் கொழுத்து விட்ட வழக்கங்கள், சட்டதிட்டங்கள் இவை, இந்த பயங்கரமான அரக்கனுடன் தனியே நின்று போரிட்டு அவனை முறியடிக்க வேண்டும். அடர்ந்து மண்டிய காட்டில் புதியதொரு ஒற்றையடிப் பாதையிட்டு வழி நடக்க வேண்டிய சமாசாரம் இது. இதுவொன்றும் விளையாட்டல்ல. வெறும் பேச்சல்ல.

வாழ்வில் என்றுமே தோல்வியை ஏற்றுக் கொள்ள விரும்பாத கோபிக்கு, தனது வலிமை, துணிவு இரண்டிற்கும் இது சவால் என்று தோன்றியது. இதன் முன்னே அவன் தலை குனிந்து விட்டால் அவனது அண்ணி எரிந்து சாம்பலாகி அழிந்துவிடுவாள். அவனது வாழ்வில் முதலாவது அறைகூவல் ஜோகு பயில் வானுடையது. இன்று இது இரண்டாவது. இன்று மீண்டும் அதே ரத்தம் தனது நாடி நரம்புகளில் ஓடுவதாக அவனுக்குத் தோன்றியது. அதன் வலிமைக்கு முன்னால் அவன் யாரையும் பொருட்டாக நினைப்பதில்லை.

* * *

கிணற்றிலே வாளி போடப்பட்டது. குளம் குட்டையெல்லாம் சலித்துப் பார்த்தாகி விட்டது. எங்கும் துப்புக் கிடைக்காமல் போனதும் பலவிதமான வதந்திகள், வம்புகள் காற்றிலே உலவின. பலவிதமான கட்டுக் கதைகள் உருவாயின. பெண்கள் அண்ணியைப் பற்றி நிறைய குற்றம் குறைகள், அபவாதங்களைக் கிளப்பினார்கள். வயதானவர்கள் கலிகாலத்தைத் திட்டித் தீர்த்தனர். வம்படிப்பவர்கள் ருசிகரமான செய்தியை விமர்சித்து விமர்சித்து அதிலே மகிழ்ச்சியும், கிளர்ச்சியும் அடைந்தனர். ஆனால் ஊரில் எவருக்குமே கோபியின் முன் வாயைத் திறக்கும் துணிவில்லை. தன் போர்வையிலிருக்கும் ஓட்டையை மறைத்துக் கொண்டு, பிறருடைய போர்வையின் ஓட்டையில் காலிட்டு எதுவரை

கிழித்துக் கொண்டிருக்க முடியும்? கல்லை விட்டெறிந்தால் நீர்ப்பரப்பில் ஏற்படும் சலனம் எத்தனை நேரத்திற்கு இருக்க முடியும்?

நாட்கள் கழிந்து கொண்டிருந்தன. உலகம் முன் போலவே இயங்கிக் கொண்டிருந்தது. ஒரு நாள் இரவு முழு வதும் உறக்கத்தில் ஆழ்ந்திருக்கையில் கோபியின் வீட்டுக் கதவை, கனத்த தடியொன்று தடதடவென்று தட்டியது.

முன்போல் மருமகளின் சேவை சிச்சுருஷை கிட்டாத தால், அருகிவிட்ட உறக்கம், இன்னும் வராததால் கண்களை மூடிக் கொண்டு படுத்திருந்த கிழவர் "யாரது?" என்றார்.

வந்திருந்தவன் மெதுவாகச் சிரித்தான். பிறகு கிழவரை நோக்கிச் சென்றவாறே– "அய்யா! இன்னமும் விழித்துக் கொண்டிருக்கிறீரா?" என்று வினவினான்.

"யார்? மட்டுரூவா! அடடே! என்றைக்கு என் மருமகள் வீட்டை விட்டுப் போய்விட்டாளோ, அன்றே என் உறக்கம் போய்விட்டது. இப்பொழுது செத்த உடலைச் சுமந்து கொண்டிருக்கிறேன்! அவளைப் போல் யார் எனக்குச் சேவை செய்வார்கள்? கிழவி கொஞ்ச நேரத்திலேயே எரிந்து விழுந்து விட்டு ஓடிவிடுகிறாள். இப்பொழுது, கடவுளே! என்னை அழைத்துக் கொள் என்றுதான் வேண்டிக் கொள்கிறேன். வாப்பா! உட்கார்! வெகு நாட்கள் கழித்து வந்திருக்கிறாய்! என்னென்னவெல்லாம் இதற்குள் நடந்துவிட்டதப்பா! நல்ல காலம் இனிவரும் என்று நினைத்திருந்தேன், ஆனால் தலையில் என்னென்ன அனுபவிக்க வேண்டுமென்று எழுதியிருக்கிறதோ.....;"

குண்டாந்தடியைச் சுவற்றிலே சாய்த்து வைத்துவிட்டு, கால்மாட்டில் அமர்ந்து கொண்ட மட்டுரு, "எல்லாம் சரியாகி விடும்! அய்யா! தாங்கள் கவலைப்படாதீர்கள். இந்த வீட்டை மீண்டும் குடியும் குடித்தனமுமாய் ஆக்கும் முயற்சியில்தான் இத்தனை நாட்களாய் இரவு பகலாய் ஈடுபட்டிருந்தேன். காரியம் முடியாத வரையில் எந்த முகத்தைக் கொண்டு இங்கு வந்து உங்களைப் பார்ப்பது? வாக்குக் கொடுத்து விட்டேனே! அதை முடிக்கும் வரையில்

நிம்மதி ஏது? மட்டுரூவின் வாழ்வில் இந்த ஒரு விஷயத்தைப் பற்றித்தான் கவலை. என்னுடைய சுபாவம் அப்படி! என்ன செய்ய? கங்கைத்தாயின் தண்ணீர்...... அந்த மண்...... அந்தக் காற்றைத் தவிர வாழ்க்கையில் வேறெந்த சுகத்தையும் நான் அறிந்ததில்லை. ஆம்! உரிமை, நியாயம் இவ்விரண்டிற்கும் முன்னால் நான் யாரையும் ஒரு பொருட்டாக நினைத்ததில்லை. பலமுறை தோல்வியடைய நேரிட்டும், ஜமீன்தார்களின் திமிர் அடங்கவில்லை. அவர்கள் வாயில் போட்டுக் கொண்டதை லேசில் விடுவிக்க முடியாது. பரம்பரை பரம்பரையாக ஆற்றங் கரைப் பிரதேசத்தைக் கொள்ளையிட்டாகி விட்டது, இப் பொழுது கிடைக்கவில்லை என்றதும், பல்லைக் கடிக் கின்றனர். ரெவின்யூ இன்ஸ்பெக்டருக்கு இதைப் பற்றி விசாரணை நடத்தும்படி உத்தரவு வந்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். இப்பொழுது நாலாபக்கமும் தண்ணீர் மயம்தான். அவர் என்ன அளந்து பார்த்து விசாரணை செய்வார்? விஷயம் இனி அடுத்த வருடம்தான். அதுவரை எங்களுக்கும் ஏற்பாடுகள் செய்து கொள்ள அவகாசம் கிட்டியுள்ளது. அய்யா... உயிரை இழந்தாலும் இழப்போமே தவிர அந்நிலத்தில் ஜமீன்தார்களைக் கால் வைக்க விடமாட்டோம். இந்தச் சண்டை இனி வருடக் கணக்காகத் தொடர்ந்து நடக்கும். கங்கைத்தாயின் அருளால் வெற்றி எங்களுக்குதான் கிடைக்கும். உரிமையும், நியாயமும் எங்கள் பக்கம் இருக்கிறது. பொய், மோசடி, சூழ்ச்சி, அட்டூழியம், அநியாயம், அடக்குமுறையெல்லாம் அதிக நாட்கள் செல் லாது. பாபூஜி! இப்பொழுது மட்டுரூ தனியன் அல்ல. ஆற்றங்கரைப் பிரதேசம், மற்றுமுள்ள விவசாயிகள் ஆயிரக்கணக்கானவர்கள் மட்டுரூவுக்குத் துணை நிற்கிறார் கள். தங்களது அன்புக்குரிய மண்ணிற்காக உயிரைக் கொடுப்பவர்களிடமிருந்து நிலத்தை அபகரித்துக் கொள் ளும் சக்தி யாரிடம் உள்ளது? இந்தத் தொல்லைகளில் எல்லாம் சிக்கிக் கொண்டு இருந்ததால்தான் ஏதும் செய்ய முடியவில்லை. இல்லையென்றால் எப்பொழுதோ எல்லா

வற்றையும் சரி செய்திருப்பேன். கங்கைத்தாயும் பொங்கி எழுந்து விட்டிருக்கிறாள். ஐந்து நாட்களுக்கு முன்னர்தான் என் குடிசையை அக்கரைக்குக் கொண்டு போட்டிருக் கிறேன். இக்கரையில் ஜமீன்தார்கள் வேட்டை நாய்போல் என்னை மோப்பம் பார்த்துக் கொண்டிருக்கின்றனர். இனி நீங்கள் சொல்லுங்கள் அய்யா! ரொம்ப நாட்களாய் சமாசாரமே தெரியவில்லை?......

"என்ன சொல்லட்டும் மட்டுரு! வீட்டில் எல்லாம் செய்ய.... கவனிக்க ஒருத்தி இருந்தாள். அவளும் கூட......"

"அதையெல்லாம் கேள்விப்பட்டேன் அய்யா"

"பின் என்ன சொல்லட்டும்? எவ்வளவு கெட்டிக்காரியாக இருந்தாள். அவள் நினைவு வந்தால் நெஞ்சு வெடித்து விடும் போலிருக்கிறது. இனி நான் உயிருடன் இருக்க மாட்டேன்" என்றவாறே கிழவர் அழுதார்.

"அய்யா! இப்படி மனத்தைத் தளர விடாதீர்கள். உங்கள் பாதங்களின் மீது ஆணையிட்டுச் சொல்லுகிறேன், நான் கோபிக்கு எப்படிப்பட்ட பெண் தேடி வருகிறேன் என்று பாருங்கள். உங்கள் மூத்த மருமகள், இளைய மருமகள் இரண்டு பேரின் இடத்தையும் அவள் நிறைத்து விடுவாள். நீங்கள் கவலைப்படாதீர்கள்."

"ஆனால் கோபி இதற்குத் தயாராக இருக்க வேண்டுமே! அவன் எங்கள் மீது மிகவும் கோபமாக இருக்கிறான். பேசுவதுகூட இல்லை. உன்னிடத்தில் என்ன ஒளிவு மறைவு! அவன் தன் அண்ணியுடன் குடித்தனம் நடத்த விரும்பினான். இதெப்படியப்பா சாத்தியம்? 'அந்தப் பைத்தியக்காரக் கிழவி அன்றைக்கு மருமகளிடம் என்ன சொன்னாளோ, அவள் வீட்டை விட்டுப் போய்விட்டாள். இங்கே இவன் எங்கள் மீது கோபித்துக் கொண்டு உள்ளூர மருகிக் கொண்டிருக்கிறான். இப்படி இவன் மனது அவளிடம் லயித்திருந்தது என்று எங்களுக்கென்னப்பா தெரியும்? தெரிந்திருந்தால் நாங்கள் எதற்காக எதுவும் சொல்லப் போகிறோம்? அப்பா, அம்மாவிற்குப் பெற்ற பிள்ளையைவிடவா, உற்றார் உறவினர் முக்கியம்? இரண்டு

மூன்று பிள்ளைகள் இருந்தாலாவது அது வேறு விஷயம்! இங்கே இவன் ஒருத்தனைச் சார்ந்துதான் எங்கள் வாழ்க்கையே இருக்கிறது. இவனைத்தான் நம்பி இருக் கிறோம். தாயாதிகளும், உறவினர்களுமா எங்களுக்குச் சாப் பாடு போடப் போகிறார்கள்? எங்களுக்கென்னப்பா தெரி யும்? இப்பொழுது எவ்வளவு பச்சாதாபப் படுகிறோம் தெரி யுமா? அரே! என் பெண்ணும் அல்லவா வீட்டைத் துறந்து போய்விட்டாள். அவளைப் போல் யார் என்னைக் கவனித்து சிச்ருஷை செய்வார்கள்? ஆனால் இப்பொழுது என்னப்பா செய்ய முடியும்? மட்டுரூ...... நீயாவது அவனுக்குப் புத்தி சொல்லப்பா!"

"சொல்லுகிறேன் அய்யா! நான் சொன்னால் அவன் தட்ட மாட்டான். என்னைத் தன் மாணிக் அண்ணனாகத் தான் நினைக்கிறான். நீங்கள் கவலைப்படாதீர்கள். எல் லாம் சரியாகிவிடும். எங்கே அவன்?" என்று கேட்டவாறே எழுந்தான் மட்டுரூ.

"அடே! இந்தாப்பா! இன்னும் கொஞ்சம் நேரம் உட்காரு. பெண் எங்கே பார்த்திருக்கிறாய் என்று சொல்லவே யில்லையே...."

மெல்லச் சிரித்தவாறு மட்டுரூ சொன்னான்– "அய்யா நம் வீட்டுப் பெண்தான், என்னுடைய குட்டி மைத்துனி என்று தான் வைத்துக் கொள்ளுங்களேன். பண்டிதரிடம் எல்லாம் பார்த்து வைத்து விட்டேன். எல்லாம் பொருந்தி இருக்கிறது. அழகு வடிவம் எல்லாம் சாட்சாத் கோபியின் அண்ணி யைப் போலத்தான். அணு அளவுகூட வித்தியாசமில்லை. குணம்கூட அவளைப் போலவேதான். எத்தனை காரியம், கவனிப்பு, பணிவிடைகள் அய்யா— என்ன சொல்லட்டும் போங்கள்! நீங்களே பார்த்துக் கொள்ளலாம். உங்கள் மூத்த மருமகள்தான் வேறு வடிவத்தில் வந்துவிட்டாளோ என்று நினைப்பீர்கள். தேர்ந்தெடுப்பதில் நான் எத்தனைக் கெட்டிக்காரன் என்பது உங்களுக்கென்ன தெரியும்? கோபி யின் அண்ணியைப் பார்த்ததிலிருந்து, கோபிக்கு லாயக் காக, தகுந்ததொரு பெண் கண்களில் தட்டுப்படவில்லை.

பின் எப்படி இந்த வீட்டிற்கு அப்படியொருத்தி வர முடியும்? எதிர்பாராத விதமாய் அப்படியொரு பெண் வீட்டிற் குள்ளேயே இருந்துவிட்டாள். ஆனால் அவர்கள் இரண்டாந் தாரமாய் கலியாணம் செய்து கொடுக்கத் தயாராக இல்லை. உண்மையில் அத்தகைய ரூபவதியான, குணசாலியான, அழகான இளம் பெண்ணை இரண்டாம் தாரமாக எப்படிக் கொடுப்பார்கள்? மட்டுரூ சொன்னதால் கடைசியில் ஒப்புக் கொண்டார்கள். மட்டுரூவின் வார்த்தையை யாரேனும் தட்ட முடியுமா அய்யா! தட்டமாட்டார்கள். வீட்டுப் பெண்ணானால் என்ன? நான் திட்டவட்டமாகச் சொல்லி விட்டேன். என்ன வரதட்சிணை, சீர் கேட்கிறார்களோ கொடுக்க வேண்டும், என்றேன். அய்யா! எதைப் பற்றியும் யோசிக்க வேண்டாம், என்ன கேட்பதாக இருக்கிறீர்களோ கேட்கலாம்.''

''அடே... இதற்கும் எனக்கும் என்னப்பா சம்பந்தம்? நீ கோபியிடமே பேசி இதையெல்லாம் முடிவு செய்து கொள். எங்களுக்கென்ன? எல்லோருக்கும் எது சந்தோஷமோ'' அதுவே எங்களுக்கும். கோபி குடியும் குடித்தனமுமாய் இருக்க வேண்டும், கடவுளிடம் இதுதானப்பா எங்கள் பிரார்த்தனை. சரி! போ! அதோ முற்றத்தில் படுத்திருக்கிறான் கோபீ. அவனிடம் எல்லாம் பேசி முடிவு செய்து கொள். எத்தனை சீக்கிரம் முடியுமோ எல்லாம் செய்துவிடு. இனியும் தாமதம் தாங்காது கடவுளே!''

''எல்லா ஏற்பாடுகளையும் செய்துவிட்டுத்தான் வந்திருக் கிறேன் அய்யா!'' என்ற மட்டுரூ எழுந்து சென்று தடியின் முனையில் கட்டியிருந்த சிறியதொரு மூடையைத் திறந்து கிழவரின் கரங்களில் திணித்தவாறு ''இதோ! இனிப்புகள்! வேஷ்டி! ஐநூறு ரூபாய்...'' என்றான்.

''ஹே—ஹே, இத்தனை சீக்கிரமாக இதெல்லாம் எப்படி யப்பா ஆகும்? புரோகிதர், பந்துக்கள், கொண்ட வர்கள், கொடுத்தவர்கள்...

''அதெல்லாம் நீங்கள் பார்த்துக் கொள்ளுங்கள் அய்யா! என்னைப் பற்றித்தான் தெரியுமே? இரவு மட்டும்தானிருக்க

முடியும் என்னால். அங்கே கங்கைத்தாய் பொங்கிப் பிரவாகித்துக் கொண்டிருக்கிறாள். அக்கரை, இக்கரை விஷயம் வேறு இருக்கிறது. அடிக்கடி வந்து போவது ஆபத்தானது. இது யாரால் முடியும்? நீங்கள் இதையெல்லாம் எடுத்துக் கொண்டுவிட்டால் பிறகு கோபியைக் கட்டாயப் படுத்த ஒரு வழி கிடைக்குமல்லவா? என் வேலையும் கொஞ்சம் எளிதாகும். எப்படியும், இந்தக் காரியம் உங்களுடையதுதானே! இனி கோபிக்குத் திலக மிட்டு விடுகிறேன். ஜெய் கங்கா மாதா!'' என்ற மட்டுரூ எழுந்து விட்டான்.

கோபி திறந்த வெளி முற்றத்தில் கட்டிலில் படுத்து குறட்டை விட்டுக் கொண்டிருந்தான். மட்டுரூ அருகில் சென்று விலாவில் ஒரு குத்துவிட்டவன், கரத்தைப் பற்றி எழுப்பி உட்கார வைத்தான். ''ஏய்! உன் கல்யாணத்திற்காக, இந்த ராத்திரி வேளையில் பொங்கி எழும் கங்கைத்தாயின் பிரவாகத்தைக் கடந்து நான் வந்திருக்கிறேன். நீ என்னடாவென்றால் குறட்டை விட்டுக் கொண்டிருக்கிறாய். வரட்டும் உன் பெண்டாட்டி! பிறகு நீ எப்படிக் குறட்டை விடுகிறாய் என்று பார்க்கலாம்.''

வியப்பும், திகைப்பும் கொண்டவனாய் கோபி எழுந்து நின்றான். பிறகு தணிந்த குரலில்– ''முன்னறைக்குப் போகலாம் அண்ணே!'' என்றான்.

''அடே! இங்கே இருந்தால் என்னவாம்! ஓ! வெட்கமாக இருக்கிறதா? ஏய்! நீ கன்னிப் பெண்ணைக்கூடத் தோற்கடித்து விடுவாயடா?''

கோபி மட்டுரூவின் கரத்தைப் பற்றி உள்ளே இழுத்துக் கொண்டு போனான். அவன் கரத்திலிருந்த தடியை வாங்கி, சுவற்றிலே சாய்த்து வைத்துவிட்டு மெதுவாக ''என்னுடைய.....'' என்று மெதுவாக ஆரம்பித்தான்.

''அடே! கொஞ்சம் வாயை மூடிக்கொண்டு இரு. நான் என் வேலையைச் செய்ய விடு'' என்ற கோபி இடது உள்ளங்கையின் மீது வலது கரத்து கட்டைவிரலை வைத்துத் தேய்த்து, ஏதோ மந்திரத்தைத் ஜபித்தவனாய் கோபியின்

நெற்றியில் திலகம் போலிட ஆரம்பித்ததும், "இதை ஒரு விளையாட்டாக நினைத்துக் கொண்டிருக்கிறீர்களா? அண்ணே!" என்றான் கோபி.

சிரித்துக் கொண்டிருந்த மட்டுரூ, கம்பீரமாய், "விளையாட்டு என்று நீயா சொல்லுகிறாய்? வீரர்களான தைரியசாலிகளுக்கு மிக மிகக் கடினமான காரியம்கூட விளையாட்டுத்தான்– கோழைகளுக்கோ, மிக எளிதான காரியம் கூட கடினமானது! நீ யாரிடம் இதைச் சொல்லுகின்றாய் என்று தெரிகிறதா உனக்கு? தன் வாழ்வில் மட்டுரூ எந்தக் காரியத்தையும் கடினமானது என்று நினைத்ததில்லை. கடினமானதும், ஆபத்தானதுமான காரியங்களுடன்தான் என்றும் விளையாடுவான். விளையாட்டாகவே ஜெயித்தும் விடுவான். இனி இந்த மாதிரியான வார்த்தைகளை மீண்டும் நாவினால் உச்சரிக்காதே! உலகத்தில் நான் எதையாவது வெறுக்கிறேன் என்றால் அது கோழைத்தனத்தைத்தான். நீ கோழை என்று, நான் என்று நினைக்கிறேனோ அன்றே, உன்னையும், உன் அண்ணியையும் வெட்டி கங்கைத் தாய்க்குப் பலியிட்டு விடுவேன். ஒரு தம்பி இருந்தான்..... அவன் செத்துவிட்டான், ஒரு தங்கை இருந்தாள் அவளும் இல்லை என்று நினைத்துக் கொள்வேன்". மட்டுரூவிற்குத் தொண்டை அடைத்துக் கொண்டது. அவன் தலையைக் குனிந்து கொண்டான்.

கோபி அவனது மடியில் தலைவைத்துக் கொண்டு விம்மி அழுதான். மட்டுரூ அவனது முதுகைத் தடவியவாறே "பைத்தியக்காரா! நானிருக்கையில் உனக்கு எது கஷ்டமான காரியம்? எழுந்திரு! நான் கூறுவதைக் கேள்! அவகாசம் அதிகமில்லை. இரவோடிரவாக நான் திரும்பிச் சென்றாக வேண்டும்" என்றான். பிறகு கோபியை எழுப்பி, அவன் கன்னங்களில் தட்டிக் கொடுத்து– "சிசவன் படித்துறைக்கு எதிரே என்னுடைய படகு இருக்கிறது. அங்கே நீ சொன்னால் என் குடிசைவரை கொணர்ந்து சேர்த்துவிடுவான். நான் என் ஆட்களிடம் சொல்லி வைக்கிறேன். உனக்கு எந்தச் சிரமமும் இராது. நான்

அப்பாவிடம் "திலக்" பணம் கொடுத்தாகி விட்டது. நாளைக்கு மஞ்சள் வேஷ்டி கட்டிக் கொள். உற்றார் உறவினர்களுக்கு இனிப்புகள் வழங்கிவிடு. எல்லாம் நியமப்படி, முறைப்படி இருக்கட்டும். நீ மணகனாக என் வீட்டிற்கு வந்து சேர். 'பராத்'* எல்லாம் அதிகம் கூட்டிக் கொண்டு வராதே! அப்படியே வந்தாலும் கொஞ்சம் பேர் போதும். கங்கைத்தாய் சீ ற்றம் கொண்டுள்ளாள்.

எது உசிதம் என்று நினைக்கிறாயோ அப்படிச் செய். என் தங்கையின் திருமணம் இது. என்னையே விற்றுவிடக் கூட எனக்குச் சற்றும் ஆட்சேபமில்லை. கங்கைத்தாய் மீண்டும் என் பையை நிரப்பிவிடுவாள். அவளுடைய ஆட்சியில் எதற்கும் குறைவில்லை புரிந்ததா? மனதில் அப்படி, இப்படியெல்லாம் நினைத்துக் கொள்ளாதே. நீ மட்டுரூவின் தம்பி என்பதை மறந்து விடாதே! மட்டுரூவின் மானம், கௌரவம் ஓங்கும்படியான காரியம் செய். மட்டுரூவின் கௌரவத்தை ஒரு வீரனால் மட்டும்தான் உயர்த்த முடியும். நல்லது! நான் கூறியவைகளை நினைவு வைத்துக் கொள். சிசவன் படித்துறை! நல்லது! நான் வரட்டுமா?"

"என் அண்ணி எப்படி இருக்கிறாள்?" அன்பினால் நெகிழ்ந்தவனாய் வினவினான் கோபி.

மட்டுரூ சிரித்தான். "அரே! அவள் இன்னுமா உன் அண்ணி! மணப்பெண் என்று ஏன் கூறவில்லை? ஹும்.... நன்றாய் இருக்கிறாள். ரொம்பவும் நன்றாக இருக்கிறாள். கங்கைத்தாயின் காற்றுப்பட்டாலே மூவகையான தாபமும் குளிர்ந்து போய்விடும். அவள் இப்பொழுது எப்படி தளதளவென்றாகி விட்டாள் தெரியுமா? பார்த்தால் நெஞ்சு மகிழ்ந்து போகும். இதயம் துள்ளும். இதற்கிடையில் சந்தர்ப்பம் கிடைத்தால், வந்து போயேன்!" என்ற மட்டுரூ கோபியின் நெற்றியில் முத்தமிட்டவன் எழுந்து நின்றான்.

---

* திருமணத்தின் போது, மணமகள் வீட்டிற்கு மாப்பிள்ளை தன் உறவினருடன் போகும் ஊர்வலம்.

கோபி அவன் கால்களைப் பிடித்துக் கொண்டான். "உம்— மைத்துனருக்கு எப்படி மரியாதை செய்ய வேண்டுமென்று இப்பொழுதிருந்தே கற்றுக் கொள்......" என்றான் மட்டுரு.

"அண்ணா!" என்ற கோபி வெட்கத்துடன் தலை கவிழ்ந்தான். மட்டுரு அவனை வாரி எடுத்து அணைத்துக் கொண்டான்.

# 15

விடியற்காலை பிலரா மாட்டிற்குத் தீவனம் வைக்க வந்ததும் கிழவர் அவனைக் கூப்பிட்டார். "ஏய்? பிலரா! ஓடிப்போய், புரோகிதரைக் கூட்டி வா! உன் கூடவே வரும்படி சொல். நேரமாக்க வேண்டாம்"

"எஜமான்! யாரேனும் விருந்தாளி வந்திருக்கிறார்களா? சின்ன எஜமானருக்கு ஏதாவது கல்யாணம்......"

"ஆமாம், ஆமாம். எல்லாம் சரியாகிவரட்டும். நீ சீக்கிரம் சென்று அவரைக் கூட்டிக் கொண்டு வா!"

பிலரா சென்றான். ஆனால் வழக்கமாக இத்தகைய சந்தோஷமான தருணங்களில் கால்களுக்கு எத்தனை வேகமும், உற்சாகமும் வருமோ அது ஏற்படவில்லை. சின்ன எஜமானியம்மா காணாமல் போன தினத்தி லிருந்தே அவனுக்கு ரொம்பவும் வருத்தமாக இருந்தது. கோபி வந்ததிலிருந்து சின்ன எஜமானி அம்மாவைப் பார்க்கும் சந்தர்ப்பம் அவனுக்குக் கிட்டவில்லை. கோபியே, தவிடு, வைக்கோல் எல்லாம் எடுத்துக் கொடுத்து விடுவான். எத்தனையோ முறை, சின்ன எஜமானனிடம் தன் மனத்தில் உள்ளதைக் கூற நினைத்தான். பலமுறை கோபியுடன் தனியாக இருந்த சமயங்களில் வாய் வரை வந்து விட்டது. கோபியும் அவன் ஏதோ சொல்ல விரும்புவதைப் புரிந்து கொண்டவனாய் கேட்டான். ஆயினும் பிலராவிற்குத்

தைரியம் வரவில்லை. ஏதோ கூறித் தட்டிக் கழித்து விட்டான். சின்ன எஜமானி பெண். அவளிடம் பேசுவது எளிதாக இருந்தது. ஆனால் கோபி விஷயத்தில் அப்படி இல்லை. கோபம் கொண்டு நாலு அறை கொடுத்து விட்டால் என்ன செய்வது? க்ஷத்திரியனின் கோபம் எப்படிப்பட்டது என்பது அவனுக்குத் தெரியும். எத்தனை முறை அனுபவப் பட்டிருக்கிறான். கடைசியில் சின்ன எஜமானி அம்மா வீட்டை விட்டுப் போய் விட்டாள் என்ற விஷயம் அவனுக்குத் தெரிய வந்ததும் "சீச்சீ.... இந்த மனிதர்கள் எத்தனை கொடியவர்கள். பாவம் அவளைத் துரத்தி விட்டுத்தான் மூச்சு விட்டிருக்கிறார்கள்" என்ற வார்த்தைகள்தான் வெளி வந்தன.

அவனுக்கு ஏதுமறியாத அந்த அப்பாவி சின்ன எஜமானியின் நினைவு அடிக்கடி வந்தது. பாவம் எங்கே, எப்படி இருக்கிறாரோ! ஏதாவது குளம்குட்டைதான் இழுத்துக் கொண்டிருக்கும், வேறென்ன? கள்ளமறியாத உள்ளத்தின் அனுதாபம் இது. சின்ன எஜமானிக்கும் அவனுக்கும் என்ன சம்பந்தம்? இருந்தாலும் கூட அவளுக்காக உண்மையான துக்கம் அவனுக்கு ஏற்பட்டதுபோல் வேறுயாருக்கேனும் இருந்திருக்குமா என்பது சந்தேகம்.

"ஹூம்! எத்தனை சீக்கிரம் இவர்கள் அவளை மறந்து விட்டனர். எதுவுமே நடக்காதது போலல்லவா இருக்கிறார்கள். அந்த அம்மா போய் எத்தனை நாட்களாகின்றன? இங்கே அதற்குள் 'ஜம்' என்று திருமணம் நிச்சயமாகிவிட்டது. இனி மகிழ்ச்சியும், சந்தோஷமும் கொண்டாடப்படும். வாத்தியங்கள் முழங்கும். இந்த உலகம்தான் எத்தனை சுயநலமானது. தங்கள் சுகத்தின் முன்னே மற்றவர்களின் துக்கத்தைப் பற்றி யாருக்கு அக்கறை?"

பிலரா புரோகிதரை அழைத்துக் கொண்டு திரும்பி வந்தபொழுது வாசலில் ஒரே அமர்க்களமாக இருந்தது. அழைப்பின் பேரில் உறவினர்கள் வந்து கூடியிருந்தனர்.

ஆனால் ஏதும் அறியாமல், தெரியாமல் கலந்து கொள்ள மறுத்துக் கொண்டிருந்தனர். எந்த ஊர் பெண்? அவளுடைய அம்மா, அப்பாவின் ரத்தம் எப்படி? எலும்பு எப்படி? இர வோடிரவாக திருமணத்திற்குரிய வரிசையைக் கொடுத்து விட்டு ஏன் போய்விட்டார்கள்? ஏன் தங்கவில்லை? இப்படிக் கூட யாருக்கேனும் திருமணம் நிச்சயமாகிறதா என்ன?

கோபி ஒரு பக்கம் வாய் திறக்காமல் நின்று கொண்டிருந்தான். கிழவர்தான் சுவற்றில் சாய்ந்து உட்கார்ந்தவாறு அவர்களுடன் பேசிக் கொண்டிருந்தார். புரோகிதரைக் கண்டதும் அவரை அழைத்து தன் பக்கத்திலிருந்த கட்டிலில் உட்கார வைத்தவர், அவரை நோக்கி "பண்டித்ஜீ! நான் என்ன கபோதியா? என் ரத்தம், என் குலத்தைப் பற்றிய கவலை எனக்கில்லையா? இன்று இவர்களெல்லாம் இதை எனக்கு ஞாபகப்படுத்த வந்திருக் கிறார்கள். இது சந்தர்ப்பவசமாய் நேரிட்டது. மட்டுரு சிங்கினால் இங்கு தங்க முடியவில்லை. பெண் அவருடைய மைத்துனி. எத்தனையோ முறை இதைச் சொல்லியாகி விட்டது. வேண்டிக் கொண்டாகிவிட்டது. ஆயினும் இவர்களின் பிடிவாதம் தளரவில்லை. முடமாகிக் கிடக்கிறேன் என்று இவர்கள் என் மீது அதிகாரம் செலுத்தப் பார்க்கின்றனர். நான் யார் என்பது இன்று இவர்களுக்கு மறந்து போய்விட்டது!" என்றார்.

"பெண் கொடுப்பது, எடுப்பது, போன்ற விஷயத்தில் எல்லோரும் சமமானவர்கள்தான். கண்ணைத் திறந்து கொண்டே ஈயை விழுங்க முடியாது பண்டித்ஜீ! கல்யாணம் என்பது விளையாட்டா என்ன? நீங்களே சொல்லுங்கள்."

யார் பக்கமிருந்தால், இந்தச் சமயத்தில் லாபகரமானதாக இருக்கும் என்பது பண்டிதருக்குத் தெரியும். தொண்டையைக் கனைத்துக் கொண்டு, கம்பீரத்துடன் "நீங்கள் சொல்வது சரிதான். ஆனால்! பாருங்கள். ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் என்ன நடக்க வேண்டும் என்பதைக் கடவுள்தான் விதித் திருக்கிறார். உங்களுக்கெல்லாம் தெரியும். ஒரு சந்தர்ப்பத்

தில் மாப்பிள்ளையாகப் போகிறவன் நோய் வாய்ப்பட்டு விட்டான். 'பராத்' உடன் செல்ல முடியவில்லை என்று வரும்போது ஒரு லோட்டாவுடன் பெண்ணிற்குத் திருமணம் செய்து வைக்கப்படுகிறது. திருமணச் சடங்குகள் நிறை வேற்றப் படுகின்றன. சமய சந்தர்ப்பத்தைப் பொறுத்து இப்படியெல்லாம் செய்ய வேண்டி நேர்கிறது. ஏதோ காரணத்தினால் மட்டுரூசிங் தங்க முடியவில்லை என்றால் என்ன வந்தது? இந்த சந்தர்ப்பத்தை அப்படியே விட்டு விடுவதா? இல்லை— கூடாது. அப்படிச் செய்வது மரபிற்கு விரோதமானது. என்னுடைய அபிப்பிராயம் இதுதான். இனி பஞ்சாயத்தார்களின் இஷ்டம்'' என்றார்.

உறவு முறையினரிடையே கசாமொசாவென்று ரகசியப் பேச்சுகள் எழுந்தன.

''பண்டிதரே! தாங்கள் சமய, சந்தர்ப்பங்கள் பற்றிச் சொன்னீர்களே! அது சரிதான். ஆனால் இந்த சந்தர்ப்பம் அப்படி அல்லவே! இதை விட்டு விடலாம். பங்குனி யில்தான் முஹூர்த்தம் வரும். அதற்கு இன்னும் நாலைந்து மாதங்கள் இருக்கிறதே!'' என்றார் ஒருவர்.

''எப்படி விட்டுவிட முடியும்? இந்த வேஷ்டி, இனிப்பு, பணம் எல்லாவற்றையும் திருப்பி விடட்டுமா?'' கிழவர் கர்ஜித்தார்.

''பலமுறை அப்படியும் நடந்திருக்கிறதே''— என்றான் இன் னொருவன்.

''நான் அவர்களுக்கு வாக்குக் கொடுத்திருக்கிறேன்'' கிழ வர் கொதித்தெழுந்தார்.

''இது அப்படியொன்றும் அரிச்சந்திரனின் வாக்கு இல்லை'' என்று கிண்டல் செய்தான் மற்றொருவன். இதற்கு மேலும் கிழவரால் சகித்துக் கொள்ள முடியவில்லை. உடல் வெடவெடக்க அவர் கத்தினார். ''யார் இப்படிப் பேசியது! எங்கே இன்னொரு முறை சொல் பார்க்கலாம்! உண்மை யான ராஜபுத்திரனின் பிள்ளையாக நான் இருந்தால், அவன் நாக்கை இழுத்தெறிகிறேனா இல்லையா பார்! அடே கோபி! நான் அவமானப்படுவதை நீ நின்று

கொண்டே பார்த்துக் கொண்டிருக்கிறாயா! உன் அப்பாவை பொய்யன் என்று சொன்னதின் பலன் எப்படி இருக்கும் என்பதை அந்தப் பயலிடம் சொல்!''

வந்திருந்தவர்களிடம் ஒரு நிமிடம் நிசப்தம் நிலவியது. பின்னர் பெருத்த ஆரவாரம் ஏற்பட்டு விட்டது.

''நாக்கை இழுக்க இவர் யார்? இடம் என்று வந்தால் விஷயம் சொல்லத்தான் படும். இது உறவு முறையினர் யாவருக்கும் ஏற்பட்ட அவமதிப்பு. எழுந்திருங்கள்— எழுந்திருங்கள்— புறப்படுங்கள். வசவும் திட்டும் கேட்க இங்கு யாரும் வரவில்லை. விரித்த கம்பளத்தில் உட்காரும் அனைவரும் சமமானவர்கள்தான். இப்படிப் பேச இவருக்கு என்ன துணிச்சல்? வாருங்கள் போகலாம்—''

பண்டிதர்— ''வேண்டாம், வேண்டாம்'' எனக் கூறிக் கொண்டே இருந்தார். ஆனால் வேஷ்டியை உதறிக் கொண்டு, எல்லோரும் கோபத்துடன் எழுந்து மிரட்டியவாறே அவ்விடம் விட்டகன்றனர்.

இதுவரை உள்ளூர குமுறிக்கொண்டு வாசற்படியில் நின்ற கிழவிக்குத் தன் ஆத்திரத்தை வெளியிட ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது. விரல்களை நெறித்து, நெறித்து, ''போங்கள்! போங்கள்! நீங்கள் இல்லாவிட்டால் எங்கள் வீட்டுப் பிள்ளையின் கல்யாணம் ஒன்றும் நின்றுவிடப் போவதில்லை. பண்டிதரே! பூசைக்கு ஏற்பாடு செய்யுங்கள். இவர்கள் மிரட்டினால் என்ன ஆகிவிடும்? எவனாவது தோட்டி, தொண்டமான் இவர்களைக் கண்டு பயப்படுவான்! ஹும்! இது மாணிக்கின் அப்பாவின் குடும்பம். தன் ஒருவராகவே நூறு பேருக்குச் சமமாக நிற்பார். என்ன நினைத்துக் கொண்டார்களாம் இவர்கள்!'' என்று பொரிந்தாள்.

''உண்மைதான், எஜமானி அம்மா! இது பெருத்த அநியாயம். புரோகிதரான நான் சொன்னதைக் கூட இவர்கள் காதில் போட்டுக் கொள்ளவில்லை. இவர்களால் உங்களுக்கென்ன கெட்டுவிடப் போகிறது. செலவு கொஞ்சம் மிச்சம். ஒருவருமில்லாதவர்களுக்குக் கடவுள் இருக்

கிறார். ஒருவர் இல்லை என்றால் யார் காரியமாவது நின்று விடுகிறதா என்ன?" என்றவாறே புரோகிதர் காரியங்களைக் கவனிக்கலானார்.

இந்த வேடிக்கையையெல்லாம் கண்டு அதிகம் மகிழ்ச்சி அடைந்தவன் பிலராதான். ஹூம்! இந்த உதவாக்கரைப் பயல்களிடம் உள்ள பயத்தினால்தானே சின்ன எஜமானி அம்மாவிற்கு இந்த நிலைமை ஏற்பட்டது. இந்த உறவு முறை, தாயாதிகள் என்ற பயத்தினால் எத்தனை அபலை விதவைகளின் வாழ்க்கையைப் பாழாகி விட்டது. இல்லாவிடில் எத்தனை பேர், பாவம்..... உயிரோடும் மானத்தோடும் வாழ்ந்திருப்பார்கள். அவர்களுக்கும் ஒரு வாழ்க்கை கிடைத்திருக்கும் என நினைத்தான் அவன். இந்த வெற்றி தன்னுடையது என்று தோன்றியது அவனுக்கு. அவனுக்கு ஏற்பட்ட சந்தோஷம் உண்மையில் ஒரு எதிரி அடையும் சந்தோஷமாக இருந்தது.

பண்டிதருக்கு விருந்து அளித்து அனுப்பி வைத்த பின், கோபி மஞ்சள் வேஷ்டியை அணிந்து கொண்டவனாய், முன்னறையில் வந்து அமர்ந்தான்– "ஹூம்! இதுவும் நல்லதாயிற்று. காக்கை உட்காரப் பனம்பழம் விழுந்தாற் போலாயிற்று. நல்ல காலம். வழியிலிருந்த பெரிய மலை தானாகவே நகர்ந்து விட்டது".

இச்சமயம் பிலரா வந்து எதிரே அமர்ந்து கொண்டான். "ரொம்பவும் சந்தோஷமாக இருக்கிறாயே! என்ன விஷயம்?" என அவனை நோக்கி வினவினான் கோபி.

"எஜமான்! உங்கள் உறவுக்காரர்கள் ஓடுவதைப் பார்த்து இன்று எனக்கு ரொம்பவும் சந்தோஷமாக இருந்தது" என்றான் பிலரா.

"இதில் சந்தோஷப்படுவதற்கு என்ன இருக்கிறது?" என்றான் கோபி.

"எஜமானரே! இது சந்தோஷமான சம்பவம் இல்லையா? இவர்களிடம் பயந்து கொண்டுதான் சின்ன எஜமானியம்மா வீட்டை விட்டுப் போய்விட்டார்கள். இல்லாவிடில் எதற்காக வீட்டை விட்டுப் போகப் போகிறாள்?" பிலரா

வருத்தம் தொனிக்கக் கூறினான்.

"ஆமாம், நீ சொல்வது சரிதான்"– என்றான் கோபி, ஏதோ யோசிப்பவன்போல்.

"உங்களுக்கு இவர்களைப் பற்றிய பயமில்லையா எஜமான்!"

"ஊம்."

"ஆனால் இன்று அவர்களுடன் உங்கள் உறவு முறிந்து விட்டது. முன்பே இவ்வாறு செய்திருந்தால் சின்ன எஜமானி அம்மா எதற்காக வீட்டை விட்டுப் போகப் போகிறாங்க! எஜமான்! நீங்கள் முன்பே இவ்வாறு ஏன் செய்யவில்லை?" தொண்டை அடைக்க, வேதனை நிரம்பிய குரலில் வினவினான் பிலரா!

இக்கேள்வி கோபியைத் திடுக்கிடச் செய்து விட்டது. தாழ்ந்த குலத்தவனான, படிக்காத ஒருவன் கூட இத்தனை அறிவுடன் பேச முடியும் என்று அவனுக்கென்ன தெரியும்? அதிர்ச்சியுற்றவனாய் அவன் முகத்தையே பார்க்க லானான்.

"எங்கே, எந்த நிலையில் அவர்கள் இருக்கிறார்களோ! அவர்களைப் பற்றிய நினைவாகவே இருக்கிறது எஜமான். கன்றுக்குட்டி போல் இருந்தாங்க! என்ன சொல்லட்டும்? அவங்க நினைவு வந்தால், கண்ணிலிருந்து நீராய் கொட்டுகிறது." பிலரா அழுது விட்டான்.

நெருங்கிப் போன கோபி– "பிலரா! கடவுள் உன்னைப் போன்ற மனதை எல்லோருக்கும் தரட்டும். உன்னைப் போன்ற அன்புள்ளத்தை எல்லோருக்கும் தரட்டும். நீ வருத்தப்படாதே. இறைவன் எல்லாவற்றையும் நலமாக முடிப்பான். நீ வருத்தப்படாதே" என்றான்.

"எஜமான்!" விம்மியவாறே பிலரா தொடர்ந்தான். "சின்ன எஜமானியம்மாவைப் பார்க்கும் போதெல்லாம், உங்களுடன் அவர்களுக்கு எவ்வளவு பொருத்தமான ஜோடி அமையும் என்று மனதிலே தோன்றும். எஜமான், இந்த உறவினர்களைப் பற்றிய பயம் இல்லையென்றால் நீங்க, அவங்களைக் கல்யாணம் செய்து கொள்வீங்க

இல்லையா?''

கோபியின் மனது உருகிவிட்டது. தன்னையே மறந்தவனாய் பிலராவின் கரத்தைப் பற்றி, அவன் கண்களைத் துடைத்தவனாய் ''நீ ரொம்ப நல்லவன் பிலரா, போ! காலையிலிருந்து நீ வீட்டிற்கே போகவில்லை. உன் மனைவி உன்னைத் தேடிக் கொண்டிருப்பாள். அம்மாவிடம் சாப்பாடு வாங்கிக் கொள்'' என்றான்.

## 16

ரெவின்யூ இன்ஸ்பெக்டரின் விசாரணையில் என்னென்ன வேண்டுமோ, அவை எல்லாம் நடந்தது. எத்தனையோ அட்டூழியங்கள், மோசடிகள் போலவே இதுவும் குடியானவர்களை அதட்டி, மிரட்டி, அடக்கி, ஒடுக்க, ஜமீன்தார்கள், அதிகாரிகளின் ஒரு தந்திரம்தான். மேலும் கங்கைத்தாயின் மாயையை என்ன சொல்வது? இம்முறை வெள்ளம் பின்வாங்கி வடிந்த பொழுது இரு தாரைகளாகப் பிரிந்து விட்டது. இந்தப் பக்கம் ஒன்று, அந்தப் பக்கம் ஒன்று எனப் பிரிந்து ஓட இடையில் இரு பள்ளத் தாக்குகளுக்கிடையே உள்ள மலைபோல், நிலம் உயர்ந் தெழும்பி வந்தது. இந்த வருடம் மிகவும் போராட்டமான சிரமமான வருடம்தான் என்பது மட்டுரூவிற்குத் தெரியும். அவன் இதற்கான முழு ஏற்பாடுகளையும் செய்திருந்தான். இப்பொழுது ஆற்றின் இரு பிரிவுகளையும் கண்டதும், கங்கைத்தாய் தனது விசாலமான கரங்களை விரித்து, அவனைத் தன் பாதுகாப்பில் ஏற்றுக் கொண்டு விட்டதாகவே தோன்றியது. இனி அவனது எதிரிகள் எத்தனை முயன்றாலும், மண்டையை உடைத்துக் கொண்டாலும் அவனுக்கு மயிரிழைகூடத் தீங்கு செய்ய முடியாது.

இரு தாரைகளிடையே பரவியிருந்த மணற்பரப்பில்

முதலில் மட்டுருவின் குடிசை எழும்பி நின்றது. தொடர்ந்து விரைவிலேயே கடந்த ஆண்டைப் போலவே ஐம்பதிற்கும் மேற்பட்ட குடிசைகள் தோன்றிவிட்டன. இந்த வருடம் குடியானவர்கள் எவரும் இங்கு வரமாட்டார்கள் என ஜமீன்தார்கள் நினைத்தனர். ஆனால் இச்செய்தி எட்டியதும் ஜமீன்தார்கள் மனம் கொதித்துப் போனார்கள். போலீஸ் ஸ்டேஷன், தாசில்தார், மாவட்டக் கலெக்டர் அலுவலகம் என்று ஓடியாடத் துவங்கினர். காரியத்தில் மும்முரமாய் இறங்கினர். இத்தனை நாட்கள் சும்மா இருந்து பார்த்ததில், மீண்டும் தங்களது பழைய நாட்கள் திரும்பி வராதென அவர்களுக்குத் தெரிந்து விட்டது. இனி ஏதாவது செய்துதான் ஆக வேண்டும். இல்லாவிடில் ஆற்றங்கரைப் படுகை நிலத்தைக் கை கழுவிவிட வேண்டியதுதான். இதுதான் கடைசி ஆட்டம். களத்தில் இறங்கிப் பார்த்து விட வேண்டும். தோற்றால் தோற்றது– ஜெயித்தால் ஜெயித்ததுதான். முழு மூச்சுடன் இறங்கி, இங்கேயா, அங்கேயா என்று முடிவு செய்தாக வேண்டும் என்று அவர்கள் நினைத்தனர்.

மண் மிருதுவானது. வழவழப்பானது. என்றாலும் இன்னும் ஈரமிருந்தது. சிற்சில இடங்களில் இன்னமும் சேறும் சகதியுமாய்க் கூட இருந்தது. காய்வதற்கு இன்னமும் நிறைய நாட்களாகும். இந்நிலத்தின் இருபுறம் வேகமான நீரோட்டம் பெருகிச் சென்று கொண்டிருந்தது. இதனால் இது வற்றாமலும் இருக்கலாம். விதை விதைக்கும் பருவ காலம் கழிந்து கொண்டிருந்தது. நாட்கள், மாதங்களானாலும் இந்நிலம் விதை விதைக்கத் தகுந்ததாகுமா என்பதற்கு அத்தாட்சி எதுவுமில்லை. மட்டுரு கவலையிலாழ்ந்தான். என்ன செய்வது என்று குடியானவர்கள் யாவருக்குமே கவலைதான். இந்த வருடம் இப்படியே வீணாகிப் போய் விடுமோ என்ற அஞ்சினர்.

நிலத்தைப் பற்றிய விஷயத்தில் மட்டுருவை விட பூஜனுக்கு அதிகம் தெரிந்திருந்தது. எதற்கும் பார்க்கலாம் என்று கரையின் அருகே, கொஞ்சம் நிலத்தை அகழ்ந்து,

வேலியிட்டு கொஞ்சம் தானியத்தை விதைத்து வைத்தான். ஆறு, ஏழு நாட்களுக்குப் பிறகு அங்கு கொஞ்சம் பசுமை நிழலாடியதைக் கண்டதும் மட்டுரூவிடம் சென்று "மாப்பிள்ளை! கொஞ்சம் தானியத்தை விதைத்துப் பார்த்தாலென்ன?" என்று கேட்டான்.

மட்டுரூ சிரித்தான்– "இந்த மாதங்களில் தானியம் விதைப்பதுண்டாடா?"

பூஜன் தான் சோதித்துப் பார்த்துள்ளதைப் பற்றிக் கூறிவிட்டு, "மதறாஸ், வங்கம் போன்ற மாநிலங்களில் இரண்டு மூன்று போகங்கள் தானியம் பயிரிடுவதாகக் கேள்விப்பட்டேன். இப்பொழுது நம்முடைய மண்கூட தானிய விளைச்சலுக்கு ஏற்றதாக இருக்கும் எனத்தான் தோன்றுகிறது. தண்ணீருக்குப் பஞ்சமில்லை. ஈரப்பசை இன்னும் பல மாதங்களுக்கு இருக்கும். மாப்பிள்ளை! விதை விதைக்கலாம் என்றுதான் நினைக்கிறேன். சும்மா உட்கார்ந்திருப்பதை விட ஏதேனும் செய்து பார்க்கலாமே! விதைத்துப் பார்க்கலாம். விளைந்தால் நல்லது. புதிதாய் ஒரு விஷயம் தெரிந்து கொண்டாற்போலாகும். இல்லாவிடில் போகட்டும்" என்றான் பூஜன்.

மட்டுரூ அக்கணமே எழுந்து, பூஜனுடன் சென்று பள்ளத்தில் முளைத்திருந்த பயிரைப் பார்த்தான். பார்த்ததுமே அவன் விழிகள் வியப்பால் விரிந்தன. "ஓ! உண்மைதானடா! நீ கூறுவது உண்மையெனத் தோன்றுகிறது" என்றான்.

உடனே மற்ற குடியானவர்களுடன் கலந்து பேசப்பட்டது. பூஜன் கூறுவது ஏற்றுக் கொள்ளப்பட்டது. விதை விதைக்க ஏற்பாடுகள் துவங்கலாயின.

* * *

கோபியை வரச் சொல்லிவிட்டு வந்திருந்தான் மட்டுரூ. ஆனால் அன்றிலிருந்து கோபி ஒரு முறைகூட வரவில்லை. படகுக்காரர்கள் மூலம் அவ்வப்போது சமாசாரம் சொல்லி

அனுப்புகிறானே தவிர வரவில்லை. பங்குனி மாதம் நவமி திதியில் முஹூர்த்தம் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. 'பராத்'தில் பத்து பதினைந்து பேருக்கு மேல் வரப்போவதில்லை. பந்துகள், தாயாதிகள் பேச்சு வார்த்தை, சாப்பாடு, தண்ணீர் யாவற்றையும் நிறுத்தி விட்டனர். அதாவது பகிஸ்காரம். இனி எதைப் பற்றிய கவலையுமில்லை.

ஒருநாள் அண்ணி, மட்டுரூவிடம் கேட்டாள் "அண்ணா! நீங்கள் அவரிடம் இங்கு வரும்படி சொல்லியிருந்தீர்கள் அல்லவா?"

"ஆமாம்"

"ஆனால் அவர் வரவில்லை. நீங்கள் பொய்யாகச் சொல்லவில்லையே!"

"பொய் எதற்காகச் சொல்லப் போகிறேன்? ஆனால் அவன் எப்படி வருவான்?"

"ஏனாம்?"

"திருமணத்திற்கு முன்பு எந்த மாப்பிள்ளையாவது, மாமனார் வீட்டிற்கு வருவானா என்ன?" என்று கூறிய மட்டுரூ புன் முறுவல் பூத்தான்.

"சீ ச்சீ — போங்கள் அண்ணா! நீங்கள் கேலி செய்கிறீர்கள்! இங்கு இரவும் பகலும் மனது கிடந்து திக்-திக்கென்று அடித்துக் கொள்கிறது."

"மணமகன் எப்படிப் பட்டவனோ என்றா? எருமை மாதிரி கருப்பா? அல்லது சந்திரன் மாதிரி வெளுப்பா என்றா?"

"ஆமாம், ஆமாம். முதல் முறையாகப் பார்க்கப் போகிறேன் இல்லையா?"

"ஓகோ!"

"எனது பாக்கியத்தில் இன்னமும் என்னென்ன பார்க்க வேண்டியது பாக்கி இருக்கிறதோ! உங்களுடைய இந்த தமாஷாலெல்லாம் ஏனோ பிடிக்கவில்லை........"

"அப்படி என்றால், இதோ வீட்டு வாசலில் கங்கைத்தாய் பெருகி ஓடுகிறாள். கிணற்றில் மூழ்கிச் செத்திருந்தால் நீ நரகத்திற்குத்தான் போவாய். இதோ, இங்கே

கங்கைத்தாயின் மடியில் அடைக்கலம் புகுந்தால் நேராக வைகுண்டத்திற்கே போவாய்" என்ற மட்டுரூ சிரித்தான்.

"நான் அப்படிச் செய்ய நீங்களெல்லாம் விடுவீர்களாக்கும். நான் மீண்டும் அங்கே சென்றால், எத்தனை சங்கடமான நிலையில் அகப்பட்டுக் கொள் வேனோ என்று, அதுபற்றி நினைக்கும் போதே மனது எத்தனை வேதனைப்படுகின்றதென்று உங்களுக்கென்ன தெரியும்? இதை விட உயிரை விடுவதே எளிதானது."

"ஹும்! மீண்டும் அதே வார்த்தைகளா? உன்னுடைய இந்த அண்ணன் இருக்கும் போது கூட உன் கவலை உன்னை விட்டுப் போகவில்லையா? ஏய்? பைத்தியமே! இனி குடும்பம் அமையப் போவதைப் பற்றி யோசி. உனக்காக உயிரைக் கொடுக்க இரண்டு பேர் தயாராக இருக்கும் போது, உன்னை ஏதேனும் சொல்ல, யாருக்கு தைரியம் வரும்? நீயும் கொஞ்சம் தைரியமாக இருக்க வேண்டும். தைரியம், துணிவு இல்லாமல் இந்தப் பழக்கவழக்கங்களை எப்படித் தகர்க்க முடியும்?"

"நீங்களெல்லாம் என்னை விசித்திரமானதொரு பந்தத்தில் கட்டிப் போட்டு விட்டீர்கள்—"

"ஆம், பந்தம் என்பதில் மோகமில்லாவிடில் மனிதன் எதற்காக வாழப் போகிறான்? சின்ன வயதில் ஸ்ரீராமன் கிளியைப் பற்றி ஒரு கதை கேட்டிருக்கிறேன். என்னைப் போலொரு தேவதை இருந்தானாம். அவன் மனசு ஸ்ரீராமன் மேலே மோகம் கொண்டு விட்டதாம். ஸ்ரீராமன் செத்ததும், அந்த தேவனும் செத்துவிட்டானாம். அதே மாதிரிதான், நீ என்று உயிரை விடுகிறாயோ, அன்றே நானும் இறந்து போவேன் போலிருக்கிறது".

"அண்ணா—" எனக் கிறீச்சிட்டாள் அண்ணி.

"இம்மாதிரியெல்லாம் வாயால் சொல்லாதே—"

"அப்படியென்றால், இனி, நீயும் இப்படியெல்லாம் பேசக் கூடாது. புரிந்ததா?" என்று கூறும்போதே மட்டுரூவின் விழிகளில் நீர் ததும்பி விட்டது. "வாழ்க்கை, வாழ்வதற்காகத்தானிருக்கிறது. சூழ்நிலைகளுடன் போராடி,

வெற்றி காண்பதின் பெயர்தான் வாழ்க்கை. மனத்தை வருத்திக் கொண்டு உலகத்தில் வாழ முடியாது."

"நான் கூட ஆண்பிள்ளையாக இருந்திருந்தால்—"

"இல்லை— பெண்ணாக இருந்தாலும் அப்படிச் செய்து காட்டு. அப்பொழுதான் நான், எல்லோரிடமும், எனக்கொரு தங்கை இருக்கிறாள், அவள் தைரியத்தில் ஆண்பிள்ளைகளைக் கூட மிஞ்சி விடுவாள், என்று பெருமைப்பட்டுக் கொள்ள முடியும்."

"உன்னுடன் இருக்கும் போது எந்தப் பயமோ, அச்சமோ இருப்பதில்லை அண்ணா."

"கங்கைத்தாயின் நிழலுக்குள் வந்து விட்டால், எல்லாப் பயமும் ஓடி விடும். இம் மண்ணும், காற்றுமே அப்படி! லக்னாவின் அம்மா கூட முதலில் ரொம்பவும் பயப்பட்டுக் கொண்டிருந்தாள். இங்கே வந்து என்னுடன் வாழத் துவங்கிய பிறகு பயமும் மாயமாய் மறைந்து விட்டது. இப்பொழுதுதான் பார்க்கிறாயே, அவள் எப்படி இருக்கிறாள் என்று!"

"அண்ணா! நீயும் என்னுடன் வந்து அங்கே கொஞ்ச நாட்கள் இருக்க வருவாய் அல்லவா?"

"ஏன்? கோபியின் மீது நம்பிக்கை இல்லையா?"

"இருக்கிறது. ஆனால் அதிகமில்லை. உன் மீது இருக்கும் நம்பிக்கை அவர் மீது இல்லை."

"அடே! லக்னாவின் அம்மா!" மட்டுரூ உரக்கக் குரல் கொடுத்தான் "கேட்டாயா? இவள் என்ன சொல்லுகிறாள் என்று! இவள் உனக்கு சக்களத்தி ஆகிவிட்டாள் போலிருக்கிறது?"

லக்னாவின் அம்மா, அதாவது மட்டுரூவின் மனைவி, தயிர் கடைந்து வெண்ணை எடுத்துக் கொண்டிருந்தவள், சிரித்துக் கொண்டே அங்கிருந்தபடி சொன்னாள் "இந்த மாதிரி சக்களத்தி கிடைத்தால், கழுத்தில் மாலையாக்கிப் போட்டுக் கொள்வேன். தங்கச்சி! இங்கேவா? இந்த மோரைக் கொண்டு போய் உன் அண்ணனுக்குக் கொடும்மா! எங்கேயாவது குடிக்காமலேயே போய்விடப்

போகிறார்! இப்பொழுதெல்லாம் இவருக்கு எதுவும் நினைவிருப்பதில்லையே!"

அண்ணி கொணர்ந்து கொடுத்த மோரைக் கடகட வென்று குடித்துவிட்டு "நல்லது! நான் வரட்டுமா! இன்னும் நிறைய ஏற்பாடுகளைக் கவனிக்க வேண்டியிருக்கிறது. முஹூர்த்தத்திற்கு இன்னமும் இருபது, இருபத்தி ஐந்து நாட்கள்தான் இருக்கின்றன. இன்று பூஜனை நகரத்திற்கு அனுப்ப வேண்டும்" என்றவன்– ஏதோ ஒரு பாடலை முணுமுணுத்தவாறே வெளியே சென்றான்.

* * *

கங்கைத்தாயின் முந்தாணி பச்சை வண்ணத்தில் தோய்த்தெடுத்தாற்போல் காற்றிலே அசைந்தாடியது. இதைக் கண்ட குடியானவர்களின் உள்ளம் பூரித்தது. மண்வெட்டியால் வெட்டி எடுக்க வேண்டியது போல் தானியங்கள் அபரிமிதமாய் விளைந்திருந்தன. ரஃபி பயிர் விளைச்சல் செய்யவில்லையே என்ற வருத்தமே இருக்கவில்லை அவர்களுக்கு. அதைவிட அதிகமாகவே விளைச்சல் கண்டிருந்தது. கங்கைத்தாயின் லீலை எல்லையற்றது. அவளது மடியில், முந்தாணி விரிப்பில் என்னென்ன நிறைந்து கிடக்கின்றது என்று யாரால் கணக்கிட முடியும்? அனுமானிக்க முடியும்? யார் இந்த மண்ணிற்கு எத்தனை சேவை செய்தாலும், கங்கைத்தாய் அவனுக்கு அந்த அளவிற்கு ஈந்துவிடுகிறாள். உழைப்பு என்றேனும் வீணாகி இருக்கிறதா?

நகரத்திலிருந்து திரும்பியதும், பூஜன் மூட்டையைத் தன் அக்காவின் முன்னே வைத்தான். அவள் சமையலறையில் மட்டுருவிற்கு உணவு பறிமாறிக் கொண்டிருந்தாள். அண்ணி ஒருபுறம் அமர்ந்து முறத்தில் கோதுமையைப் புடைத்துக் கொண்டிருந்தாள்.

மட்டுரூ கையிலிருந்த கவளத்தை விழுங்கி விட்டு, மனைவியை நோக்கி, "திறந்து பார்! என்னென்ன

இருக்கிறது பார்!'' என்றான். பிறகு அண்ணி இருக்கும் பக்கம் பார்த்து– ''சரி! நீயும் வா! இல்லாவிடில் உன் அண்ணி தானே எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு விடுவாள்'' என்றான்.

அண்ணி வந்து நின்றதும் மட்டுரூவின் மனைவி மூட்டையை அவிழ்த்தாள். புத்தம்புதிய வெள்ளி ஆபரணங்களின் தகதகப்பு கண்களைக் கூச வைத்தது. மட்டுரூவின் மனைவியின் முகம் மகிழ்ச்சியினால் பிரகாசித்தது. அவள் ஒவ்வொன்றாக எடுத்துப் பார்க்கலானாள். பிறகு மனத்தில் பொங்கும் ஆர்வத்தைக் அடக்கிக் கொண்டு அண்ணியின் பக்கம் திரும்பினாள்.

காப்பு, அட்டிகை, பாஜுபந்த், கால்கொலுசு– என ஒவ்வொரு நகையும் ஒவ்வொரு ஜோடி. மட்டுரூவின் மனைவி கேட்டாள் ''ஜோடியாக எதற்கு வாங்கினீர்கள்? அதுவும் இவ்வளவு?''

''ஏன்?'' என இடைமறித்தான் மட்டுரூ. ''நம் வீட்டில் நகை போட்டுக் கொள்ள இரண்டு பேர் இல்லையா?''

''அண்ணா?'' அண்ணி கத்தி விட்டாள்

''எனக்காக நீங்கள் எதற்காக வாங்கினீர்கள்?''

''ஏனாம்? அண்ணா வீட்டிலிருந்து வெறும் கழுத்தோடு ஒன்றுமில்லாமல் புக்ககம் போவாயா என்ன? யாரேனும் பார்த்தால் என்ன சொல்லுவார்கள்! பைத்தியமே! எனக்குப் பெண் குழந்தை இல்லையென்று உனக்கு ஏன் புரியவில்லை?'' கடைக்கண்ணால் மனைவியைப் பார்த்தவாறே மட்டுரூ தொடர்ந்தான்– ''பிறக்கும் என்ற நம்பிக்கையும் இனி இல்லை. பெண் குழந்தையின் ஆசையை உன்னிடம்தான் தீர்த்துக் கொள்ள வேண்டும். இவளிடம் நகை வாங்கித் தருவதாக எத்தனை முறை சொல்லி இருக்கிறேன். இன்று உன் அதிர்ஷ்டத்தினால் இவளுக்கும் கிடைத்து விட்டது. பிடித்திருக்கிறதா சொல்!''

இச்சமயம் வெளியே இருந்து ஒரு குடியானவன் கத்தினான்– ''பயில்வான் அண்ணே! பூல்சன் கைதாகி விட்டான். சேதி சொல்ல ஒரு ஆள் வந்து வெளியே

நிற்கிறான். அவன் வந்து—"

சாப்பாட்டை அப்படியே விட்டு விட்டு மட்டுரூ எழுந்து வாசல் நோக்கிப் பாய்ந்து சென்றான். வெளியே நிறையக் குடியானவர்கள் கூடி நின்றனர். எல்லோர் முகத்திலும் கவலை தேங்கியிருந்தது. விசாரித்ததின் பேரில் சேதி கொணர்ந்தவன் சொன்னான்– "பூல்சனின் அப்பா, படகுக்காரனிடம் சேதி சொல்லி அனுப்பி இருக்கிறார். பூல்சன் இன்று பகலில் கிராமத்திற்குள் வந்ததும் கைது செய்யப்பட்டு விட்டானாம். நோய் வாய்ப்பட்டிருந்த அம்மாவைப் பார்த்து வர அவன் இன்று காலை போயிருக்கிறான். பகலில் பத்துப் போலீஸ்காரர்கள் வந்து அவனைக் கைது செய்திருக்கிறார்கள். மற்றவர்களையும் தேடினார்களாம். நூறு பேர் மீது வாரண்ட், ஆற்றங்கரை நிலம் விஷயமாக, என்று சொன்னார்களாம். ஜமீன்தார்கள் கிரிமினல் வழக்குத் தொடர்ந்திருக்கின்றனராம்".

இதைக் கேட்ட யாவரும் திகைத்து விட்டனர். ஜமீன்தார் கள் ஏதேனும் செய்வார் என்பது எல்லோருக்கும் தெரிந்ததுதான். ஆனால் திடீரென்று இவ்வாறு வாரண்ட் பிறப்பிக்கப்படும் என்று யார் நினைத்தார்கள். சிந்தித்துப் பார்த்த பின் மட்டுரூ சொனனான் "எல்லாப் படகுகளையும் இக்கரைக்குக் கொண்டு வரச் சொல். அக்கரையில் ஒரு படகுகூட இருக்க வேண்டாம். இங்கிருந்து அக்கரை செல்ல படகுகள் தயாராக இருக்கட்டும். எல்லோரிடமும் எச்சரிக்கையாக இருக்கச் சொல். ஒருவரும் கிராமத்திற்குள் செல்ல வேண்டாம் ஏன்று எல்லோரிடமும் சொல்லி விடுங்கள். தடிக் கம்புகள் தயாராக இருக்கட்டும். ஒரே ஒரு படகை மட்டும் சிசவன் படித்துறைக்கு எதிரே அங்கிருந்து சேதி கொண்டு வர அனுப்பிவிடு. பூல்சன்னின் குழந்தை குட்டிகள் எங்கே இருக்கின்றனர்?"

"இங்குதான் தங்கள் குடிசையில் இருக்கிறார்கள். எல்லோரும் அழுது கொண்டிருக்கிறார்கள்" என்றான் ஒருவன்.

"போய்! அவர்களைக் கவனித்துக் கொள்"– என்று

மேலே நடந்தவாறே கூறினான் மட்டுரூ. "சிசவன் படித்துறைக்கு யார் போகிறார்கள்? கெட்டிக்காரனாக ஒருவன் போகட்டும். கிராமங்களில் கூட நமது ஆட்களைத் தயாராக இருக்கும்படி சொல்ல வேண்டும். இந்த ஜமீன்தார்கள் இப்பொழுது, அடிதடி, கொலை கொள்ளை வரை இறங்கிவிட்டார்கள்."

## 17

மறுநாள் சரசரவென்று ஒவ்வொன்றாகக் குடிசைகள் பிரிக்கப்பட்டு, நாணற் புதற்காட்டிற்குள் போடப்பட்டன. கரையோரங்களில் இளைஞர்கள் காவலுக்கு அமர்த்தப்பட்டனர். போலீஸ்காரர்கள், கிராமங்களில் தினமும் சுற்றி வருகிறார்கள் என்று செய்தி கிடைத்தது. ஆனால் ஆற்றங்கரைப் பிரதேசத்து குடியானவர்களுக்குத் தாங்கள் இந்தக் காட்டிற்குள் இருக்கும் வரை தங்களை யாரும் ஒன்றும் செய்ய முடியாது என்று தெரியும். இந்தக் கோட்டைக்குள் புகுந்து வரும் எந்த எதிரியும் உயிருடன் தப்பிச் செல்ல முடியாது. எல்லோரும் எச்சரிக்கையுடன் இருந்தனர். ஒருவன் கூடத் தனது கரையோரக் கிராமத்திற்குள் செல்லவில்லை. தேவையான பொருட்கள் அக்கரைக்குக் கடந்து சென்று பீகாரின் கிராமங்களிலிருந்து கொண்டு வரப்பட்டன. ஒருபுறமிருந்து தொடர்புகள் அறுபட்டு மற்றொரு புறத்துடன் இணைந்து கொண்டன. எல்லாம் ஒழுங்காக, சரிவர நடந்தது. எந்த விதமான சிரமமோ, வருத்தமோ இல்லை. இரு புறத்து நீரோட்டங்களும் முன் போலவே பெருகிக் கொண்டிருந்தன. வயல்களில் தானியக் கதிர்கள் பசுமையுடன் காற்றிலே அசைந்தாடின. காற்று குளுகுளுவென்று வீசியது. எவ்விதமான மாற்றமும் இல்லை.

ஆனால் மட்டுரூ மட்டும் கவலையோடு இருந்தான். தன்

வாழ்வில் என்றுமே, எதற்கும் கவலைப்படாத மட்டுரூ இன்று நிம்மதி இழந்திருந்தான். தங்கையின் திருமணமல்லவா? நல்ல சமயத்தில் விக்னம் எதும் ஏற்பட்டுவிடக் கூடாதல்லவா? பிறகு தன் ஸ்ரீராமனுக்கு எந்த முகத்தைக் காட்டுவான்? இப்பொழுதெல்லாம் கங்கைத்தாயின் பால் சிரத்தையும் பக்தியும் மிகவும் அதிகமாகி விட்டது. உட்கார்ந்தால், எழுந்தால், உறங்கினால், விழித்துக் கொண்டால், அவன் வாயிலிருந்து "என் தாயே! என் படகைக் கரையேற்றிவிடு தாயே!.... என் தாயே...." என்ற சொற்கள்தான் வெளிப்பட்டன.

தங்கை, பெண்– இவர்களின் பொறுப்பென்றால் என்ன என்பது இப்பொழுதுதான் அவனுக்குப் புரிந்தது. சாப்பாடு, தண்ணீர் எதுவும் பிடிக்கவில்லை. மனைவியோ, அண்ணியோ, கேட்டால் துயரத்துடன் "மனதிற்குப் பிடிக்கவில்லை. என் தங்கை இங்கிருந்து போய்விட்டால் இந்தக் குடிசை எத்தனை சோகம் நிறைந்ததாகிவிடும்" என்பான்.

"அப்படியென்றால் ஏன் அனுப்புகிறீர்கள்! நிறுத்திக் கொள்வதுதானே" என்று கேலி செய்வாள் மனைவி.

"என்ன சொல்லட்டும்? ரகு குலத்தவர்கள் வாக்குத் தவறமாட்டார்கள்" என முணுமுணுத்தவாறே அங்கிருந்து நகர்ந்து விடுவான். வெளியே வந்ததும் "என் தாயே! என்னைக் கடைத்தேற்றிவிடம்மா? என் தாயே"– என்ற பழைய பல்லவி தொடரும்.

கங்கைத்தாய் தன் மகனின் வேண்டுகோளைச் செவி மடுத்துவிட்டாள். அந்த நல்ல நாளும் நல்லவிதமாகவே வந்தது. மாலை நேரத்துக் கங்குலில், கதிரவன் மறைந்ததுமே, சிசவன் படகுத்துறைக்கு 'பராத்' வந்திறங்கியது. நாவிதன் பண்டிதர், மணமகன், மேலும் ஐந்து பேர். வாத்தியங்களின் முழக்கமில்லை. ஏதோ அக்கரை செல்ல வந்த பயணிகள் போலிருந்தனர் அவர்கள்.

இருந்தும்கூட அன்று இரவு முழுவதும் நாணற் புதற்காட்டில் காற்று ஷெனாய் வாத்தியம் போன்று இசை

பாடியது. கங்கைத்தாயின் சிற்றலைகள், குடியானவப் பெண்களின் குரலோடு குரலிசைத்து இரவு முழுவதும் மங்கல கீதங்களை இசைத்தன. குடியானவர்களின் கொட்டு மேளங்கள் முழங்கின. விரகதாபத்தில் வருத்தியவர்கள், இணைந்த மகிழ்ச்சி அலை வீசியது. இரவு முழுவதும் வெறும் பனித்துளி டப்–டப் என்று சொட்டிக் கொண்டே இருந்தது.

காட்டின் சின்னஞ்சிறிய பறவைகளும், ஆற்றின் பெரிய பெரிய பறவைகளின் கூட்டமும் ஒன்றாகக் குரலெடுத்து உதய கானம் பாடிய தருணத்தில் மணமகளை விடை கொடுத்தனுப்பும் ஏற்பாடுகள் துவங்கின. புக்ககம் வரும் முன் தன் தாயை அணைத்துக் கொண்டு கண்ணீர் பெருக்கியது போன்றே இன்றும் மணமகள் மட்டுரூவின் மனைவியைக் கட்டிக் கொண்டு கண்ணீர் வடித்தாள். லக்னா மற்றும் குழந்தைகளை முத்தமிட்டுக் கொஞ்சினாள். அன்றொரு நாள் தன் அண்ணனின் குழந்தைகளிடமிருந்து விடை பெற்றது போலவே இன்றும் விடை பெற்றாள். பிறகு பூஜனிடம் விடை பெற்றுக் கொண்டாள். மட்டுரூ ஏற்பாடுகளைக் கவனிக்க இங்குமங்குமாய் ஓடியாடிக் கொண்டிருந்தான். ஏனோ தெரியவில்லை அவனுடைய மனம் பெரிதும் நிம்மதியற்றிருந்தது. தங்கை தன் கால்களைப் பற்றிக் கொண்டு அழுதாள்; கடைசியில் 'பராத்' வாசலுக்கு வந்து விட்டது. விடைபெறும் தருணம் நெருங்கி விட்டது. சகோதரி அவனுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறாள். இனி, எங்கே ஓடி விட முடியும்? மனத்தைக் கல்லாக்கிக் கொண்டு அவன் நின்றான். மணமகள் அவன் பாதங்களைப் பற்றிய வண்ணம் கண்ணீர் வடித்தாள். மட்டுரூவின் மனைவி அவளைத் தூக்கி நிறுத்தப் பெரிதும் முயற்சித்தாள். ஆனால் மணமகள் பற்றியிருந்த பாதங்களை விடவில்லை. மட்டுரூ சிலை போல் நின்றான். அவன் மௌனமாகவே எத்தனை கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தானோ யார் கண்டது?

முடிவில் மணமகளைத் தூக்க அவன் குனிந்த போது

கல்லைப் போல் இரு கண்ணீர் முத்துக்கள் தெறித்து விழுந்தன. அவனது தோளில் சிரம் சாய்ந்தது, மணமகள் கேட்டாள் "அண்ணா! நீயும் என்னுடன் வருகிறாய் அல்லவா?"

"இதென்னம்மா சொல்லுகிறாய் நீ!" எனப் பதறினாள் மட்டுரூவின் மனைவி, "அவர் மீது வாரண்ட் இருக்கிறதே"

மட்டுரூ அவளைத் தடுக்க விரும்பினான். ஆனால் அவள் தன்பாட்டில் கூறிவிட்டாள்.

தலை நிமிர்ந்த மணமகள், எப்படியோ தனது துயரத்தை அடக்கிக் கொண்டு "வேண்டாம் அண்ணா! நீங்கள் வர வேண்டிய அவசியம் இல்லை. ஆனால் இந்தத் தங்கையை மட்டும் மறந்து விடாதீர்கள். அம்மா, அப்பா, உடன் பிறந்தவள் யாவரையும் இழந்து விட்ட நான் உங்களை அடைந்துள்ளேன். நீயும் என்னை மறந்துவிட்டால், நானெப்படி உயிர் வாழ்வேன்" என்றாள்.

"இல்லை.. இல்லை— என் ஸ்ரீராமன்! உன்னை மறந்து விட்டு நானெப்படி உயிர் வாழ முடியும்? நீ தைரியமாய் நடந்து கொள்..... நான்— நான்—" மேலும் ஏதும் கூற இயலாதவனாய் மட்டுரூ அவ்விடம் விட்டகன்றான்.

ஆற்றங்கரை வரை மட்டுரூ, கோபிக்குப் பலவாறு, பல விஷயங்களையும் எடுத்துரைத்துக் கொண்டிருந்தான். "கவலைப்பட வேண்டிய அவசியமேதுமில்லை. நான் எல்லாவற்றிற்கும் தயாராக இருக்கிறேன்" என கோபி உறுதி கூறினான். எனினும், மட்டுரூவிற்குத் திருப்தி ஏற்படவில்லை. "உங்கள் மீது எத்தனை நம்பிக்கை உள்ளதோ, அத்தனை அவர் மீது இல்லை" என அவள் கூறியது காதில் ஒலித்துக் கொண்டே இருந்தது. படகு ஆற்றில் சென்று கொண்டிருந்தது. கரையில் குடியானவர்கள், குழந்தைகள் குடியானவப் பெண்களுடன் நின்றிருந்த மட்டுரூ மனதிற்குள் குமைந்து கொண்டிருந்தான். அவனது துயரம் மிகுந்த கண்கள், தொலைதூரத்தில் தனது தங்கையை வரவேற்கக் காத்திருக்கும் பெரும் புயலைப் பார்த்துக் கொண்டிருந்தது. "ஐயோ! அவன் ஏன்

அவளுடன் போகவில்லை? ஏன் போகவில்லை?''

* * *

வீடு திரும்பிய மட்டுரூ வருத்தத்துடன் பாயில் படுத்துக் கொண்டான். இலேசான வெயில் ஏறிக் கொண்டிருந்தது. பால்குவளைகள் ஒருபுறம் கிடந்தன. அவற்றின் மீது ஈக்கள் மொய்த்துக் கொண்டிருந்தன. களைத்துச் சோர்ந்து போயிருந்த மட்டுரூவின் மனைவிக்கு சுய நினைவே இல்லை. உண்மையிலேயே வீடு எத்தனை சோகமயமாய் ஆகிவிட்டது? மட்டுரூவின் நெஞ்சு கனத்தது. வாய்விட்டு ஓவென்று அலறி அழ வேண்டும் போலிருந்தது. தங்கையுடன் தானும் ஏன் போகவில்லை என்ற ஒரே வருத்தம் மனத்தைக் குடைந்து கொண்டிருந்தது.

நெடு நேரத்திற்குப் பின்னர் அவன் மனைவி எழுந்தாள். இப்படியே உட்கார்ந்திருந்தால் காரியம் எப்படி நடக்கும்? வேலை எல்லாம் அப்படி அப்படியே கிடந்தது. கணவனிடம் வந்து "போய். குளித்துவிட்டு வாருங்கள். எத்தனை நேரம் இப்படியே படுத்துக் கிடப்பீர்கள்?'' என்றாள்.

"ஹூம். தோய்த்துக் குளிக்கிறேன்—'' மட்டுரூ சுரத்தில்லாமல் பேசினான். "நான் தங்கச்சியுடன் போயிருக்க வேண்டும். பாவம்! அவளுக்கு என்னென்ன நடக்கின்றதோ?''

"கோபி ஆண் பிள்ளை இல்லையா?'' என்று வெகுண்டாள் மனைவி. "நீங்கள் அனாவசியமாய் கவலைப் படுகிறீர்கள். எழுந்திருங்கள்'' என்றவாறே அவன் போர்த்தியிருந்த போர்வையை இழுத்தாள்.

"ஆண்பிள்ளையானால் என்ன? என்ன இருந்தாலும், பெற்றவர்களுக்கு மரியாதை கொடுத்துதானே ஆக வேண்டும்! எனக்குப் பயமாக இருக்கிறது. எங்கே அவன் கொஞ்சம் பலவீனப்பட்டு விட்டாலும் என் ஸ்ரீராமனின் நிலைமை என்னவாகும்? நான் கூடவே போயிருக்க

வேண்டும்''.

''ஏதாவது ஏடாகூடமாக நடந்தால் சேதிவருமல்லவா? இப்பொழுது நீங்கள் எழுந்திருங்கள்! எவ்வளவு நேரமாகிவிட்டது பாருங்கள். வீட்டு வேலையெல்லாம் அப்படி அப்படியே கிடக்கிறது'' என்றவள் உள்ளே சென்று வேஷ்டி, பல்குச்சி எல்லாம் எடுத்து வந்து அவன் கையில் கொடுத்தாள். மட்டுரூ ஒரு வழியாய் எழுந்து ஆற்றங்கரையை நோக்கி நடந்தான்.

இன்று வழக்கம்போல் கங்கையில் குளிக்கும்போது ஏற்படும் ஆனந்தம் உண்டாகவில்லை. வாழ்க்கையில் இதுதான் முதன் முறையாக ஏற்படும் அனுபவம். கங்கைத்தாய் கூட வருத்தமுற்றிருப்பதாக அவனுக்குத் தோன்றியது. அவளுடைய நீரோட்டத்தில் அந்த வேகம் இல்லை. அலைகளிலே அந்தத் துடிப்பு இல்லை. எங்கோ, ஏதோவொன்று மறைகழண்டு தளர்ந்து விட்டது. அலங்காரம், ஏற்பாடுகளெல்லாம் அழகிழந்து போய்விட்டன.

''உங்களுடன் இருக்கும்போது எந்த விதமான பயமோ, அச்சமோ தோன்றவில்லை. மீண்டும் அங்கே போனால் என்னென்ன ஆபத்துகளும், சிக்கலான சூழ்நிலைகளும் ஏற்படுமோ என்று எண்ணுகையில் மிகவும் பயமாக இருக்கிறது. நீங்களும் கொஞ்ச நாட்கள் என்னுடன் இருக்க வருவீர்களா?'' ''உங்கள் மீது எத்தனை நம்பிக்கை உள்ளதோ அத்தனை அவர் மீது இல்லை.......'' மட்டுரூவின் உள்ளத்தில் இந்த வார்த்தைகளே மீண்டும் மீண்டும் ஒலித்தன. தான், தெரிந்து கொண்டே தனது ஸ்ரீராமனை சிக்கலான சூழ்நிலைக்குள், தன்னந்தனியே தள்ளிவிட்டதாக அவனுக்குத் தோன்றியது. மனதிற்குள்ளே அவன் தவித்து, துடித்துப் போனான், அவன் ஏன் போகாமலிருந்துவிட்டான்? அவளை ஏன் தனியே விட்டுவிட்டான்? நம்பிக்கை துரோகம் செய்து விட்டானா?

வாரண்ட்! இங்கும் அவனுக்குக் கடமை இருக்கிறது. அவனுக்கு ஏதேனும் நேரிட்டுவிட்டால், இங்கு அவனுடைய

கூட்டாளிகளின் நிலைமை என்னவாகும்? அவனுடைய கூட்டாளிகள் முன்னைப்போல் முட்டாள்கள் அல்ல.

விவரம் அறிந்தவர்கள். அவர்கள் தன் கால்களிலேயே நிற்கத் தெரிந்து கொள்ள வேண்டும். மட்டுரூ என்றென்றும் அவர்களுடன் இருக்க முடியுமா என்ன? இது எப்படி சாத்தியம்? மட்டுரூவின் வாழ்வில் முன்னர் ஒரே ஒரு கடமைதானிருந்தது. இப்பொழுது இரண்டு கடமைகள் உள்ளன. அவன் தனது இரண்டு கடமைகளையும் கொண்டு செலுத்தியாக வேண்டும். சமாளித்தாக வேண்டும். இரு தரப்பிலும் உள்ள எதிரிகள் சம பலம் வாய்ந்தவர்கள். ஒருவனின் அநீதியான பிடிக்குள் சிக்கி எத்தனை குடியானவர்கள் தவித்துத் துடித்துக் கொண்டிருக்கின்றனர். இன்னொருவனின் ரத்த வெறி கொண்ட தாடையில் சிக்கி ஒரு சகோதரி வேதனை தாளாமல் அரற்றிக் கொண்டிருக்கிறாள். அவள் ஒருத்தி மட்டுமல்ல! இன்னமும் எத்தனை எத்தனையோ பேர் தவித்துக் கொண் டிருக்கிறார்கள்? அவர்களுக்கு ஒரு வழி தேடியாக வேண்டும்.

படித்துறையில் அமர்ந்திருந்த மட்டுரூ ஏதேதோ நினைவுகளில் ஆழ்ந்தவனாய் சிந்தனையில் ஒன்றியிருந்தபோது பூஜன் வந்து "அக்கா! உங்களைக் கூப்பிடுகிறாள். வாருங்கள். சீக்கிரம். எப்பொழுதோ வந்தவர், இப்படியே உட்கார்ந்திருக்கிறீர்களே?" என்றவாறே மட்டுரூவின் ஈர வேஷ்டியை கையில் எடுத்துக் கொண்டான்.

நடந்தவாறே மட்டுரூ கேட்டான் "பூஜன்! உன்னையொன்று கேட்கட்டுமா?"

"கேளுங்கள்"

"நானில்லாவிடில், நீங்களே எல்லாவற்றையும் சமாளித்துக் கொள்வீர்களா?"

"நீங்கள் இல்லாமல் போவதென்பது எப்படி? கங்கைத்தாயை விட்டுப் பிரிந்து விட உம்மால் முடியுமா?"

"இல்லையில்லை. அது சாத்தியமில்லை. ஆனால்!

நானில்லை என்று வைத்துக் கொள் அப்பொழுது?''

''ஐயோ! அதெப்படி நினைப்பது?''

''அடே அந்த முறை அது நடக்கவில்லை, என்னால் கங்கைத்தாயைத் துறந்துவிட முடியுமா என்ன? ஆனால், எதிர்பாராதவிதமாய் போலீசார் என்னைக் கைது செய்கிறார்கள் என்று நினைத்துக் கொள். முன்பு அப்படி நடந்தது அல்லவா? அதுபோல—''

''தற்சமயம் இது எப்படி சாத்தியம் மாப்பிள்ளை? அச்சமயம் நீங்கள் தனியாக இருந்தீர்கள். இப்பொழுதோ, நூற்றுக்கணக்கான இளைஞர்கள் தங்களுக்காக உயிரையும் கொடுக்கத் தயாராக இருக்கின்றனர். எங்கள் எல்லோருடைய உயிரே போனாலும் சரி, தங்களது மயிரிழைக்கும் தீங்கு நேர விடமாட்டோம். இந்த மண்ணின் உயிர்நாடி நீங்கள்தான்.''

''அதுசரி– ஆனால்—''

''இல்லை, மாப்பிள்ளை! அப்படிப்பட்ட சந்தர்ப்பம் வரவே வராது.''

''ஓ— உன்னுடன் பேசுவதே கஷ்டம் பூஜன்! சரி! இப்படி வைத்துக் கொள், ஒருக்கால் நான் இறந்து விட்டால்!''

''மாப்பிள்ளை?'' பூஜன் கத்திவிட்டான். ''இந்த மாதிரியான வார்த்தைகளை ஏன் சொல்லுகிறீர்கள்?''

''பூஜன்!'' கம்பீரமான, வேதனை நிரம்பிய குரலில் கூறினான் மட்டூரு. ''கங்கைத்தாய், இந்த மண், இந்த வயல்கள், இந்தக் காற்று, இந்தத் தண்ணீர், இந்த அடர்ந்த காடு, இந்தக் குடியானவர்கள், எனது தோழர்கள், கூட்டாளிகள் ஆகியவற்றின்பால், என் குழந்தைகளைப் போல்— ஏன் அதை விடவும் அதிகமாகவே எனக்கு அன்பும், பாசமும் உண்டு. ஒருநாள் நான் இல்லாமல் போய்விடும்போது, இந்த அநியாயம் பிடித்த ஜமீன்தார்களின் கால்கள் இந்த மண்ணில் மீண்டும் வேரூன்றி விடுமோ என்று தோன்றியது.''

''இல்லை, மாப்பிள்ளை! இல்லை. இதுதான் விஷயம் என்றால் கேட்டுக் கொள்ளுங்கள். உனது தோழர்கள்,

கூட்டாளிகள் தமது உடலில் கடைசி சொட்டு ரத்தம் இருக்கும் வரை இதைக் காப்பாற்றுவார்கள். கடந்து போன காலம் எப்படித் திரும்பி வராதோ, அதே போல், இந்த ஜமீன்தார்களின் கால்கள் மீண்டும் இங்கு வேரூன்ற முடியாது. இது உறுதி. நாளுக்கு நாள் எங்கள் பலம் அதிகரித்துக் கொண்டே வருகிறது . நமது கூட்டாளிகளின் எண்ணிக்கையும் அதிகரித்துக் கொண்டே வருகிறது. காலம் முன்னேறிக் கொண்டு வருகிறது. மாப்பிள்ளை! அப்படியெல்லாம் எதுவும் நேர்ந்து விடாது. இங்குள்ள ஒவ்வொரு குடியானவனும் தானும் ஒரு மட்டுரூவாகும் எண்ணம் கொண்டிருக்கிறான். நீங்கள் இதைப் பற்றியெல்லாம் கவலைப்படாதீர்கள்! மாப்பிள்ளை!''

'சபாஷ்' என பூஜனின் முதுகில் தட்டிக் கொடுத்தான் மட்டுரூ. ''இன்று நான் மிக்க மகிழ்ச்சியுடனிருக்கிறேன். ரொம்பவும் மகிழ்ச்சி! பூஜன்! இப்படித்தானிருக்க வேண்டும்..... இப்படித்தான்!''

உண்மையிலேயே மட்டுரூவின் முகத்தில் படர்ந்திருந்த கவலை அகன்றுவிட்டது. முகம் முன் போலவே பிரகாசமடைந்தது. கண்கள் ஒளிபெற்று மின்னின.

ஆனால் தன் குடிசையில் நுழைந்ததுமே மீண்டும் கவலை சூழ்ந்து கொண்டது.

அவன் மனைவி சமையலறையில் பலகையைப் போட்டாள். லோட்டாவில் தண்ணீர் எடுத்து வைத்தாள். பிறகு– ''வாருங்கள்! ரொட்டி சாப்பிடுங்கள்'' என்றாள்.

உணவருந்த உட்கார்ந்த மட்டுரூ, முதல் கவளத்தை எடுத்தவாறே சொன்னான் ''மனது சரியில்லை''.

''எப்படிச் சரியாக இருக்கும்? உமது ஸ்ரீராமன் போய்விட்டாள் அல்லவா?''

''ஊஹூம், அவள் போனது பற்றிய கவலை இல்லை''

''பின்னென்ன?''

''அங்கு அவளுக்கு என்ன நேரிடுகிறதோ? இதற்குள் போய்ச் சேர்ந்திருப்பாள்.''

''என்ன நேரிடுமாம்! நானும் நீயும் ஒத்துப் போனால்

மூன்றாமவன் என்ன செய்ய முடியும்? கோபி தயாராக இருந்தால், யார் அவனை என்ன செய்து விட முடியும்?''

''அது சரி! ஆனால் இந்தக் கொலைகாரச் சமுதாயம் இருக்கிறதே! எத்தனையோ கோபிகளை இது உயிருடன் விழுங்கி ஏப்பம் விட்டிருக்கிறது. கடித்து குதறி இருக்கிறது. கோபி கொஞ்சம் பலவீனமானவனும் கூட இல்லாவிடில் இக்கதை இத்தனை தூரம் வளர்ந்திருக்குமா என்ன? ஏதோ அதிர்ஷ்டவசமாய் அன்று கோபி கிணற்று மேட்டில் படுத்து விழித்துக் கொண்டிருந்திருக்கிறான். இல்லாவிடில் கதையே முடிந்திருக்க எத்தனை நாழிகை ஆகியிருக்கும்? கோபியின் அம்மா அவன் அண்ணியைக் கடுமையான வார்த்தைகளால் திட்டித் தீர்த்துக் கொண்டிருக்கும் போதே, கோபி தைரியமாக முன்னே வந்து தன் அண்ணியின் கையைப் பிடித்திருந்தால், யார் அவனை என்ன செய்திருக்க முடியும்? ஆனால் அவனால் அப்படிச் செய்ய முடியவில்லையே! ஒரு பெண்ணிற்கு ஆணின் மீது ஒருமுறை நம்பிக்கை தளர்ந்துவிட்டால் பிறகு அது ஏற்படுவது மிகவும் கடினம். ''உங்கள் மீது நம்பிக்கை இருக்கிறது. ஆனால் அவர் மீது இல்லை''– என்று அவள் சொன்னாள் அல்லவா?''

''உங்கள் மீதுள்ள நம்பிக்கையினாலேயே அவள் வாழ்க்கை கரையேறி விடுமா? வந்து—''

''அடே! அதிருக்கட்டும். யார் யாருடைய வாழ்க்கையைக் கரையேற்றுகிறார்கள்? இதெல்லாம் அந்தந்த நேரம். அவளுக்கு அந்த நேரத்தில் என் உதவி தேவையாக இருந்தது. இரண்டொரு நாளில் புயலின் வேகம் கடந்து போய்விட்டால், பின்னால் எல்லாம் தானாகவே சரியாகிவிடும்!''

''எல்லாம் சரியாகி விடும். முதலில் சாப்பிடுங்கள்.'' சின்னத் தட்டில் பாலை ஊற்றியவாறே அவள் பேச்சை முடித்து விட்டாள். ''நம்மால் என்ன முடியுமோ, செய்து விட்டோம் அல்லவா? அன்னியர்களுக்காக யார் இத்தனையெல்லாம் செய்கிறார்கள்?''

"சரி! லக்னா அம்மா! என்ன இருந்தாலும் நீ பெண் அல்லவா! நான், என் குழந்தைகளைத் தவிர உனக்குத் தன்னுடையவர்கள் என்று யாரும் இல்லை".

வேதனை மிகுந்த குரலில் கூறினான் மட்டுரு– "நான் யாரையேனும் எனக்குற்றவர்களாக ஆக்கிக் கொண்டால் நீயும் மேலுக்கு அவர்களை நம்முடையவர்கள் என்று கூறி விடுவாய். என் விருப்பம்தான் உன்னுடைய விருப்பம். உன்னுடைய மனது, எனது எண்ணத்திற்கு விரோதமாக, இன்னொருவரை தனதாக்கிக் கொள்ளும் அளவு அத்தனை விசாலமானதா? சுதந்திரமானதா என்ன? கோபியின் அண்ணி இங்கே இருந்தவரை, நீ அவளை உன்னுடையவளாகவே நினைத்தாய். ஏன் என்றால் இதுதான் என் விருப்பமாக இருந்தது. ஆனால் உள்ளூர உன் மனது அவளை உன்னுடையவளாக்கிக் கொள்ளவில்லை. சரி! லக்னாவின் அம்மா! நீயே ஒரு ஆபத்தில் சிக்கிக் கொள்கிறாய் என்று வைத்துக் கொள். உன்னுடைய உதவிக்கு நான் வராவிடில்?——"

"சும்மா இருங்கள்! சாப்பிடுங்கள். உட்கார்ந்து அளைந்து கொண்டிராதீர்கள்."

மனமில்லாவிட்டாலும் மட்டுரு வயிறு நிரம்ப சாப்பிட்டான். இதில் மனைவியின் தவறு ஏதுமில்லை. அவள் எப்படி உருவாகி இருக்கிறாளோ, அப்படித்தான் நடந்து கொள்வாள் என்பது அவனுக்குத் தெரியும். சாப்பிடாமல் வீணாய் அவள் மனத்தை வருத் தப்படுத்துவானேன்?

வெளியே வெயிலில் பாயை விரித்து ஹுக்காவை நிரப்பிக் கொணர்ந்து வைத்தாள் அவள். மட்டுரு கொட— கொட—வென்று அதை உறிஞ்சியவாறே, யோசனை யிலாழ்ந்ததிருந்தவன் அப்படியே உறங்கிப் போனான். முந்திய இரவு முழுவதும் அவன் உறங்கவேயில்லை. விழித்துக் கொண்டுதானிருந்தான். ஹுக்காவை ஒருபுறம் வைத்துவிட்டு மல்லாந்து படுத்தவன் ஆழ்ந்த உறக்கத்தில் மூழ்கி விட்டான். மனைவி ஒரு போர்வை கொணர்ந்து

போர்த்தி விட்டாள்.

*   *   *

மாலையாகியது. எங்கோ, ஆபத்தில் சிக்கிய கிளியொன்று வேதனை மிகுந்த குரலில் டேர்... டேர்... எனக் கிறீச்சிட்டவாறு மட்டுரூவின் தலைக்குமேல் பறந்ததும் அவனது உறக்கம் கலைந்தது. ஏதோ கனவிலிருந்து விழித்தவன் போல் உரக்க, "பூஜன்! பூஜன்!" எனக் கூப்பிட்டான்.

பூஜன் ஓடோடி வந்தவன், "புயல் வரப் போகிறது! மாப்பிள்ளை! மேற்கு திசையில் வானம் இருண்டு கருத்து விட்டது" என்றான்.

கிளியின் வேதனை மிகுந்த கிறீச்சிடும் ஒலி இன்னமும் வானத்தில் ஒலித்துக் கொண்டிருந்தது. போர்வையை உதறிவிட்டு மட்டுரூ எழுந்து நின்றான். சுற்றும் முற்றும் பார்த்தவாறே "பூஜன்! என்னுடைய ஸ்ரீராமன் புயலில் சிக்கிக் கொண்டு விட்டாளடா! அவளுடைய கூக்குரல் காதில் விழுகிறதல்லவா? கேட்டாயா" என்றவனின் கால்கள் சிசவன் படித்துறையை நோக்கி விரைந்தன.

கதவருகில் நின்ற மனைவி கத்தினாள் "எங்கே போகிறீர்கள்?"

"இந்தப் புயலில் எங்கே போகிறீர்கள்?" என்றான் பூஜன். திரும்பிப் பார்த்த மட்டுரூ சொன்னான் "இதோ! போய் வந்து விடுவேன்."

புயல் வந்து விட்டது. கங்கைத்தாயின் பேரலைகள் ஆர்ப்பரித்தெழுந்தன. காற்று உய்... உய்... என்று பலமாக வீசியது. காடு துயரத்திலாழ்ந்தது. குடிசைகள், இப்பொழுது விழுவோமோ...... அப்பொழுது விழுவோமோ எனக் கலகலத்துப் போயின.

படித்துறையில் படகுக்காரனிடம் "படகை அவிழ்த்துக் கொள். சீக்கிரம்" என்றான் மட்டுரூ.

"இந்தப் புயலிலா! பயில்வான் அண்ணே! இதென்ன

சொல்லுகிறீர்கள்?'' என வியப்பால் விழிகள் விரியக் கேட்டான் படகுக்காரன்.

''பரவாயில்லை. என் தாயின் அலைகள்தானே! துடுப்பை எடு! எனக்கு அவசரம்! கொண்டா! என்னிடம் கொடு! நீ சும்மா உட்கார்ந்திரு போதும்!'' என்ற மட்டுரூ படகை அவிழ்த்து விட்டான். பார்த்துக் கொண்டிருக்கும் போதே நொடியில் சீறி எழும் அலைகளிடையே படகு மறைந்து போனது.

* * *

கோபியின் வீட்டு வாசற்கதவில் மட்டுரூவின் குண்டாந்தடி 'டொம்' என்று தட்டியபோது, புயல் கடந்து சென்று விட்டிருந்தது. வீட்டில் அமைதி நிலவியது. வழக்கம் போல் கிழவர் குரல் கொடுக்க வரவில்லை. மட்டுரூ தானே முன் சென்று ''வணக்கம் அய்யா!'' என்றான்.

அய்யா ஒன்றும் பேசவில்லை.

''கோபமா! அய்யா! புதிய மருமகளைப் பிடிக்கவில்லையா? அவள் உங்கள் மூத்த மருமகளைப் போலவே இருக்கிறாள் இல்லையா? நான் சொன்னேன் அல்லவா?''

''என் கண் முன்னாலிருந்து போய்விடு'' கிழவரின் எலும்புகள் சடசடத்தன.

''எப்படிப் போய்விட முடியும்? சம்பந்தம் செய்து கொண்டிருக்கிறேன்! இதென்ன விளையாட்டா?''

''என் பெயரை ஊர் சிரிக்கச் செய்து விட்டு எரிகிற புண்ணில் உப்பை அள்ளிப்போட வந்திருக்கிறாயா? ஊர் முழுவதும் தமுக்கடித்தாகி விட்டது. இன்னும் என்ன பாக்கி இருக்கிறது? சண்டாளா! என்னை முதலிலேயே ஏன் கொன்று போடவில்லை நீ?''

''இப்படியெல்லாம் ஏன் பேசுகிறீர்கள் அய்யா! என் ஆயுளையும் சேர்த்து நீங்கள் நீடுழி வாழுங்கள். அன்று ''அவள் நினைவு வந்தால் நெஞ்சு வெடித்து விடும் போல்

இருக்கிறது'' என்று நீங்கள்தானே சொன்னீர்கள்? பெற்றோருக்கு மகனை விட தாயாதிகளும், சொந்த பந்தங்களுமா பெரியது? அவர்களா நமக்கு சாப்பாடு போடுவார்கள்? ஹூம்? எனக்கென்ன தெரியும்? இதெல்லாம்! இப்பொழுது எல்லாம் நடந்து விட்டது. இனியும் துயரப்படக் கூடாது, ஆனால்– இங்கு.........''

''வாயை மூடு. நீங்களெல்லாம் பைத்தியக்காரர்கள் என்று எனக்கென்ன தெரியும்?''

மட்டுரூ சிரித்தான், ''பைத்தியக்காரர்கள், நீரும், உமது சமூகத்தினரும்தான் அய்யா! உங்களது குருட்டுத்தனமான மூடத் தனத்தையும், பைத்தியக்காரத் தனத்தையும் தகர்த்து ஒரு பசுவின் உயிரைக் காக்க முன் வருகிறவனைப் போய் நீங்களெல்லாம் பைத்தியம் என்கிறீர்கள்.''

''இதையெல்லாம் போய் அவனிடமே சொல். என் எதிரில் நிற்காதே.''

''எங்கே அவன்?''

''முன்கட்டில்!''.......

''அங்கேயா? ஏன் வீட்டில் இல்லையா?''

''நான் உயிருடன் இருக்கும் வரையில் அவன் வீட்டிற்குள் காலடி எடுத்து வைக்கக் கூடாது.''

''அவன் அங்கே ஏன் இருக்க வேண்டும்? அவனுக்கென்று ஒரு வீடு இருக்கிறது. நான் இப்பொழுதே.....''

''அப்பா, மகன் சண்டையில் நீ ஏன் தலையிடுகிறாய்? போக மாட்டாயா இங்கிருந்து?''

''இது அப்பா, பிள்ளையின் சண்டையல்ல. இது இந்த மொத்த சமூகத்துடனும், இலட்சக்கணக்கான விதவைகளுக்குமிடையே நடக்கும் போராட்டம். இத்துடன் என் தங்கையின் வாழ்க்கைப் பிரச்சினை இணைந்திருக்கிறது''.

''அவன் என் பிள்ளை''

''இல்லை. எந்தப் பிள்ளையை வீட்டிலிருந்து வெளியே போகச் சொல்லிவிட்டீரோ, அவன்.........''

''இதென்ன சத்தம்? அடே!'' என்று கத்திக் கொண்டே

கிழவி வந்தாள்.

"எரிகிற புண்ணில் வேலைப் பாய்ச்ச மட்டுரு வந்திருக்கிறான்" என்ற கிழவர் புரண்டு படுத்தார்.

விரல்களை நெரித்துக் கொண்டே "கிராமம் முழுவதும் தூ... தூ...... என்று துப்பியாகி விட்டது. இன்னமும் என்ன மிச்சம் மீதி இருக்கிறது?" என்றாள் கிழவி.

"அவர்களை அழைத்துப் போக வந்திருக்கிறேன்"

"நீ யார், அவர்களை அழைத்துச் செல்ல? பெற்றவர்கள் செத்துவிட்டார்களா?" என்று தன் முகத்தில் அறைந்தவாறே கேட்டாள் கிழவி.

"இன்றுதான் அவர்கள் செத்து விட்டார்கள் என்று தெரிந்தது. இல்லாவிடில் வீட்டிலிருந்து வெளியேற்றி வாசலில் போட்டிருக்க மாட்டீர்களே!"

"அப்படி யார் உன்னிடம் சொன்னது?" எனக் கிழவி அமைதியுடன் கேட்டாள்.

"அய்யா....."

"இவருடைய வார்த்தையை, நீ ஏன் காதில் வாங்கிக் கொண்டு திரிகிறாய்?" என்ற கிழவி, மட்டுருவின் கரத்தைப் பற்றி வீட்டிற்குள் அழைத்துச் சென்றவாறே தணிந்த குரலில் கிசுகிசுத்தாள். "ஈ இருப்பதைப் பார்த்துக் கொண்டே விழுங்கி விட முடியாதப்பா! என்ன செய்வது? கிராமத்தில் இருப்பவர்கள், தெருக்காரர்கள், ஊரார், உறவினர், அண்டை அயலார் எல்லோருமே சேற்றை வாரி வீசுகிறார்கள். என்ன செய்ய? கிழவர் அவர்களை வீட்டிற்கு வெளியே உள்ள கட்டில் இருக்கும்படி அனுப்பிவிட்டார். நான் எவ்வளவோ, பொறுத்துக் கொண்டேன். பொறுக்க முடியாமல் போனதும், நானும்கூட பழங்கதைகளை எடுத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டேன். இந்தக் கிராமத்தில்தான் வளர்ந்து பெரியவளாகி இருக்கிறேன். தலையும் நரைத்து விட்டது. இங்கே, இந்த ஊர் விஷயம் எதுவும் எனக்குத் தெரியாதது அல்ல. நான் பழங்கதைகளை எடுத்து வீசியதும் எல்லோரும் வாலைச் சுருட்டிக் கொண்டு ஓடிவிட்டார்கள்.

நீயே சொல்– மத்த நடத்தைகெட்டவள்களை விட என்

மருமகள் மோசமா என்ன? நாலு பேருக்குத் தெரிந்து கொட்டு முழக்கோடு திருமணம் செய்து கொண்டிருக்கிறான் என் மகன். அயோக்கியப் பசங்கள் போல, திருட்டுத்தனமாய் முகத்தில் கரியைப் பூசிக் கொண்டிருக்கிறானா என்ன? அவன் செய்தது தப்புத்தான். பைத்தியக்காரனாகி இக்காரியம் செய்து விட்டான். அதற்காக அவன் தலையை வெட்டி விடுவதா? என் பிள்ளையாயிற்றே அவன்! எத்தனையோ ஆயிரம் தவறுகளை மன்னித்து விட்டது போல், இன்னொன்றையும் மன்னித்தாகிவிட்டது. கை அழுகிப் போனால் வெட்டி எறிந்து விடுகிறோமா? கடவுளாகப் பார்த்து கழுத்தில் மாலையைப் போட்டபின் அதை அவிழ்த்து எறிவது எப்படி? நானே அவர்களை வீட்டிற்குள் அழைத்துக் கொண்டு வந்துவிட்டேனப்பா! இது அவர்களுடைய வீடு. யார் அவர்களை வெளியேற்ற முடியும்? வயதான கிழவர்களான நாங்கள் என்ன சாஸ்வதம்? இன்றைக்கிருக்கிறோம், நாளை எப்படியோ! வாழ வேண்டிய, அனுபவிக்க வேண்டிய நாட்கள் அவர்கள் முன்னே இருக்கிறது. எப்படி வேண்டுமோ, இருந்து விட்டுப் போகட்டும்...... நீ ஏதாவது சாப்பிடுகிறாயா? வெல்லப் பூரி செய்திருக்கிறேன்......''

மட்டுரூ– குனிந்து கிழவியின் பாதங்களைத் தொட்டுக் கண்ணில் ஒற்றிக் கொண்டான். தழுதழுக்கும் குரலில் ''அம்மா! நீ எத்தனை் நல்லவள். இந்த அய்யா வந்து......''

''கோபம் அவருக்கு. போகத் போகத் தணிந்து விடும். அப்பா........ பிள்ளையின் மீது எத்தனை நாள் கோபமாய் இருக்க முடியும்? சாப்பிடுகிறாயா? கை கால் கழுவிக் கொண்டு வா.''

மட்டுரூ கிழவியின் காதோடு கேட்டான் ''அவர்கள் எங்கே'' கிழவி சிரித்துக் கொண்டே அவன் காதில் ஏதோ கூறியதும் மட்டுரூவும் புன்முறுவல் பூத்தான்.

''சமையலறைக்கு வா'' என்றவாறே கிழவி முன்னே நடந்தாள். ''இந்தா சாப்பிடு''

"எப்படிச் சாப்பிடுவது? அவள் என் தங்கை அல்லவா? அவர்களுடையதை—— நல்லது! நான் வரட்டுமா? கங்கைத்தாய் என்னை அழைக்கிறாள். அங்கே எல்லோரும் கவலைப்பட்டுக் கொண்டிருப்பார்கள்."

அக்கணம் பக்கத்து அறையின் கதவு திறந்தது. மகிழ்ச்சியே உருவான இரு வடிவங்கள் அவ்வறையினின்று வெளிப்பட்டு மட்டுருவின் இரு பாதங்களையும் பற்றிக் கொண்டன.

"ஸ்ரீராமன்", பரவசமடைந்த மட்டுரு குரல் தழுதழுக்க, "கங்கைத்தாய் உன்னை என்றென்றும் சௌபாக்கியவதியாக வைக்கட்டும்" என்றான்.

முக்காடிட்டிருந்த ஸ்ரீராமன், சலை நிமிராமல் சொன்னாள்— "என் மானம் காக்க, கங்கைத்தாய்க்குப் புடவை அர்ப்பணிப்பாக நேர்ந்து கொண்டிருந்தேன். அண்ணியிடம் சொல்லி விடுங்கள். நேர்த்திக்கடனைச் செலுத்திவிடுவாள்."

Printed at Pressworks, Delhi